# பொருளடக்கம் 2

ரமலான் 1374—மே 1955.

## ஈத் மலர்



கதைகளில் வரும் பெயர்கள் யாவும்
கற்பனையே.

தனி இதழ் விலை 8 அணா
வெளி நாட்டில் 10 அணா

Ishack

மணிவிளக்கு காரியாலயம் தபால்பெட்டி, 248 மதராஸ்.1



டில்லி ஜும்ஆ மஸ்ஜிதில் பெருநாள் தொழுகை.

படம்: ஏ. எம். ஹுஸைன்



மனித வாழ்வு மலர வென்று
மறை வகுத்த புனித நோன்பை
அணி வகுத்துப் பறை முழக்கி
அவனி எங்கும் கூறுவோம்!

படங்கள் உதவியவர்: ஏ. எம். அலீ





திரு மிகுத்த பெருநா ளின்று
திகழு மின்ப குழலெ டுத்து
உருவ மற்ற ஒருவ னென்று
உலகு கேட்க ஊதுவோம்!

—கவிஞர் ஆபிதீன்



"மறந்து போச்சே! பெருநாள் தொழுகைக்கு எத்தனை தக்பீர்!"



# நன்றி செலுத்தும் நன்னாள்!

உலகெங்குமுள்ள முஸ்லிம்கள் உவந்து கொண்டாடும் திரு நாட்கள் இரண்டும், மனிதனின் உன்னதமான பண்புகளின் அடிப்படையில் எழுந்திருக்கின்றன.

தியாகத்தை நினைவுறுத்துகிறது ஒரு திருநாள்; ஈகையை வலியுறுத்துகிறது பிறிதொரு பெருநாள்; இவ்விரு நாட்களிலும் 'ஈதுல்பித்ர்' என்னும் ஈகைத் திருநாளை இன்று நாம் கொண்டாடுகிறோம்.

பல விதங்களிலும் பெருமை பெற்றது, இந்தப் பெருநாள்.

இஸ்லாம் விரும்பும் ஒப்பற்ற சமுதாயத்தை உருவாக்கும் பயிற்சிக் காலமாக விளங்கும் புனித ரமலானின் பூர்த்தி விழாவாக—அகிலத்திற்கோர் அருட்கொடையாக அருள்நெறி விளக்கும் திருமறை இறங்கிய ஆண்டு விழாவாக – ஒரு மாத காலம், 'உண்ணாமல் நோற்று, உளத்தே தீமையேதும் எண்ணாமல் வாழ்ந்த மக்களுக்குப் பெருமகிழ்வூட்டும் பெருநாளாக, இந் நன்னோன்புத் திருநாள் விளங்குகிறது.

இரவெல்லாம் விழித்திருந்து இறைவனை நினைந்துருகவும், பகலெல்லாம் பசித்திருந்து பரமனின் புகழ் பாடவும் வாய்ப்பளித்த புனித மாதத்தின் முடிவிலே கொண்டாடப்பெறும் இப் பெருநாள், 'கடினமான வாழ்வு நடத்திய அக்காலமும் கடந்ததே' என்ற கருத்துடன் அல்ல, 'அக்காலத்தில் கடமையைக் கருதி முடிக்க இயன்றதே' என்ற களிப்பிலேயே விளைந்திருக்கிறது.

மனிதனுக்கும் மறையோனுக்குமிடையே மட்டுமன்றி, மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே உள்ள தொடர்பையும் வலியுறுத்துகிறது, இஸ்லாம்.

ஆண்டவனுக்கும் அடியானுக்கும் உள்ள தொடர்பை தொழுகையும், நோன்பும் நிலைநிறுத்துகின்றன. மனிதர்களுக்கிடையே நிலவும் ஏற்றத் தாழ்வைச் சரிப்படுத்தி, உள்ளார்க்கும் இல்லார்க்கும் இடையே பிணக்கை நீக்கிப் பிணைப்பை ஏற்படுத்தும் பெருவழியாக "பித்ர்" (ஈகை) விளங்குகிறது.

சமுதாய சமத்துவத்தை, தொழுகையும் நோன்பும் நிலைநாட்ட, பொருளாதார சமத்துவத்தை 'ஜக்காத்' உண்டாக்குகிறது.

பெருநாளின் முதல் நிகழ்ச்சியாகிய தொழுகையில் கலந்துகொள்ளும் முன்னரே, அவரவருக்கும் கடமையான தொகையை உரியவர்களுக்குப் பகிர்ந் தளித்துவிடவேண்டு மென்பது மார்க்க விதி.

வாழ்க்கையிலே வளம் பெற்றிருப்போர், வறுமை வாய்ப்பட்டுள்ள தம் சோதரர்களுக்கு உதவுவதன்மூலம், இப் பெருநாளை உண்மையிலேயே மகிழ்ச்சிக்குரிய ஒரு திருநாளாக ஆக்குமாறு வற்புறுத்தி நினைவூட்டுகிறோம்.

ஈகைத் திருநாளாம் இன்று பொங்கிப் பூரிக்கும் மகிழ்ச்சி, எங்கும் பரவுக! என்றும் தங்குக!!

—ஈத் முபாரக்.

# பெருநாள் பேச்சு




இஸ்லாமியர் பெருநாள், இறைவனுக்கு நன்றிசெலுத்தும் தொழுகையுடன் துவங்குகிறது.

காலையில் கண்விழித்து, புது நீராடிப் புத்தாடை புனைந்து, மனங்களிக்க மணம்பூசி, வல்ல வனை வணங்குவதற்காகப் பள்ளியைநோக்கிப் பெரியோரும், சிறியோரும் அணியணியாகச் செல்லும் நிகழ்ச்சி, கண்டு மகிழவேண்டிய காட்சி.

இஸ்லாமியக் கடமைகளின் பயிற்சிப் பாசறையும், பல்கலைக் கழகமுமான, இறைவனின் இல்லமாம் பள்ளியிலே குழுமும் அனைவரும் அணி யணியாக நின்று, உலகினர்க் கோர்த் திருமறையை யருளிய ஒப்பற்றோனை — நல்லதோர் மார்க்க மருளிய வல்லவனை — புனித மாதம் ரமலானிலே, இனிதே கடமைகளை நிறைவேற்ற உதவிய ஏகனை — குனிந்து சிரம்பணிந்து இருமுறை வணங்குவார்கள்.

உள்ளத்தால் ஒன்றுபட்ட ஒப்பற்ற சமுதாயத்தைக் காண விரும்புவோர், அங்கே அதைக் கண்டு கொள்ளலாம்.

அங்கே அழகிருக்கும்; அமைதியிருக்கும்; ஆண்டவன் படைப்பில் யாவரும் சமமே என்ற நிலையிருக்கும்.

வண்ண உடைகள் கண்ணுக்குக் குளிர்ச்சிதர, மலரின் மணமோ நெஞ்சத்தை நிறைவிக்கும். வெற்றித் திருமறையின் வேத வசனங்கள் செவியிலே தேன் பாய்ச்சி, உள்ளத்திலே உவகையூட்டும். ஒன்றே இறைவன் என்பதை நன்றே உணர்ந்து, அந்த உணர்விலேயே ஒன்றுபட்ட சமுதாயம், ஆங்கு நிலவும் சூழ்நிலையில் அடையும் ஆத்ம திருப்தியே திருப்தி என்போம்.

இறைவனை சிரம்பணிந்து வணங்கியபின் ஓர் ஒலி கேட்கும். அந்த ஒலி, தொழுகையின் வழிகாட்டி, (இமாம்) பெருநாள் சொற்பொழிவாற்ற மேடையேறப் போகிறார் என்ற கட்டியமாக அமையும்.

பெருநாள் நிகழ்ச்சியிலே இந்த சொற்பொழிவு சிறப்புக்குரிய ஒன்றாகும். ஆங்கு குழுமியிருக்கும் அனைவரும் அமைதியுடனே அச் சொற்பொழிவை செவிமடுக்க வேண்டுமென்பது விதி. அந்த நேரத்தில் தனிப்பட்ட முறையில் தொழுவதுகூட விரும்பத்தகாத செய்கையாக (மக்ரூஹ்) மார்க்கத்தில் விதிக்கப்பட்டுள்ளது.

பெருநாளிலேயே சிகரம் வைத்தது போன்ற இந்நிகழ்ச்சியையே இம்மாத அட்டைப் படத்தில் நீங்கள் காணுகிறீர்கள்.

இடது கையிலே கோலையும், வலது கையிலே உயர் நூலையும் ஏந்தி, இறைவனின் உள்ளச்சத்துடனே உபதேசிக்கும் பெரியாரையும், அதனை ''நாங்கள் சென்னி தாழ்த்தி செவிமடுத்தோம், வழிநடப்போம்'' என்று கூறும் வகையில் அமைதியாக அமர்ந் திருக்கும் ஆண்டவனின் அடியார்களையும் அழகுபடத் தீட்டித் தந்திருக்கிறார் நம் ஓவியர் ஜனப் ஸய்யித் அஹ்மத் அவர்கள்.




ஜனப் ஸய்யித் அஹ்மத்
(அவரே வரைந்த படம்)

தாடியும்தலைப் பாகையும் உடைய தளர்ந்த வயதினரும் தலையிலே துண்டுமட்டும் கட்டிய கட்டிளங் காளையரான தொழிலாளத் தோழரும், மற்றோரும் தலைவனை வணங்குவதற்காகத் தலைவனில்லத்திலே தலைகுனிந்துவீற்றிருக்கும் தகைமைசால் இக் காட்சியை வண்ண எழில் சிந்த தீட்டித் தந்திருக்கும் அன்பர் அஹ்மத் அகில இந்தியப் புகழ் பெற்ற ஓவியரும், பிரபல ஆர்ட் டைரக்டரும் ஆவார்.

ஆற்றல் மிக இருந்தும் அடக்கமான வாழ்க்கையை விரும்பும் அஹ்மத், அருமையான பண்புகளும் ஆழ்ந்த மார்க்கப் பற்றும் உடையவர். ஏழைகளுக்கு இரங்கி, சுற்றத்தாருக்கு உதவி ஒழுக்கமிக்க வாழ்க்கை நடத்தும் இந்த ஓவியருடைய ஒத்துழைப்பு, 'மணிவிளக்கு'க்குத் தொடர்ந்து கிடைக்கும் என்பதை மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறோம்.

# நமக்குள்ளே!

பேரருளாளனும் பேரன்புடையோனுமாகிய தூய பெரிய நாயனின் பெருந் துணையால் இந்த ஈத் மலரை வாசகர்களுக்கு உவந்தளிக்கிறோம்.

சொல்லழகும், சுவையழகும் மிக்க கவிதைகள் இம்மலரிலே மணம் வீசுகின்றன. சொல்லின் மிடுக்கும், பொருளின் பெருக்கும் கொண்ட துறைவனின் "**பிறைச்செய்தி**" பன் முறை படித்து ரசிக்கத் தக்கது. கவிஞர் ஆபிதீனின் '**பாலருக்கே பெருநாள்**' சிறுவர்களின் கனவு நனவாவதை சித்திரிக்கிறது. இரா. இளந்திரையனின், "**ஆற்றங் கரையினிலே**" இயற்கை யழகைச் சுவை சொட்ட வடித்தெடுத்துத் தருகிறது.

"**விரதமே வியாதிக்கு மருந்து**" என்று ஆசிரியர் நிகழ்த்திய வானொலிப் பேச்சு, உள்ளத்துக்கும் உடலுக்கும் நோன்பு எவ்வாறு அருமருந்தாகிறது என்பதை விளக்குகிறது. '**ஜப்பானில் இஸ்லாம்**' என்னும் கட்டுரையைத் தொடர்ந்து '**சீனாவில் முஸ்லிம்கள்**' என்னும் தலைப்பிலே ஆராய்ந்தெழுதுகிறார் அன்பர் ஸி.எஸ். தாஜுத்தீன். இறையுணர்வை எள்ளி நகையாட முயன்ற கமாலின் துருக்கியிலே இன்று ஆத்மீக விழிப்பு–மதமலர்ச்சி – ஏற்பட்டிருக்கிறது. அதை விவரிக்கும் 'ஷிப்லீ'யின் கட்டுரை இவ்விதழிலே ஆரம்பமாகிறது. ஆண்டவன் மீதும், மனிதர்கள் மீதும் கொள்ளும் அன்புணர்வு எவ்வாறு ஈகைத் திருநாளன்று ஏற்றம் பெறுகிறதென்பதை நூ.பீ. ஷேகுஅப்துல் காதரின் '**தருமத் திருநாள்**' சுருக்கமாக விளக்குகிறது. 'எம்.ஏ,யின் '**கவிதைச் செல்வம்**' அமைதியான மனித சிந்தனை அழகிய உருப்பெற்று கவின் மெருகடைந்து வையத்தை வாழ்விக்கும் வண்ணக் காவியம் ஆவதை வர்ணிக்கிறது.

சிறுகதைச் செல்வர்களான, 'ரஷீத்' 'மகுதூம்' 'ஜே. எம்' ஏ.எம். அலீ, 'நூர்' ஆகியோரின் சீரிய சிறு கதைகள் மலருக்கு மணத்தையும், மனதுக்கு மகிழ்வையும் ஒருங்கே தருகின்றன. மனித வாழ்வை ஒவ்வொரு கோணத்திலிருந்தும் படம் பிடித்துக் காண்பிக்கும் இச் சிறு கதைகள் இலக்கிய வீட்டின் நன் மணிச்சுடர்களாகும்.

**மஹ்ஜபீன், பாக்குத்தீவினிலே, அறங்காத்த வீரர் அஹ்மதிப்னு ஹன்பல், சிந்தனைக்கு** ஆகிய பகுதிகளும் வழக்கம்போல் இடம் பெற்றிருக்கின்றன. பெருமதியூட்டும் சிறு சிறு துணுக்குகள் சித்தத்தில் நிலை நிற்பவை.

இத்தகைய ஓர் அழகு மலரை 120 பக்கங்களில் எட்டணா விலையில் வெளிக் கொண்டுவர சாதகமான சூழ்நிலையை ஏற்படுத்திய அனைவருக்கும் எம் நன்றி. மணிவிளக்கின் உறுதுணையாக அமைந்திருக்கும், விற்பனையாளர்களுக்கும், விளம்பரதாரர்களுக்கும், சந்தாதாரர்களுக்கும், நம் வாழ்த்துக்கள் உரித்தாகுக. **ஈத் முபாரக்!**




உழைக்காது உல்லாசமாக வாழ்பவன் ஆத்மீக உணர்வு பெறுவதில்லை. உடலைக் கட்டுப்படுத்தி, சிந்தனையை வளப்படுத்துபவன், மெய்யறிவு பெறுவான்; பேரின்பம் அடைவான் என்பதை இக்பாலின் பிரசித்திபெற்ற 'வைரமும் நிலக்கரியும்' என்ற கதை எடுத்துக் காண்பிக்கிறது.

சுரங்கத்திலே கிடந்த நிலக்கரித் துண்டு வைரத்திடம் சொல்லிற்று:

"அழிவில்லா அழகினைப் பெற்ற வைரமே! நாம் தோழர்கள்; நாம் ஒரே மூலப் பொருளிலிருந்து உருவாகிறோம். இருப்பினும் நான் பயனற்ற வாழ்வின் வேதனையை அனுபவிக்கிறேன். நீயோ பேரரசர்களின் மணி மகுடங்களிலே சூட்டப்படுகிறாய். நான் மண்ணையும்விட இழிவாக–குறைவாக மதிக்கப்படுகிறேன். ஆனால் கண்ணாடியின் இதயத்தையும் ஊடுருவிச் செல்கிறது உன் அழகு. என் கருமையோ உணவுப் பீங்கானுக்குத்தான் ஒளி தருகிறது. (உணவு சமைக்கத்தான் பயன்படுகிறது.) என் தாதுப் பொருள் எரித்துச் சாம்பலாக்கப்படுகிறது. (அந் நிலையில்) ஒவ்வொருவரும் தன் பாதத்தை என் தலைமீது தான் வைக்கின்றனர்......ஒருதடவை பிரகாசிக்கும் ஒளிக் கருவைக் கொண்ட புகைப்படலமே என் வாழ்வு. ஆனால் நீயோ தன்மையிலும் தோற்றத்திலும் விடிவெள்ளியைப் போன்றிருக்கின்றாய். உன் ஒவ்வொரு பக்கத்திலும் இருந்து ஒளிச் சுடர்கள் வீசுகின்றன. அரசனுடைய கண்ணின் ஒளியாக நீ அமைகிறாய். வீர வாளின் பிடியையும் நீ அணி செய்கிறாய்."

வைரம் கூறிற்று:

"நண்பனே! கருமண் கடினமாகும்பொழுது அது ஒரு நன்மணியின் மதிப்பை அடைகிறது. சலியாது பாடுபட்டு, அது கல்லைப் போன்று கடினமாகிறது. இம் முயற்சிதான் என் உருவுக்கு ஒளியைத் தந்தது. என் இதயத்தைப் பிரகாசத்தால் நிரப்பிற்று. ஆனால் நீ பண்படாமலே இருந்துவிட்டாய்! ஆகவே இழிவடைகிறாய். உன் உடல் மிருதுவாக இருப்பதால் நீ எரிக்கப்படுகிறாய். அச்சத்தை, கலக்கத்தை, கவலையை விட்டொழி. கல்லைப்போன்று கடினமாக இரு.—வைரமாக வாழ். கடுமையாக உழைத்துப் பாடுபட்டு, (வாழ்வின் போக்கை எவன்) பற்றிப் பிடிக்கின்றானோ அவனால் இரு உலகமும் ஒளியடைகின்றன."

டாக்டர்-ஸர். முஹம்மது
இக்பால் அவர்களின்
'அஸ்ராரே குதீ'
(இதயத்தின் இரகசியங்கள்)

தமிழாக்கம்:
எம். அப்துல் வஹ்ஹாப்.




"துறைவன்"

வான்ம ன்றில் இளம் பிறையொன்று-மெல்ல
வந்தொளி வீசுதேன் முன்னின்று!
தேன் ஒளி விரவும் விரைந்தது காண்-நல்ல
செய்தி என் நெஞ்சில் வரைந்தது காண்!

★

நோன்பொரு திங்கள் இருந்ததுவோ?-பிறை
நூல்போல் உடலும் மெலிந்ததுவோ?
வான்சுடர் மெல்லிய குரல் பேசும்-அதன்
வதனம் தூயநல் லருள்வீசும்!

★

விண்தோடும் பள்ளி மினரத்தின்-தனி
விருந்தென வந்து (இ)ச்சுடர் முத்தும்!
கண்தோடும் ஞாலம் களிப்பூட்டும்-உளக்
கசடுகள் மாய்த்தொரு விழிப்பூட்டும்.

★

பூவரசங்கிளை ஊஞ்சலிலே-நாளை
புதிய மகிழ்ச்சிகள் சாஞ்சாடும்!
யாவரும் பெருநாள் நகர்ந்திடுவார்-ஈது
யாவரும் வாழ்த்துரை பகர்ந்திடுவார்.

அன்பும் அன்பும் தழுவும்நாள்-மனத்(து)
அல்லலும் ஐயமும் நழுவும்நாள்.
மன்பதைக்கே ஒரு பெருநாள் காண்-பொருள்
மாட்சி நிறைந்ததோர் திருநாள் காண்!

★

விரைந்த பிறையின் ஒளிவேகம்-யான்
விழைந்த செய்தியின் தவரேகை!
சுரந்திடும் அன்பினில் ஓரமைதி-வான்
சொல்லும் செய்தியோ பேரமைதி.

★

"அன்றொரு நாளில் நபியண்ணல்-முழு
அன்பின் வடிவம் அருள்வண்ணம்.
ஒன்று தவநெறி வாழ்ந்தார்கள்-தவ
உத்தமர் செந்நெறி நினைந்தீரோ?

★

ஏழைக்கிரங்கும் ஏழை மகான்-மறை
இசைத்த திருமொழி வாழும்வகை.
கீழையர் நாடும் மேனுடும்-மொழி
கேட்டபொழுதில் உளம் நாடும்!

★

நேரில் இறைவன் மறைசொன்னான்-அதன்
நிர்மல ஒளியில் உறைமின்கள்.
பாரில் பற்பலர் சொல்லாலே-தவப்
பாதை தவிர்ந்து நீர்செல்லாதீர்.

★

அருளின் பாதை, அறப்பாதை-கோடும்
அச்சம் தவிர்ந்த திறப்பாதை.
மருள்செய் அறிவின் நடுக்கமெலாம்-நமர்
மாபெரும் பாதை ஒடுக்கிவிடும்.

ஊரோ டுண்டு மகிழுங்கள்-வியன்
உலகோ டுடுத்து மகிழுங்கள்
யாரோடும் தயைசொல்லுங்கள்-பிறர்
எவரோடும் சமம் நில்லுங்கள்.

★

கூடு நினைந்தே விழிநீட்டும்-புள்ளின்
குவிந்த நினைவே வழிகாட்டும்!
தேடுகடலின் நினைவன்றே-ஆறு
செல்லும் வழிக்குத் துணையென்றார்!

★

பண்ணின் இனிய நினைவன்றே-ஒரு
பாடல் தொடரும் தடமென்றார்!
மண்ணில் வாழத் துணை காண்பீர்-எனில்
மறையின் நினைவே துணை காண்பீர்."

★

பிறையொளி தீட்டிய செய்தி இது-நாம்
பேரிதும் மறப்புறும் செய்தி இது;
மறையொலி முழங்கும் செய்தி இது-நாம்
மறக்க நேரிடும் செய்தி இது!

★

நினைவு தரவோர் குறியிடுதல்-இந்த
நீணில மாந்தர் நெறிகண்டீர்.
நினைவுதர, விண் மோட்டினிலே-இறை
நின்மலப் பிறையைத் தீட்டினனோ?

★

உலகமெங்கும் நினைவு சோலும்-பிறை
உயர்ந்த நம்வாழ்வின் நினைவுசோலும்.
அலகில் நாயன் அருள்வேல்க-புகழ்
அனைத்தும் அவனுக்கே சேல்க.



# துருக்கியில் மதமலர்ச்சி

"ஷிப்லீ"

வானம் பொய்த்தது; பூமி வரண்டது. பதின் மூன்றும் நூற்றுண்டின் பாதி கழிந்த காலத்திலே, மத்திய ஆசியாமுழுமையும் மழையின்றி வாடிற்று. கால் நடைச் செல்வத்தைக் கொண்டே வாழ்வு நடத்திவந்த மக்கள், பசுமையான நிலப்பரப்பைத் தேடி கூட்டங் கூட்டமாக வெளியேறினர். அவ்வாறு வெளியேறிய கூட்டங்களிலே, ஸுலைமான்ஷா என்பாரின் தலைமையில் ஓநாய்க் கொடியின் கீழ் ஒன்றுபட்டு வெளியேறிய ஒரு கூட்டம், கோபி பாலைவனத்தின் எல்லையிலே குடியேறியது. ஸுலைமான்ஷாவுக்குப் பிறகு அவர் மைந்தன் யர்துக்ரல் தலைமையையேற்ற அக் குழுவினர், மேலும் பசுமையான நிலந்தேடி புராத் (யூப்ரடிஸ்) நதிக் கரை வழியே ஆசியா மைனர் பக்கம் அலைந்துகொண்டிருந்தபோதுதான் உலக சரித்திரத்திலே குறிப்பிடத்தக்க அந்த நிகழ்ச்சி நடந்தது.

ஆசியா மைனரில் உள்ள அங்கராவுக் கருகே, கைகுபாது என்ற ஸல்ஜூக்கிய சுல்தான், மங்கோலியருடன் தொடுத்திருந்த போரில், உயிருக்கு மன்றுடிக் கொண்டிருந்தார். எதிர்பாராமல் எங்கிருந்தோ வந்த சில குதிரை வீரர்கள், மங்கோலியரை முறியடித்து, ஸல்ஜூக்கிய சுல்தானுக்கு வெற்றிதேடித் தந்தனர். அவ்வாறு உதவியவர்கள், யாருக்கு உதவினேம் என்பதைக் கூட அறியார்கள். யர்துக்ரல் தலைமையில் வந்த அந்த 400 குதிரை வீரர்களும், போர் வீரர்களுக்குரிய இயற்கையான பரிவுணர்ச்சியுடன், வீழ்ச்சியடைய இருந்த கட்சியினருக்கு உதவினுர்களே யொழிய, வேறெந்த நோக்கமும் அவர்களுக்கு இருக்கவில்லை. ஆனுல் அந்தச் சாதாரண நிகழ்ச்சி உலகிலே உன்னதமான ஒரு சாம்ராஜ்யத்திற்கு இட்ட அஸ்திவாரம் என்பதை யர்துக்ரல் எப்படி அறிந்திருக்க முடியும்?

காலத்தால் செய்த உதவிக்கு நன்றியாக கைகுபாது, யர்துக்ரலுக்கு யஸ்கி ஷஹ்ர் என்ற மாவட்டத்தின் ஆட்சியுரிமையை அளித்தார். யர்துக்ரலின் மைந்தனை உதுமான் ஒரு சுதந்திர ஆட்சியையே நிறுவி விட்டார். வாள் வலிமையாலும் தோள் வலிமையாலும், உலகிலே ஒப்பற்ற ஒரு பேரரசை நிறுவி, ஏறத்தாழ ஏழு நூற்றுண்டுகள் எழிலுடன் ஆட்சி செய்த உதுமானியத் துருக்கியருடைய தோற்றத்தின் சுருக்கமான வரலாறு இதுதான்.

வாழ்விலே வளம்தேடி வரண்ட

நிலத்தை விட்டு அலைவாரியாக வெளியேறினர் ஸுலைமான்ஷா. முன்னூறு ஆண்டுகளுக்குப் பிறகு அவரது பரம்பரையில் பத்தாவ தாகப் பிறந்த ஸுலைமான், பரந்த ஒரு பேரசின் பாதுகாவல ராகப் பணியாற்றினர். ஏறத்தாழ 40,000 சதுரமைல் சுற்றளவு கொண்ட, உலகிலேயே மிகவும் செல்வம் கொழிக்கும் பகுதிகள் ஸுலைமானின் வசமாயின. எந்த ஒரு நகரம்' கிழக்கத்திய ரோம சாம்ராஜ்யத்தின் தலைநகராகத் திகழ்ந்து கிறிஸ்தவ உலகுக்கே பெருமையும் பெருமிதமும் தேடித் தந்துகொண்டிருந்ததோ அந்த நகரின்—கான்ஸ்டான்டி நோபிளின்—அதிபதியாக அவர் திகழ்ந்தார். பண்பாடும் பழமையான சரித்திரப் பெருமையும் கொண்ட கார்தேஜ், பாபிலோன், பல்மைரா போன்ற பெரு நகர்களும், புனித நகரங்களான மக்கா, மதீனா, பைத்துல் முகத்தஸ் (ஜெரூசலம்) முதலியவையும், அலக்ஸாந்திரியா, டமாஸ்கஸ், கெய்ரோ, பஸ்ரா, பக்தாது, பெல்கிராடு போன்ற பிரபலமான பட்டணங்களும் துருக்கி சுல்தானின் கட்டளைக்குட்பட்டிருந்தன. நைல், ஜோர்தான், யூப்ரடிஸ், டைக்ரீஸ், டன்யூப், ஒரோன்டஸ் ஆகிய நதிகள் உதுமானியரின் கொடி நிழலிலே தான் ஓடிக்கொண்டிருந்தன. அட்லாஸ், காகஸஸ் மலையடிவாரங்களைத் தொட்டிருந்த துருக்கியப் பேரரசின் செவ்விளம் பிறைக் கொடி, ஸீனாய், அராரத், கார்மல், டாரஸ், ஒலிம்பஸ், ஹேமஸ், கார்பாதியன் ஆகிய மலைகளுக்கும் உயரே பட்டொளி வீசிப் பறந்துகொண்டிருந்தது ஐரோப்பாவிலே ருமேலியா, பல்கேரியா, ஸெர்பியா, வலாச்சியா, அல்பேனியா, மால்டேவியா, ஹங்கேரி, கிரீஸ், முதலிய நாடுகளும் ஆசிய, ஆப்ரிக்கக் கண்டங்களில், அர்மீனியா, அரேபியா, ஸிரியா, கிர்



மான், எகிப்து, அல்ஜியர்ஸ், திரிப்போலி, டியூனிஸியா ஆகிய பகுதிகளும் ஸுலைமானின் ஆட்சிக் குட்பட்டிருந்தன.

மேலை நாட்டரசர்களெல்லாம் தங்களிடையே உள்ள சச்சரவுகளைத் தீர்க்க அவருடைய தீர்ப்பை நாடிநின்றனர். மத்திய தரைக் கடலிலே துருக்கிய கடற்படை செருக்குடன் உலவிற்று. ஆஸ்திரியாவின் தலைநகரான வியன்னா நகர வாயல்களை அவர் படையினர் முற்றுகையிட்டார்கள்.

சுல்தான் ஸுலைமானுக்குப் பிறகு 27 அரசர்கள் ஆண்டார்கள். பத்து தலைமுறைகளிலே பாரெங்கும் விரிந்து பரவிய உதுமானியர் பெருமை 27 தலைமுறைகளிலே இழிந்து ஒழிந்தது! இஸ்லாத்தின் ஆரம்ப கலீபாக்களைப் போன்ற வாழ்வு நடத்திவந்த வரையிலே உதுமானியர் உன்னதம் பெற்றிருந்தனர். மதத்தைப் புறக்கணித்து மனம்போன போக்கிலே நடக்க என்று அவர்கள் முற்பட்டனரோ அன்றே அவர்களுடைய வீழ்ச்சியும் துவங்கிவிட்டது.

வீரமும் சோகமும், கருணையும் கொடூரமும், பண்பும் படுபாதகச் செயல்களும், பெருமையும் சிறுமையும் பின்னி மின்னிடும் வரலாறு உதுமானியத் துருக்கியர்களுடையது.

தனிப்பட்ட முறையிலே துருக்கி சுல்தான்களின் வாழ்க்கை எப்படியிருந்த போதிலும், இஸ்லாமிய உலகின் ஆட்சி அதிபர்களாக நெடுங்காலம் அவர்கள் விளங்கினர்கள். உதுமானியர்கள் ஆண்ட பிரதேசங்கள், இஸ்லாமியப் பிரதேசங்களாகவே அறியப்பட்டன. துருக்கிப் போர்வீரர்கள் இஸ்லாத்தின் வீரர்களாகவும், துருக்கி மதத்தலைவர், இஸ்லாமிய மதத்தலைவர், (ஷெய்குல் இஸ்லாம்) எனவுமே அழைக்கப்பட்டனர். துருக்கியர் என்றாலே இஸ்லாமியர், என்ற அளவுக்கு ஒன்றோடு மற்றொன்றை பிரிக்க

முடியர் வகையில் பெருமிதத்துடன். அவர்கள் வாழ்ந்தார்கள். ஆனால் அவர்களுடைய வீழ்ச்சிக் காலமும் விரைவிலேயே வந்தது. இயற்கையாகவே வலுவிழந்து விட்டதாலும், பேராசை பிடித்த மேற்கத்திய வல்லரசுகளின் சூழ்ச்சிகளினாலும், கொஞ்சங் கொஞ்சமாகத் தன் நாடுகளை இழந்து வந்த துருக்கி, பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலே ரஷ்ய மன்னனால் ஐரோப்பாவின் நோயாளி என இழித்துரைக்கப்படும் நிலைக்குள்ளாயிற்று. இத்தகைய நிலையில் இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் இளந்துருக்கியர் புரட்சியும் அதன் பின்னர் முஸ்தபாகமாலின் சர்வாதிகார ஆட்சியும் ஏற்பட்டன. துருக்கியில் புத்துணர்ச்சி கொண்ட இஸ்லாமிய சமுதாயம் தோன்றி, உலகுக்கே வழிகாட்டும் என எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் நடந்த நிகழ்ச்சிகளோ அனைவரையும் திகைப்படையச்செய்துவிட்டன.

இளந்துருக்கியர் ஆட்சிகாலத்திலேயே, இஸ்லாமிய சட்டங்கள் புறக்கணிக்கப் படலாயின. 1916–ஆம் ஆண்டு சிவில் திருமண முறை புகுத்தப் பட்டது. பலதாரமணம். தலாக் முதலிய உரிமைகள் வரையறுக்கப்பட்டன. ஆண் பெண் கூட்டுக் கல்விமுறை அநுமதிக்கப்பட்டது. ஷரீஅத் சட்டமன்றங்கள் 1917–இல் அரசாங்க சட்டமந்திரியின் அதிகாரத்திற் குட்பட்டன. 1922–இல் துருக்கிகுடியரசாயிற்று. முஸ்தபா கமால் அதன் முதல் தலைவரானார். இஸ்லாமிய உலகின் தலைமையை ஏற்று, அவர் ஏற்றந் தருவார் எனப் பலர் எதிர்பார்த்த நேரத்திலே, அவரோ—கிலாபத் பதவியையே ரத்துச்செய்து விட்டார். மார்க்கக் கல்வி புகட்டிய மத்ரஸாக்களெல்லாம் (1923) மூடப்பட்டு மதச்சார்பற்ற கல்வி முறை புகுத்தப்பட்டது. தர்வேஷ் முறை தடைசெய்யப்பட்டது. தக்கியாக்கள் மூடப்பட்டன. பெண்கள் பொது விடங்களில் வர நேரும்போது தங்கள் கற்பையும் கண்ணியத்தையும் காப்பாற்றும் வகையிலே மேலுடைஅணிவதுசட்டவிரோத செயலாக்கப்பட்டு,–மேல் நாட்டு முறையில் கவுன் அணிய வற்புறுத்தப்பட்டனர். மானங்கெட்டமுறையில் பிற ஆடவருடன் நெருங்கி உறவாடவும் நடனமாடவும் நிர்ப்பந்திக்கப் பட்டனர்.

ஆண்கள் 'துருக்கித், தொப்பி அணிவது 'கிரிமினல், குற்றமாக்கப்பட்டது. அத்தகைய தொப்பிகளணிந்து வருவோரிடமிருந்து அவை பறிக்கப்பட்டுக் கிழிக்கப்பட்டன. மேல் நாட்டு ஹாட் அணிவது கட்டாயச் சட்டமாயிற்று, 'ஸலாம், கூறுவது தடுக்கப்பட்டது. ஷரீஅத் சட்டம் புறக்கணிக்கப்பட்டு, மேல் நாட்டுச் சட்டங்கள் புகுத்தப்பட்டன (1928)அரபி லிபி அகற்றப்பட்டு ரோமன்லிபி பின்பற்றப்பட்டது. இஸ்லாம் அரசாங்கமதம் அல்ல என்று அறிவிக்கப்பட்டது. (1929)—இல் ஆரம்பப் பள்ளிகளில் அரபியிலும், பார்ஸீயிலும் பாடம் போதிப்பது தடுக்கப் பட்டது.

தொழுகையை வழி நடத்தும் இமாம்கள், மார்க்க போதகர்களை தயார் செய்யும் பள்ளிகள் (1933)—இல் மூடப்பட்டன. இஸ்தம்பூல் பல்கலைக் கழகத்தில் மதக் கல்விப்பிரிவு ரத்து செய்யப்பட்டது. அரபி மொழியில் தொழுகைக்கு அழைப்பு விடுவது கூட—பாங்குசொல்லுவது— சட்டவிரோதமாக்கப் பட்டது. மதம் வீட்டிலே கடைபிடிக்கப் படலாமே தவிர நாட்டிலே பகிரங்கமாகப் பின்பற்றப்படக் கூடாது என அறிவிக்கப் பட்டது. சுருக்கமாகச் சொல்வதானால், இஸ்லாம் துருக்கியில் புறக்கணிக்கப் பட்டது. ஏன்? ஒடுக்கப்படவும் திட்டமிடப்பட்ட சதிசெய்யப்பட்டது என்று கூறலாம். (தொடரும்)

# பாலருக்கே பெருநாள்

... கவிஞர், ஆமிதீன் ....

விஞ்சும் வனிதையர்ப் புருவங்களைப்-போல
விண்ணில் இளம்பிறை வந்ததுமே
பிஞ்சு விரல்களைசுட்டிச்சிறுர்-காட்டிப்
பெரிதும் களித்து மகிழ்ந்திடுவர்.

அன்று இராப்பொழு தைப்பணியான்-புது
ஆடையை எண்ணிக் கடத்திடுவர்
கன்றைப் பசுவினம் காப்பதுபோல்-அதைக்
காண வளையவே வந்திடுவர்.

கோடி யுடுத்திய தோழர்களைக்-குத்தி
கும்மாளம் போட்டுக் குதித்திடுவர்
ஓடி யணைத்தவர் சண்டைகளை-விட்டு
ஒன்று பட்டே விளையாடிடுவர்.

காசு தரும்படி பெற்ரேரிடம்-கேட்டு
கண்ணைக் குளமாகப் பண்ணிடுவர்
பேசும் சிலைகளின் போக்கினிலே-சொக்கிப்
பெருமிதங் கொண்டுடன் தந்திடுவர்.

புத்தம் புதியநல் லாடைகளைத்-தெருப்
புழுதியில் போட்டுப் புரட்டிடுவர்
நித்தம் இம்மாதிரி இல்லையடா!-என்று
நெஞ்சு நெகிழ்ந்து அயர்ந்திடுவர்.





# சுட்ட மண்!

...ஆர். பி. மல்லாரி...

சக்கரத்தைச் சுழற்ருமல் நிறுத்தினுள் அவள்.

''மண்ணுங்கட்டி! சக்கரத்தைச் சுத்து புள்ளே!'' என்று தன் மகள் குலாபியைஅன்போடு கடிந்துகொண்டான் ஜலீல்!

குலாபி இவன் கோபத்துக்கு வகை வைக்கவே இல்லே. தன் வழக்கப்படி 'கலகல' வென நகைத்தாள்.

''மண்ணுங்கட்டியிலேதானே, நம் புளைப்பே இருக்கு...ஏன் உலகமே மண்ணை நம்பித்தானே நடக்குது?''

''ஆமாம்...நம்ம, நம்ம...மண்டைக்குள்ளேயும்...''

''களிமண்ணுவே இருக்கட்டுமே! களிமண் உலகத்துலே இல்லாமே இருந்தாத் தெரியும்.''

ஜலீலுக்கு இது பிடிக்கவில்லே; குலாபி, ஏதோ தான் புத்திசாலியைப்போல பேசிக்கொண்டே போனுள். அவன் பூந்தொட்டி செய்வதில் கவனம் உள்ளவன் போல, வேறுபக்கம் திரும்பிக் கொண்டான்.

''அடப் பாவிகளா!'' என்ற ஏசலைக் கேட்டெழுந்தான் ஜலீல். குலாபியும் பக்கத்திலிருந்தாள்.

''உங்கள் புகழ்ச்சிக்கு என் வயித்தெரிச்சலையா கொட்டிக்கணும்?''

''யார்இது பேசுறது?''என்ருன் ஜலீல்.

''பூந்தொட்டியா!'' என்ருள் குலாபி, ஒரே ஆச்சரியத்தில்!

''அருமையாய் இருப்பினும் அந்தச்சூளை,அரைக்காசுக்குதவாதென்று ஆடாய் பாம்பே!'' எங்கிருந்தோ, பாடியவாறு கேலியாகச் சிரிக்கும் சப்தம் கேட்டது, பிறகு பூந்தொட்டி பேசவே இல்லே!

∴ ∴ ∴

ஒரு கவிஞன் அந்தப் பூந்தொட்டியைத் தன் வீட்டுக்குக் கொண்டுபோய் மறுகாரியம் பார்த்தான்! ஒருபக்கம் புல்லாக்கு போட்ட மங்கையும், மற்றொரு பக்கம் நாக்கை நீட்டிய நாகமும் வரைந்திருந்தது அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. தனக்கு மிகவும் பிடித்தமான ஒரு மலர்ச்செடியை, அதில் வளர்ச் செய்தான். செடி மிகவும் செழிப்பாக வளர்ந்து, பூத்துக் குலுங்கியது. கவிஞன் மனம் மிகவும் பூரித்துவிட்டது.

**"உள்ளத்துவகை உருவம் பூண்டு**
**மெள்ள மெள்ள மேனி குலுங்க**
**கொள்ளை இன்பம்குலவும் பூக்கள்**
**குடிவைக்கும்தொட்டியும் நீ:"**

ஒரு கவிதையும் 'கட்டி' வைத்தான்.

பூந்தொட்டி பொறுத்துப் பொறுத்துப் பார்த்தது. அதனால் தன் கோபத்தைத் தாளமுடியவில்லை.

"சே, நிறுத்து! நீயும் ஒரு கவிஞன்! என்னிடமுள்ள குறை மாத்திரம். உன் கவிக் கண்களுக்குத் தெரியவில்லை?......"

கவிஞன் சிரித்தான்.

"ஆரம்பத்தில், உன் தலையில் மண்ணைவாரிப் போட்டதற்காகக் கோபித்துக்கொள்ளாதே! ... இப்போது உன் இதயத்தில் ஒரு மலர்ச்செடி பூத்துக் கொஞ்சுகிறதே..."

"ஹும்...கொஞ்சுகிறதா?..." அதெல்லாம் உங்கள் நாகரிக உலகத்தில்தான்...பாவி! நீங்கள் எல்லாம் சேர்ந்து என்னை ஒரு தொட்டியாக்கிவிட்டீர்களே ...... பச்சை மண்ணாக இருந்தால், என் இதயத்தில் ஒரு பூச்செடி வளராதா?...?

கவிஞன் பதிலொன்றும் சொல்லவில்லை. சொல்லத் தெரியவில்லை. பூந்தொட்டியே தொடர்ந்தது:

"அதோ! அந்த முற்றத்துக் களிமண்ணோடு நானும் அருவமாக இருந்தால், எவ்வளவு பயிர் பச்சைகளுக்கு என் நெஞ்சத்தில் இடங் கொடுப்பேன். இப்போது நான் ஒரு மலடி!..."

குயவன் செய்தது கொடுமை தான என்று கவிஞன் யோசிக்க ஆரம்பித்தான். எதிர்பாராத வகையில், ஒரே மேகமும் மழையுமாக இருட்டிக்கொண்டு வந்தது. பிசாசுக்காற்று மரங்களையும் செடிகளையும் வேரோடு பிடுங்கி எறிய முயற்சிசெய்தது. கவிஞன் பூந்தொட்டியிலுள்ள வேர்ச்செடியை ஒரு பத்திரமான இடத்தில் சேர்த்தான்.

புயல் ஓய்ந்தது. கவிஞன் எத்தனையோ நாட்களாக: அரும்பாடு பட்டு வளர்த்த பூஞ்செடிகள், கொடிகள் எல்லாம் சின்ன பின்னமாகித் தரையில் சிதறிக் கிடந்தன. வாழ்க்கையின் பொலிவை எடுத்துக்காட்டி சிரிக்கவேண்டிய புஷ்பங்கள் எல்லாம், கீழே விழுந்து குவிந்து கிடந்து வாழ்க்கையின் நலிவை விளம்பரப் படுத்தின.

கவிஞன் பூந்தொட்டியை வெளியே கொண்டுவந்தான். இந்த சூருவளியிலிருந்து தன்னை காப்பாற்றியதால் பூந்தொட்டி தனக்கு நன்றியளிக்கும் என நம்பினான். பூந்தொட்டியிலிருந்த செடியோ, வெளிச்சத்தில் பல நாட்களாக இல்லாத காரணத்தால், துவண்டு இருந்தது,

"இதுபோல சுயநலக்காரர்கள் கலையின் காவலராக இருக்கும் வரையில், கேவலம் மண்ணுக்குக்கூட உரிமைஇல்லை..."



கவிஞன் காதில் இது விழவில்லை. அந்தச் செடிக்கு தண்ணீர் தெளிக்க, அவன் பூவாளியை எடுக்க அப்பால் சென்றிருந்தான்.

பூந்தொட்டியின் இந்த வாக்கியத்துக்கு நிலமகள் கனிவுடன் பதிலளித்தாள்.

"பூந்தொட்டியே!... நீ என்ன சொல்லுகிறாய்?"

பூந்தொட்டிக்கு மிகவும் சந்தோஷம். தன்னைப் பெற்ற தாய் மண்ணே பேசுகிறாள்? பச்சை மண், சுட்ட மண்ணோடு ஒட்டாது என்று சொல்லுகிறார்களே. அதெல்லாம் மனுஷ உலகத்தில் தானே?

"மகளே! நீ வருந்தாதே யம்மா... புயலால் என் மக்கள் எல்லோரும் மாய்ந்தனர். ஆனால், நீ ஒருத்தியாவது, ஒரு செடியை யாவது காப்பாற்றினையே!..."

"இத்தச் செடியை நீயே கவனித்துப் பாரம்மா ...... ஊசி போட்டுப் பிறக்கும் குழந்தை போல, சோனியாகஇருக்கிறது!

"சிருஷ்டியை இழந்து விட்டாய் என்று நீ சொன்னாய் ... ஆனால்



எவ்வளவோபேரை நீ காக்கலாமே"

"நல்ல காத்தல் தன்மை... ஆனால் அளவுக்குமீறின சிசுக்களாய்விட்டாலோ...நான் சம்ஹாரமும் செய்துவிடுவேனே! அப்படி கட்டுண்டு இருக்கிறேனே என்று எண்ணும்போது..."

ஃ ஃ ஃ

"என்ன அதுக்குள்ளே தூக்கமா?" குலாபி சிரித்தாள்.

ஜலீல் பதில் சொல்லவில்லை. மனிதர்களும் இந்தப் பூந்தொட்டிகள் போலவா மாறிவருகிறார்கள்? ஆனால் இந்தப் பகட்டான பூந்தொட்டிகளுக்கு முன், வெறும் கபடமற்ற களிமண் எவ்வளவு தேவலை...

நமக்கு வேண்டிய எத்தகைய கலா அம்சமான உருவையும் நம் மிஷ்டம் போலச் சிருஷ்டிக்கலாமே!

சக்கரம் சுழன்று கொண்டே இருந்தது!

வாழ்க்கைச் சக்கரமும் இப்படிச் சுழலமுடியுமா?

சுட்ட மண்ணாக இருந்தால் ஒட்டாமல்தான் இருக்க வேண்டுமா?



## திருமண அழைப்பு

ராமநாதபுரம் ஜில்லா ஆயூர் இளையாங்குடி வாசியும் மலாயா மலாக்காவில் சுமார் அரை நூற்றூண்டாக வசித்து வருபவருமான துவான் ஹாஜி பிச்சை (ஜே.பி.) அவர்களின் நான்காவது மனைவியின் சிரேஷ்ட புதல்வனும் சிங்கை கரன்ஸி ஆபீஸில் வேலை செய்பவரும் எச்.பி.எஸ். அலி பிரதர்ஸ் பங்காளியுமான நெய்னு முஹம்மதுக்கும், கிள்ளான் டிஸ்டிரிக்ட் ஹாஸ்பிடல்என். எம். முஹம்மது ஹுசேன் அவர்களின் சிரேஷ்ட புதல்வி ஜெய்னப் பீவிக்கும் (5–6–55) ஷவ்வால் 14-ஆம் தேதி ஞாயிறு மாலை 6 மணிக்கு மேல் 8 மணிக்குள் மணமகள் இல்லத்தில் நடைபெறும், நிக்காஹு வைபவத்திற்கும் விருந்திற்கும் வருகை தந்து மணமக்களை ஆசீர்வதிக்கும்படி உற்றூர், உறவினர், நண்பர் யாவரையும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

*ஹாஜி. கெ.நா. பிச்சை. J.P*

மலாக்கா.

## திருமண நன்றியறிவிப்பு

★

17—4—55 ஞாயிறு வைகறையில் தஞ்சை ஜில்லா திருவிடச்சேரியில் நிகழ்ந்த எங்களது திருமணத்திற்கு நேரில் வருகை தந்து நிகழ்ச்சிகளைச் சிறப்பித்ததற்கும் அன்புடன் வழங்கிய வாழ்த்துரைகட்கும், அன்பளிப்புகட்கும், உள்நாடு வெளி நாடுகளிலுள்ள எம் எண்ணற்ற உற்றூர், உறவினர், நண்பர்கள், நலம் நாடுவோர் ஆகிய அனைவருக்கும் இதன் வாயிலாக எம் சார்பிலும் எமது உறவினர் சார்பிலும் எமது மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

| | |
|---|---|
| நூர் ஜஹான் | இ. பி. முஹம்மது இஸ்மாயீல் M. Com. |
| (Daughter of Mr. S. Abdul Majeed, Village Headman, Tiruvidacheri) | (Professor and Head of the Department Of Commerce, Jamal Mohamed College, Tiruchirapalli) |

# 中國穆斯林生活

# சீனாவில் முஸ்லிம்கள்

ஜி.எஸ். தாஜுத்தீன்

'கல்வி ஞானத்தைத் தேடுங்கள் — அது சீனாவிலிருப்பினும் சரியே' என்று நாயகத் திருமேனி நவின்றுள்ளார்கள். பல நூற்றூண்டுகளுக்கு முன்னே பல்லாயிரம் மைல்களைக் கடந்து, சீனாவுக்குச் சென்று ஏக தெய்வக்கொள்கையை இனிதே எடுத்துரைத்த அரபுகளின் வரலாற்றை அழகுற இயம்புகிறது இக்கட்டுரை.

ஐக்கிய நாடுகள் சபையில் புதிய சீனா சரியான பிரதிநிதித்துவம் பெருவிட்டாலும், சீனா இன்றைய வல்லரசுகளில் ஒன்ருகவே கருதப்பட்டு வருகின்றது. அஞ்சாரத்தில் மூழ்கியிருந்த சீன மக்கள் திருந்தி, உலகமே வியக்கும் வண்ணம் முன்னேறுவதற்குக் காரணமாக இருந்தவர் சன்யாட்ஸன் என்பவர். சீன மக்களை நல்வழிப்படுத்துவதற்கு அவர் ஒரு பெரிய புரட்சியே நடத்த வேண்டியிருந்தது. ஆனால் சன்யாட்ஸனுக்கு முன்பு, புரட்சி என்பது இல்லாமலேயே, சீனாவில் ஒரு திருந்திய சமூகம் ஏற்பட்டு விட்டது. அந்த சமூகமே சன்யாட்ஸன் மனதிலும் புரட்சி வித்தை ஊன்றியிருக்க வேண்டும். அதுவே சீன முஸ்லிம் சமூகம்.

சீனாவில் இஸ்லாம் பரவிய வரலாறு மிகவும் ருசிகரமானது.

முதன் முதலாக சீனாவில் குடியேறிய முஸ்லிம்கள் வியாபாரிகளாகவும், கலைஞர்களாகவும், படை வீரர்களாகவும் வந்து சேர்ந்தனர். சீனர்களுடைய மதக் கோட்பாடுகளுக்கு வேறுபட்ட கொள்கையினராக இருந்த போதிலும், சீனாவில் குடியேறிய முஸ்லிம்களுக்கு அங்கு நல்ல வரவேற்பு இருந்தது. அக்காலத்திய சீன மன்னர்கள் இறைவனின் திரு வேதமாகிய திருக்குர்ஆனைப் பரிசாக ஏற்றுக் கொண்டு அவ் வேதம் மொழி பெயர்க்கப்பட்டு பகிரங்கமாக அதன் கோட்பாடுகள் அனுஷ்டிக்கப்படவும் அனுமதி அளித்திருந்தார்கள். இவ்வாறு குடியேறிய முஸ்லிம்களைப் பற்றி சீன சரித்திராசிரியர்கள், "பிற நாடுகளிலிருந்து காண்டனுக்கு வந்த அந்நியர்கள் இறைவனைத் தொழுதனர்; அவர்களுடைய வணக்கஸ்தலங்களில் சிலையில்லை; பொம்மை இல்லை; வேறு எவ்விதமான உருவமும் இல்லை. அவர்கள் இங்கு பிரும்மாண்டமான வீடுகளைக் கட்டினர்; அவர்கள் மிகவும் செல்வந்தர்கள்; அவர்களுடைய தலைவருக்கு அவர்கள் பணிந்து நடந்தனர்" என்று குறிப்பிடுகின்றனர். சீனாவில் முஸ்லிம்கள் குடியேறிய காலம் டாங்க் பரம்பரையின் (கி. பி. 618–907) ஆரம்ப காலம் என்று கூறப்படுகிறது. முதன் முதலாக சீனாவில் குடியேறிய முஸ்லிம்கள் அரபிகள் என்று சரித்திரம்கூறுகிறது.

ஆரம்பகாலத்தில் சீனாவுக்கும் அரபு நாட்டுக்கும் தொடர்பு இருந்தது என்பதையும் சீன சரித்

திரம் கூறுகிறது. அராபியருடன் போர்புரிந்து மடிந்த பார்ஸி மன்னனின் மைந்தனுக்குப் பரிந்து கலீபா உதுமான் (றலி) அவர்களிடம் ஒரு தூதுவரை சீன மன்னர் அனுப்பி வைத்தார். அந்தத் தூதுவருக்கு கலீபா உதுமான் (றலி) அவர்களின் அரசவையில் சிறந்த வரவேற்புக் கிடைத்தது. அதுமட்டுமல்லாமல், அத் தூதுவர் திரும்பிச் செல்லும்போது கலீபா அவர்கள் ஒரு தளகர்த்தரை அவருடன் சீனு வரை சென்று வரும் படியாகப் பணித்தார்கள். இது கி. பி. 756-இல் ஹுவான் ஸுங்க் ஆட்சிகாலத்தில் நிகழ்ந்தது; அவருடைய அரசுரிமை பறிபோன போது, அவருக்குத் துணையாக அப்பாஸிய கலீபாவான அல் மன்ஸுர் ஒரு படையையே அனுப்பி வைத்தார். அரபியரின் துணை கிடைத்திருக்கா விட்டால் ஹுவான் ஸுங்க் மீண்டும் ஆட்சி பீடத்தில் ஏறியிருக்கவே முடியாது.

ஹுவான் ஸுங்க் மன்னருக்குத் துணைபுரியச் சென்ற அரபுப் படையினர் சீனுவிலேயே நிரந்தரமாகத் தங்கிவிட்டனர். இந்தச் சம்பவத்தை சீன முஸ்லிம்கள் சரித்திரத்தில் மிக முக்கியமானதொன்ருகக் கூறவேண்டும். இவ்வாறு அங்கே தங்கிவிட்ட முஸ்லிம்கள் சீனப் பெண்களை மண முடித்துக் கொண்டு, சீனர்களிடையே வாழ்ந்து வந்தது இஸ்லாம் பரவுவதற்கு ஏதுவாக இருந்தது.

பதின்மூன்ரும் நூற்ருண்டில் சீனுவின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் முஸ்லிம்கள் குடியேறுவதற்கு சீனுவின் மீது நடந்த மங்கோலியப் படையெடுப்பு ஒரு காரணமாகும். டாங்க் பரம்பரையின் ஆட்சியில் மட்டும் அரபு நாட்டிலிருந்து 37 தூதுவர்களுக்கு மேல் சீனுவுக்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. அபுல் அப்பாஸ், அபூ ஜஃபர், ஹாரூன் அர் ரஷீத் ஆகியோர் காலத்திலும் சீனுவுக்குத் தூதுவர்கள் சென்றிருக்கின்றனர்.

சீனுவில் செல்வந்தர்களாக வாழ்ந்த முஸ்லிம்கள் அத்தேசத்தின் ஒவ்வொரு துறையிலும் பங்கெடுத்துக் கொண்டனர். அரசியலிலும் அவர்கள் சிறந்து விளங்கினர். மங்கோலிய ஆட்சியின்போது முஸ்லிம்கள் உயர்ந்த உத்தியோகங்களை வகித்தனர். அப்துர் ரஹ்மான் என்பவர் கி. பி. 1244-இல் நிதி அமைச்சராகப் பதவிஏற்றுசிறந்த பணியாற்றியிருக்கிருர். அதே பதவியில் கி. பி. 1259-ல்ஸய்யித்



காண்டனில் உள்ள இந்த சமாதி நாயகம் (ஸல்) அவர்கள் தாய் மாமனுருடையது என நம்பப்பட்டு சீன முஸ்லிம்களால் ஜியாரத் செய்யப் படுகிறது.





சிக்கியாங் மாகாணத்தில் குச் என்ற இடத்தில் உள்ள ஒரு பள்ளிவாசலின் முகப்புத் தோற்றம்.

அஜ்ஜால் என்று வழங்கப்பட்ட உமர் ஷம்ஸுத்தீன் என்பவர் நியமிக்கப்பட்டார். சிறிது காலத்திற்குப் பிறகு ஸய்யித் அஜ்ஜால் என்பவரே யன்னுன் கவர்னராக நியமிக்கப்பட்டார். இவருடைய நீதி தவருத ஆட்சி சீனர்களையும், முஸ்லிம்களையும் ஒருங்கே கவர்ந்தது.

தங்களுடைய மதத்தைப் பரப்புவதற்காக சீனுவில் முஸ்லிம்கள் எவ்விதமான பிரச்சாரமும் செய்யவில்லை. பதிமூன்ரும் நூற்ருண்டுவரை மத மாற்றங்கள் அதிகமாக நிகழவில்லை. பதினைன்காம் நூற்ருண்டின் பிற் பகுதியில் முஸ்லிம்கள் சீனப் பெண்களுடன் கலப்பு மணம் செய்துகொண்டு அந்நாட்டுப் பழக்க வழக்கங்களையும் அனுஷ்டித்து சீனர்களோடு கலந்து விட்டனர். அக்காலத்தில் முஸ்லிம்களுக்கு மத உரிமைகள்பல அளிக்கப்பட்டாலும் மன்னருக்கு விசேஷ மரியாதைகள் செலுத்தும் விஷயத்தில் அவர்கள் மீது சிலகட்டுப்பாடுகளும் விதிக்கப்பட்டன. அப்போது கட்டப்பட்ட மஸ்ஜிதுகளுக்கு உயர்ந்த மனுராக்கள் இல்லை; அவைகளில் சீனக்கட்டிடக் கலையம்சமே பொருந்தி யிருந்தது.

அரசவைகளில் பணியாற்றிய முஸ்லிம் உயர் அதிகாரிகள் நீண்ட சடையும், மீசையும் உடையவர்களாக இருந்தனர். சீனக் கலாசாரம் எவ்வளவுதான் அவர்களுடைய வாழ்வில் புகுந்திருந்தாலும், முஸ்லிம்கள் தங்கள் உணவு விஷயத்திலும், மற்ற இஸ்லாமியச் சடங்குகளிலும் விட்டுக்கொடுக்கவில்லை. மதப்பற்று அவர்களிடையே மிகுந்திருந்தது என்று கூறலாம்.

கி. பி. 1770-ம் ஆண்டில் ஸுங்கேரியா மாகாணம் உள் நாட்டுக் கலகத்தால் நாசமடைந்த பிறகு, கியெங் லூங் என்ற மன்னரால்

அனுப்பபபட்ட பதினையிரம் சீனர்கள் இஸ்லாத்தின் ஜோதியின்பால் இழுக்கப்பட்டு, முஸ்லிம்களாக மாறிவிட்டனர். இஸ்லாம் அங்கு அவ்வளவு செல்வாக்குப் பெற்றிருந்தது.

கி. பி. 1790-ஆம் ஆண்டில் வாண்டுங்கில் பஞ்சம் ஏற்பட்டபோது முஸ்லிம் செல்வந்தர்கள் பதினையிரக் கணக்கான அனுதைக் குழந்தைகளை வாங்கி முஸ்லிம்களாக வளர்த்தனர். முஸ்லிம்களுக்கு சீன மன்னர்களின் ஆதரவு அதிகமாக இருந்தது என்பது குறித்து பதினேந்தாம் நூற்றுண்டின் இறுதியிலும், பதினூம் நூற்றுண்டின் ஆரம்பத்திலும் வாழ்ந்த ஸய்யித் அலீ அக்பர் என்ற வணிகர், "முஸ்லிம்கள் மீது வரி விதியாக்கப்படவில்லை. அவர்கள் மன்னர்களின் ஆதரவுக்குப் பாத்திரமானவர்களாக இருந்தனர். தலை நகரில் நான் பெரிய மஸ்ஜிதுகளும், மற்ற மாகாணங்களில் தொண்ணூறு மஸ்ஜிதுகளும் இருந்தன," என்று குறிப்பிடுகிறுர்.

ஐரோப்பாவிற்கு, காகிதம் உற்பத்திசெய்யும் விதத்தை, சீனர்களிடமிருந்து தெரிந்து கொண்டு சொல்லிக் கொடுத்தவர்கள் முஸ்லிம்கள்தாம். எங்கெங்கு கல்வியிருக்கிறதோ அங்கிருந்து அதை அறிந்து வந்து பிறருக்கும் அளிக்கும் இயல்புடையவர்கள் முஸ்லிம்கள். ரசாயன சாஸ்திரத்தை சீனவில் கற்றறிந்த முஸ்லிம்கள், மேற்கொண்டும் அதில் ஆராய்ச்சி செய்து ஐரோப்பாவிற்கு அளித்தார்கள். சிறந்த வைத்திய நிபுணரான அபூ அலீ ஸீனுவின் நூல்களில் காணப்படும் நாடி வைத்திய முறைகூட சீனர்களுடைய முறைக்கு





இடது பக்கம் :-பத்தாவது நூற்றுண்டில் எகிப்தில் அச்சிடப்பட்ட திருக்குர்ஆன் பிரதியின் படம், இது சீனுவிலிருந்து அறிமுகப்படுத்தப்பட்ட மர எழுத்துக்களினுல் அச்சிடப்பட்டது.

வலதுபககம்;-14-வது நூற்றுண்டில் அரபியிலிருந்து சீன பாஷையில் மொழி பெயர்க்கப்பட்ட வைத்திய அகராதியில் ஒரு பக்கம்.





இரு சீன முஸ்லிம்கள் திருக்குர்ஆனை ஓதிக் கொண்டிருக்கின்றனர்,

ஒத்திருக்கிறதாம். சீனர்கள் அபூ அலீ ஸீனுவிடம் கடன் வாங்கினர்களா; அல்லது அபூ அலீ ஸீனு சீனர்களிடம் கடன்வாங்கினுரா என்பது விவாதத் திற்குரியது. முஸ்லிம்கள் தங்களுடைய வான சாஸ்திர அறிவை சீனர்களுக்குப் புகட்டினர். சீனுவில் இஸ்லாமியக் காலண்டரும் பலகாலம் அமுலில் இருந்திருக்கிறது. கொள்ளை நோயை கடவுளின் கோபப் பார்வையாகக் கருதி கிறிஸ்துவர்கள் வாளாவிருக்கையில், சீனுவில் இப்னு அல் காத்திப் என்பவர் அந்த நோய் பற்றி ஆராய்ச்சி செய்து சிகிச்சை செய்து வெற்றி பெற்றுர். இன்றும் சீன நூல் நிலையங்களில் முஸ்லிம்களின் ஆராய்ச்சி நூல்கள் நிறைய இடம் பெற்றிருக்கின்றன.

1731-இல் முஸ்லிம்களுக்கு சீன மன்னர்களால் அளித்து வரப்பட்ட விசேஷ உரிமைகளையும் சலுகைகளையும் கண்டு மனம் பொறுக்காமல் சில உயர் அதிகாரிகளே யுங் சென் என்ற மன்னருக்கு முஸ்லிம்களின் மீது அபாண்டமான பழிகளைச் சுமத்தி அவர்கள் மீது தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கோரியிருந்தனர்.

மன்னர் தம் பதிலில் குறிப்பிடுகிறுர் :

"..............முஸ்லிம்களை மற்ற பிரஜைகளைக் கருதுவதுபோல் என் சொந்தக் குழந்தைகள் போலவே பாவிக்கிறேன். அவர்களுடைய கலை, மொழி, நாகரிகம், மதம் யாவும் வேறுதான் எனினும், அவைகளெல்லாம் அவர்கள்மீது குற்றம் சாட்டுவதற்குத் தகுந்த காரணங்களாக இல்லை. சீனுவில் எத்தனையோ விதமான மொழிகள் இல்லையா?

"அவர்களுடைய மத அனுஷ்டானங்களில் எவ்விதமான தலையீடும் கூடாது என்பது என் விருப்பம். அவர்களுடைய மதம் மனிதர்களுக்கு நேரிய வாழ்க்கையைப் போதிக்கிறது; சமூக, நாட்டுக் கடமைகளைக் கற்பிக்கிறது. முஸ்லிம்களிடையே சர்க்கார் கொள்கைகளை எதிர்க்கும் மனப்பான்மையில்லை. அவர்கள் சர்க்காரை கௌரவிக்கிறுர்கள். இதற்குமேல் என்ன தேவையிருக்கிறது? அவர்கள் மிக உயர்ந்த பதவிகள் வகித்துவருகின்றனர் என்பதே அவர்களுடைய நேர்மைக்கு ஒரு சான்றும். எல்லாப் பிரஜைகளுக்கும் ஒரே சட்டம்தான். நல்லது செய்வோர் பயன் பெறுவர்; கெடுதி செய்வோர் தண்டனையடைவர்."



பீக்கிங் மாகாணத்தில் டியென்சியோ என்ற இடத்தில் உள்ள மஸ்ஜிதின் அமைப்பில் சீனக் கட்டிடக்கலையும் மிளிர்வதைக் காணலாம்.

சீனுவில் இன்றைய முஸ்லிம் ஜனத் தொகை சுமார் 80 லட்சம். இவர்களுடைய வருங்காலம் எப்படி இருக்கும் என்பதை அறிய உலகமே ஆவலோடு இருக் கிறது.

கோடிக்கணக்கான சீன மக்களுக்கிடையே முஸ்லிம்கள் இத்தகைய உரிமைகளுடனும், சலுகைகளுடனும் சிறப்புடனும் வாழ்கிருர்கள் என்ருல் அந்தப்பெருமை சீனசர்க்காரை மட்டும் சார்ந்ததல்ல. சீனமக்களைக் கவர்ந்த முஸ்லிம்களும் அதற்குக் காரணம்தான். ★

ஆதாரங்கள் :
ஜனக குமாரி அஸ்கர் : Muslims in China, China Reconstructs, சீனத்து முஸ்லிம்கள், (டைக்கான் டைம்ஸ்)

## கவிஞரின் மதிப்பு

பாரசீகத்தில் ''அன்வரீ'' என்ெருரு கவிஞர் வாழ்ந்தார். அக்காலத்து சுல்தான் அலாவுத்தீன் என்பாரை அவதூறு செய்யும் வகையில். ஒரு கவிதை பரவி வந்தது. அதை இயற்றியவர் அன்வரீயே என்ெருரு புரளி கிளம்பவும் மன்னன் அவரைக் கைதுசெய்ய உத்திரவிட்டான். இதையறிந்த கவிஞர் மலிக்தூத்தீ என்னும் மலைநாட்டுத் தலைவன் ஒருவனிடம் அடைக்கலம் புகுந்தார்.

கவிஞரைத் தன்னிடம் ஒப்படைத்தால் பதிலாக ஓராயிரம் ஆடுகள் தருவதாக அரசன் கடிதமனுப்பினன். மலிக் தூத்தீ அன்வரீயிடம் அக்கடிதத்தைக் காட்டினர். கவிஞர் பதில் சொன்னர்: ''ஆயிரம் ஆடுகள் கொடுத்தாவது என்னை அடைய அரசர் ஆசைப்படுகிருர். நீரோ, நான் உமக்கு இலவசமாய்க் கிடைத்திருந்தும் என் பெருமையை உணரவில்லை போல் தோன்றுகிறதே !''

கவிஞரின் கூற்று மலிக்தூத்திக்கு மிகவும் பிடித்தது. உடனே அவரைப் பாதுகாப்பு நிறைந்த மலைப் பகுதி ஒன்றிற்கு அனுப்பி வசிக்கச் செய்தார்.

''ஜாமீ''

தந்தை ஒரு பாதையைக் காட்டினர்; தனயன் ஒரு பாதையிலே சென்ருர். ஆனல் இருவரும் சந்தித்தனர் ஓர் இடத்திலே.........

# இலட்சியப் பாதை

"ரஷீத்"

'' ஆமா என்னதாஞ் செய்யலாமுண்டு இருக்கிறீங்க........நோம்புப் பிறை போறந்து இன்னியோட பத்து நாள் ஆகிறது........பறக்கப் பறக்க பெருநாளும் வந்திடும்........போன வருஷம்தான் உங்க மகன் பணம் அனுப்புவாறன்னு நம்பிக்கிட்டு வீட்டைவிட்டு நகராமேயிருந்து பெருநாளும் அதுவுமா குழந்தைகளை கந்தையைக் கட்டி அழவச்சீங்க. இந்த வருஷமாவது நாலு ஊர்களுக்கு 'ஸபர்' போய் ஏதாவது கோண்டுவந்தால்தான் ஆச்சு. இல்லேன்னு நானும் பிள்ளைகளும் நாலுபேர் முகத்திலே விழிக்காமே, எங்க 'நஸீபை' நெனச்சுக்கிட்டு பெருநாளன்னிக்கு கதவை சாத்திக்கிட்டு படுத்திடத்தான் போறோம்..........''

''ஆமங்க பாவா எனக்கும் தம்பிக்கும் கிழியாத நல்ல துணி ஒண்ணுகூட இல்லீங்க. இந்தப் பெருநாளைக்கும் ஏமாத்திப்போட வேண்டாம்............''

வயது முதிர்ச்சி காரணமாக, தொட்டில்போல தொங்கல் விழுந்து, முடிச்சுகள் பல கண்ட கயிற்றுக் கட்டிலில் படுத்து ''மீமியாயெ ஸஆதத்'' தின் அரபுத் தமிழ் மொழி பெயர்ப்பில் ஆழ்ந்து, சூழ் நிலையை மறந்திருந்த ஆலிம் ஸாஹிப் சுல்தான் முஹம்மது லெப்பையின் சிந்தனை கலைந்தது. ஆம். தம் குடும்பத்தின் வறுமை நிலையையும், வரப்போகும் பெருநாளின் செலவினங்களையும் மறந்து, அக் கிரந்தத்தை ரசித்தவாறே ஒரு இலட்சிய உலகின் ஓவியத்தை தம் கற்பனைத் திரையிலே தீட்டிக்கொண்டிருந்தார். மனைவி ஆயிஷாவின் ஆத்திரம் தொனிக்கும் அங்கலாய்ப்பும், சிறுமி ரஹீமாவின் சோகம் பொங்கும் சொல்லம்பும் ஆலிம் ஸாஹிபுக்கு இந்தப் பிரத்தியட்ச வாழ்க்கையை தெளிவாக நினைவூட்டின. வயதும் நோன்பு பிடித்திருந்ததும் காரணமாக மிகவும் களைப்படைந்திருந்த ஆலிம் ஸாஹிப் கிதாபை மூடி வைத்துவிட்டு மெள்ள எழுந்து உட்கார்ந்தார்.

''போன வருஷமதான் உங்க

மகனை நம்பிக்கிட்டு இருந்து பெருநாளும் அதுவுமா........" என்று தன் மனைவியின் சொன்மாரிக்கிடையே நடமாடிய 'குத்தல்' சொற்கள் அவருடைய காதுகளில் இடைவிடாது ரீங்காரம் செய்தன. மகனைப் பற்றிய நினைவும், கடந்துபோன நிகழ்ச்சிகளும் அவர் சிந்தனைத் திரையிலே, ஒன்றன்பின் ஒன்றாக காட்சிதரத் துவங்கின.

ஃ ஃ ஃ

அப்துல் குத்தூஸுக்கு பதினான்கு வயது ஆனபோது அவனுடைய தாயார் இறைவனின் அழைப்பை ஏற்று விட்டார். அடுத்த மாதங்களிலேயே, தங்கள் உணவுப் பிரச்னையை சமாளிக்கும் நிமித்தம், ஆலிம் ஸாஹிப் ஆயிஷாவை மறுதாரமாக மணந்துகொள்ள முன்வந்தார். வயதாகிக் கொண்டுவரும் மகன் குத்தூஸை ஏதாவது வருவாய் துறையிலே புகுத்தினால் தான் தங்கள் குடும்பத்தின் கஷ்டங்கள் குறையும் என்று ஆயிஷா, ஆலிம் ஸாஹிபுக்கு அடிக்கடி எடுத்துக்காட்டி வரலானாள்.

ஆலிம் ஸாஹிப் தம் புதல்வன் மீது அளவற்ற அன்பை வைத்திருந்ததுடன், தம் வாழ்க்கையின் இலட்சியப்படி அவனை உருவாக்கிப் பார்த்து மகிழவேண்டுமென்ற நீங்காத ஆவலை தம் மனத்திலே வேரூன்ற வைத்திருந்தார்.

வேலூரிலே பெற்ற 'மௌலவி'ப் பட்டத்துடனும் அதற்குரிய தலைப்பாகை, ஷெர்வானியுடன் ஆஸாகோல் பிடித்து பள்ளிவாசல் மிம்பர்படி ஏறி குத்பா ஓதுகிற காட்சியைக் காண்பதும், பிற ஊர்களில் ஆங்காங்கே ஹிதீது மஜ்லிஸிகளில் தம் மகன் ஆற்றும் சொற்பெருக்கைப் பற்றி ஊர்மக்கள் புகழ்ந்து பேசுவதைக் காது குளிர கேட்டு மகிழ்வுற வேண்டுமென்பதும் தான் அவருடைய இலட்சியக் கற்பனை—தீராத ஆவல்!

தன் மகனிடமும், அவருடைய வருங்காலத்தையும் தன் இலட்சியத்தையும் பற்றி வலியுறுத்திப் போதித்து வந்தார். குத்தூஸ், உள்ளூரிலுள்ள இலவசப் பாடசாலையில் மூன்றும் படிவம்வரை படித்து, தன் கல்விக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்திருந்தான். காரணம், இல்லாமை!

இந்த நவ சமூகத்தின் மனப்பான்மையை குத்தூஸ் நாளுக்கு நாள் உணர்ந்து வந்ததன் பலனாக, தன் தந்தையின் 'ஆலிம்ஸா' தொழிலிலே அவனுக்கு நீங்காத வெறுப்பு வளர்ந்திருந்தது. 'ஆலிம்ஸா' என்பவரை தாழ்த்தப்பட்ட மனிதன்போல இந்த சமுதாயம் நடத்துகிறதென்ற எண்ணம் அவன் மனதில் வேரூன்றிக் கிடந்தது.

புத்துலக வாசியான குத்தூஸின் உளக்கூறை உணரும் சக்தி, பத்தாம் பசலியான அந்த ஆலிம் ஸாஹிபுக்கு இருக்கவில்லை. அம் மனோபாவத்தை அவர் உணர்ந்தாலும் கூட, வாழ்க்கையின் அநுபவம் பெறாத ஒரு சிறுவனுடைய கருத்தை மதித்து, தம்முடைய இலட்சியத்தை கைவிட்டு விடும் நோக்கம் உள்ளவராயுமில்லை. ஆகவே, பலவந்தத்தால் அப்துல் குத்தூஸ் 'பாக்கியாத்துஸ் ஸாலிஹாத்' மதரஸாவுக்குப் போக நேர்ந்தது.

வருடங்கள் ஓடின. கஷ்டத்திலும், வறுமையிலும் தம் இலட்சிய உருவம் கண்முன்பு காட்சி தரும் நாளை ஆலிம்ஸாஹிப் எதிர்நோக்கியபடியிருந்தார். துன்பம் தாங்காது முணு முணுக்கும் மனைவிக்கு, தாம் எதிர்பார்ப்பது இலட்சிய வாழ்வுமட்டுமல்ல; அதன் மூலம் நல்லதொரு செல்வச் செழிப்பும் தான், என்று தம் நோக்கத்தை விளக்கியபடியிருந்தார்.

சென்ற ஆண்டு ரமலான் மாதத்துக்கு பத்து நாட்கள் முன்புதான் அப்துல் குத்தூஸ் ஸாஹிப் 'மௌலவி' 'சனது' பெறும் பட்டமளிப்பு விழா நடை பெற்றது. இலட்சிய சித்தியடையும் அந்தக் கடைசி நாளன்று குத்தூஸுக்கு தம் தந்தையிடமிருந்து ஒரு கடிதம் கிடைத்தது; அதில் "இன்னும் சில தினங்களில் ரமலான் மாதம் வருவதால், உன் பட்டம் பெறும் விழா முடிந்து மதரஸா லீவு விட்டதும், அங்கிருந்தவாறே சில முக்கியமான ஊர்களுக்கு 'ஸபர்' புறப்பட்டுபோய் ஏதாவது கிடைப்பதைப் பெற்றுக்கொண்டு பெருநாள் சமயம் ஊர் வந்து சேரவும்................" என்று முடித்திருந்தார்.

அந்தக் கடிதத்துக்கு பதில் வருமென சில நாட்களை எதிர்பார்த்தார். பிறகு 27-ஆம் கிழமை அல்லது பெருநாளன்று மகனை நேரில் காணலாமென்றும், தன் மனைவி மக்கட்கு வேண்டிய துணிமணிகளும் காட்சிதரும் என்றும் எதிர்பார்த்தபடி ரமலான் நாட்களை கழித்து வந்தார். பெருநாள் காலையும் பிரகாசமாகப் பிறந்தது! மகன் வரவில்லை. கலங்கிய கண்களுடன் சோர்வடைந்து படுத்துக் கிடந்த மனைவியையும் பிள்ளைகளையும் காணச் சகியாமல் வீட்டைவிட்டு வெளியேறி ஈத்காப் பள்ளியை நோக்கி நடந்தார்.

கட்டிலில் உட்கார்ந்திருந்த ஆலிம் ஸாஹிபின் கற்பனைச் சுருளின் ஓட்டம் தடைபட்டு நின்றது. தன்னுணர்வு பெற்றார். மனைவியும், மகளும் கூறுவதை மறுக்க முடியாதவராக "அம்மா ரஹீமா! அந்தக் கொடியிலே கிடக்கும் இரண்டு ஜுப்பாவையும் அந்தக் கைலியையும் குளத்திலே கொண்டு போய் துவைத்துக் கொண்டு வாம்மா! நான் ராத்திரி வண்டிக்கு வெளியூர் போய்வருகிறேன்." என்றார்.

ஆலிம் ஸாஹிபின் "ஸபர் புரோகிராம்" துவங்கிவிட்டது. தஞ்சை மாவட்டத்தில் முதலில் தம் பிரயாணத்தை ஆரம்பித்தார். நாளுக்கு ஒரு ஊர், (சில சமயம் இரண்டு ஊர்கள்) என்று போய்க்கொண்டிருந்தது அவரின் பிரயாண நிகழ்ச்சி. அவர் மௌலவிப் பட்டம் பெற்றவர்

## 'மணி விளக்கு'

**மணிவிளக்கின் முதலாண்டு வால்யூம்**

**தயாராகிவிட்டது.**

**மார்ச் 1955 முடிய வெளியான 12 இதழ்களும்**

**900 பக்கங்களில்**

**கண்கவரும் வண்ண முகப்புகளோடு**

**அழகாக பைண்டு செய்யப்பட்டுள்ளது.**

ஒவ்வொரு குடும்பத்திலும் அறிவுக் கருவூலமாகத் திகழ வேண்டிய இக் கோவையில்,

நானிலம் போற்றும் நல்லிசைக் கவிஞர், அரசு துறந்த ஆத்ம ஞானி, அறிவுக் களஞ்சியம் அபூஹனீபா, சட்ட மேதை இமாம் ஷாபியீ, மாமறை விளக்கிய மாலிக் இமாம், குவலயம் போற்றிடும் குத்பு நாயகம், வேதி நூற் புலவர் ஜாபிர், மனிதருள் மாணிக்கம், அபூ அலீ ஸீனா, தியாகநாயகர் ஆகிய அழகிய தலைப்புகளில் சுவையான வாழ்க்கை வரலாறுகள் இடம் பெற்றுள்ளன.

சிரிக்கத் தெரிந்த பாரசீகர், இறையருள் இலக்கியம், இரு பெரும் மொழிகள், இலக்கிய இன்பம், உமறு பாராட்டிய உத்தமர், பூத்த செந்தாமரைக் காடு, நெற் கதிரும் நன் மனையும் ஆகிய இலக்கியக் கட்டுரைகள் இங்கே அணி செய்கின்றன.

விஞ்ஞானக் கட்டுரைகளாக, உலகம் முழுவதுக்கும் உணவு, தண்ணீர்த் தட்டு, பிளாஸ்டிக், டார்வின் பிரச்னை, பெட்ரோலின் விசித்திர வரலாறு ஆகியவை அறிவை வளர்க்கின்றன.

அறிவுக்கு அறைகூவல், வழிகாட்டும் வள்ளல் நபி, பஸ்மலா, பெருநாட்களில் ஒரு திருநாள், பிணி தீர்க்கும் பெரு மருந்து, அல் பாத்திஹா, பெருமானார் கொண்டாடிய பெருநாள், அரபாத்தில் அண்ணல் நபி, இம்மையில் மறுமை, அன்பும் அருளும், வள்ளல் நபியின் வழியிலே உண்மை மணக்கிறது, உடலும் உலகமும், தியாகத் திருநாள், சமய ஆராய்ச்சி போன்ற மத இயல் கட்டுரைகள் உள்ளத்துக்கு ஒளி வீசுபவை.

## பைண்டு வால்யூம்

அறிவுக்குகந்த சட்டம், எண்ணமும் வாழ்வும், பட்டுப் பாய், உணர்வு கொள்வீர், பொற்காசின் புதிர் போன்ற பொதுக் கட்டுரைகள் பொருள் நிறைந்தவை.

சிந்தனையின் சிறப்பு, தென் கிழக்கு ஆசியாவில் எனது அனுபவங்கள் ஆகிய கட்டுரைத் தொடர்களும் சிறப்புக்குரியவை.

தமிழ் நாட்டின் சிறுகதைச் செல்வர்களான 'மகனீ' டி. ஸி. துபாஷ், 'மகுதூம்', ஜமீல், ஸித்தீக், சீதக்காதி, 'ஜே. எம்.', ஐ. அப்துர் ரஷீத் எம். ஏ., ஆர். பி. எம். கனீ பி. ஏ, பி. எல்., என். எம். கான் முஹம்மது பி. ஏ. பி. எல்., எம். ஹனீபா ஆகியோரின் சுவைமிக்க சிறு கதைகள் இக் கோவைக்கு அணி செய்கின்றன.

உள்ளத்தை நெகிழ்விக்கும் உயரிய காதற் சித்திரமாம் மஹ்ஜபீன் இக் கோவைக்கே தனி மெருகு தருகிறது.

இதழுக்கு இதழ் இனிய கவிதைகள் மணம் வீசுகின்றன!

**நிறைமதியூட்டும் சிறு சிறு துணுக்குகள்**

**உணர்ச்சியும் நல்லறிவும் ஊட்டும் தலையங்கங்கள்!**

**சுவை மிகுந்த கேள்வி—பதில்கள்!**

ஆகியவைகள் என்றென்றும் வாசகர்களை மகிழ்விக்கும்.

இத்தகைய கருத்துக் கருவூலம், அறிவுப் பூங்கா இலக்கியத்தைப் போற்றும் ஒவ்வொருவரிடமும் இருக்கவேண்டியது அவசியம்.

**ஆறு ரூபாய் முன்பணம் அனுப்புவோருக்கு**

**ரிஜிஸ்டர் தபாலில்**

**ஒரு பைண்டு வால்யூம் அனுப்பப்படும்.**

**வெளி நாட்டில் இருப்போர் 10 ஷில்லிங்**

**போஸ்டல் ஆர்டர் அனுப்புக**

**இலங்கைக்கும் பர்மாவுக்கும் வி. பி. யில் அனுப்பப்படும்.**

குறைவான பிரதிகளே கைவசம் இருப்பதால்,

உடனடியாக உங்கள் தேவையைத் தெரியப்படுத்துங்கள்.

**யாருக்கும் கமிஷன் கிடையாது.**

**நிர்வாகி, 'மணிவிளக்கு'**

114 அங்கப்ப நாய்க்கன் தெரு.

மதராஸ்-1.

அல்ல. காண்போரைக் கவரக் கூடிய நடையுடைபாவனைகளும் அலங்காரங்களும் உள்ளவரு மல்ல. ஜனரஞ்சிதமான சொற் சித்திரங்களை தீட்டுகிறவரும் அல்ல. செல்வந்தர்களை மகிழ வைக்கக்கூடிய வாக்குச் சாதுர் யமும் இல்லாதவர். மிக எளிய தோற்றமும் ஏழ்மைக்கோலமும் பூண்டிருந்தவர்! 'ஜக்காத்' கொடுப்பவர்களின் தரநிர்ணயப்பட்டியலிலே இவரைப் போன்றவர்கட்கு நிர்ணயித்திருந்த தொகை நான்கணு முதல் எட்டணுவாகும். அந்த நியதிப்படி ஒவ்வொரு ஊர்களிலும் மூன்று நான்கு ரூபாய்கள் தான் பெற முடிந்தது. இந்த தொகையில், பஸ், ரயில் கட்டணத்துக்கும், சமயா சமயங்களில் காசு கொடுத்து சாப்பிட வேண்டிய கட்டங்களினுலும் வசூலில் பாதித்தொகை கரைந்து வந்தது. இரவு சாப்பாடும் 'ஸஹர்' சாப்பாடும் ஒரே கமாக எல்லா ஊர்களிலும் இலவசமாகவே கிடைத்தது. என்றாலும், அவருடைய தள்ளாமை காரணமாகவும், ஊரூராய் சுற்றியலைவதாலும் தினமும் விடாமல் நோன்பு பிடிக்க முடியவில்லை. அதனல் சில சமயங்களில் ஓட்டல்களுக்கும் போகவேண்டிய தேற்பட்டது.

"சரிதான், எல்லாம் போதும் போங்க பாவா!" என்று ஒவ்வொரு இடத்திலிருந்தும் நிர்ப்பந்தமாக வெளியேற்றப்படுவது அவரின் அன்றாட அநுபவமாயிருந்தது. தம் மதிப்புத் தெரியாமல் தம்மை இவ்வாறு அவமதிக்கிறார்களே யென்று மனம் குமுறிய ஆலிம் ஸாஹிப், தம் இஸ்லாமிய ஞானத்தையும், புலமையையும் வெளிப்படுத்தியாவது தம் அந்தஸ்தை உயர்த்தலாமென்று நினைத்து சில ஊர்களில் ஜும்ஆ தொழுகைக்குப் பிறகு 'ஹதீது' சொல்வதற்காக எழுந்து நின்ருர். திருமறையிலிருந்து இரண்டொரு வாக்கியங்களை ஓதி உபதேசத்தை துவங்குகிற போதே, நிர்ப்பந்தமாக வெளியேற்றப்படுகிறவர்களைப் போல பாதிக் கூட்டம் பள்ளியைவிட்டு வெளியேறிற்று. 'பெரியமனது' பண்ணி உட்கார்ந்திருந்த பக்த கோடிகளும் அவருடைய பேச்சு நடையில் சலிப்புற்று ஒருவர் பின் ஒருவராக நழுவிவிட்டனர். இதனலெல்லாம் மனம் சலித்துப்போன அவர் தன் ஊர்போகும் பாதையில் திருச்சியில் இறங்கினர்.

வழக்கப்படி திருச்சி சீமான்களின் இருப்பிடங்கட்குபோய் வந்தார். மற்ற ஊர்களில் ஏற்பட்ட அநுபவம்தான் இங்கும் ஏற்பட்டது. அன்று 'அவர் நோன்பு பிடிக்க வில்லை. முஸ்லிம்கள் அதிக நடமாட்டமில்லாத இடங்களாகப் பார்த்துக் கொண்டேபோய் தெருக்கோடியிலிருந்த ஒரு சிறிய ஓட்டலுக்குள் நுழைந்தார். நுழைவதற்கு முன்பே தன்னை யாராவது முஸ்லிம்கள் பார்க்கிறார்களா? என்று கவனித்துக் கொண்டேதான் நுழைந்தார் அங்கே நான்



கைந்து வாலிபர்கள் உட்கார்ந்து கையில் டீயை வைத்துக்கொண்டு சுவாரஸ்யமாக அரட்டையடித்துக்கொண்டிருந்தனர். ஆலிம் ஸாஹிப் ஒருமூலையில் அமர்ந்து தம் முன்னால் நிற்கும் ஆளிடம் தன் தேவையைக் கூறிக்கொண்டிருந்தார்.

அந்த இளைஞர்கள் குழுவிலிருந்து பெரிய சிரிப்பொலி கிளம்பியது; அதைத்தொடர்ந்து "டேய்! ஹமீது பார்த்தாயாடா! பள்ளி வாசலிலே இரவும் பகலும், ஜனங்களை நோன்பு வைக்கும்படி, பெரிய 'சூழ்' மாதிரி புலம்புகிறது; ஆனா தன்னைப் பொறுத்தவரையிலே....... மூன்று வேளையும் மூக்கைப் பிடிக்க தின்னு கொள்ளவேண்டியது. எப்படி ஊருக்கு உபதேசம் இந்தக்காலத்து அசரத்துகளெல்லாம் பணம் பறிப்பதற்காக போடுகிற வெளி வேஷமே தவிர உண்மையிலே அவர்களுக்கு மத பக்தி கிடையாதுடா! இன்னும் சொன்னால்..........." அந்த வாலிபத் தலைவனின் பேச்சு, 'சினிமா வசனப்' பாணியிலே மேலும் மேலும் ஓடிக்கொண்டிருந்தது. ரமலான் மாதத்தில் நல்ல வாலிப வயதாயிருந்தும் நோன்பு பிடிக்காமல், கையில் டீயை வைத்துக் கொண்டே, அந்த அசரத்தை வெளுத்து வாங்கிவிட்டார் அந்த சீர்த்திருத்தப் புலி! அப்போதுதான் ஆலிம் ஸாஹிபுக்கு அந்தக் குழுவினர், முஸ்லிம்கள் என்பது தெரிந்தது. மௌனமாக தலை குனிந்தபடி ஓட்டலை விட்டு வெளியேறினர்.

இரவே ஊர்புறப்படலாமென்று நினைத்தபடி பாலக்கரை பள்ளி வாசலில் படுத்துக்கொண்டிருந்தார்.

அப்போது அங்கிருந்த வேறு இரு ஆலிம்ஸாக்கள் பேசிக்கொண்டது இவரின் கவனத்தை கவர்ந்தது. கோவையிலே உள்ள ஒரு சீமான், இந்த மாதத்தில் ஒவ்வொருவருக்கும் கணிசமான தொகையும் கொடுத்து புது துணிமணிகளும் தருகிறார், என்பதுதான் பேச்சின் சாராம்சம். கையிலுள்ள தொகையைக் கணக்குப் பார்த்தார். தம் வருகையை எதிர்நோக்கி நிற்கும் மனைவியும் மகளும் அவர் மனக் கண்முன் தோன்றி மறைந்தனர். அன்றிரவே கோவையை நாடி பிரயாணம் செய்தார்.

கோவைச் சீமான் வீட்டு முன்பு சிறிய கும்பலொன்று காத்துக்கிடந்தது. காலை 10 மணிக்குமேல்தான் அச் சீமான் வெளியே வந்து காட்சி தருவாராம்! அக் கும்பலில் ஒருவராக ஆலிம் ஸாஹிபும் நின்றுகொண்டிருந்தார். அச் சீமானின் வரலாற்றை நன்கு அறிந்திருந்த ஒருவர், தம் சகா ஒருவருக்கு மிகப் பெருமிதத்தோடு அந்த வரலாற்றைக் கூறிக்கொண்டிருந்தார்.

மதுவிலக்கு வருவதற்கு முன்பு, அந்த ஜில்லாவில் பல இடங்களில் கஞ்சா, அபின், மற்றும் சீமை மதுவகைகள் விற்பனைக்கு லைசென்ஸ் பெற்ற பெரிய வர்த்தகரா யிருந்தாரென்றும், தற்போது ஒரு பாங்கியில் டைரெக்டராகவும், இரண்டு சினிமா தியேட்டர்களுக்கு உரிமையாள

ராக யிருப்பதாகவும் இன்னும் பல—

அதற்குமேல் அச் சீமானின் வரலாற்றைக் கேட்க ஆலிம் ஸாஹிபுக்கு பொறுமையில்லை. தன்னையும், தர்மவானையும் ஒரு கணம் எண்ணிப்பார்த்தார். தாங்க முடியாத ஆத்திர உணர்ச்சி அவரை உந்தித்தள்ள வேகமாக அவ்விடத்தை விட்டு வெளியேறி, தன் நிலை மறந்தவராக ரயில் நிலயம் நோக்கிப் பறந்து கொண்டிருந்தார்!

பாவா............!

உங்களைத்தான் பாவா, நில்லுங்கோ!........

தம் இதயத்தை தொடும் அபூர்வ சக்திவாய்ந்த, காது குளிரக் கேட்டு கேட்டு மகிழ்வடைந்த அந்தப் பாசப் பிணைப்பின் எதிரொலியா? இல்லை தம்மை பிடித்திருக்கும் மனப் பிரமையா? ஒன்றும் விளங்காது நடையை நிறுத்தி மெதுவாகத்திரும்பிப்பார்த்தார்!

ஆச்சரியம்! மகன் அப்துல் குத்தூஸ் தம்மை நோக்கி ஓடி வருவதைக் கண்டார். கடைத் தெருவின் இரைச்சல்; குறுக்கும் நெடுக்குமாக செல்கின்ற ஜனங்கள்; எல்லாமாகச் சேர்ந்து அக்காட்சி, கனவல்லவென்பதை உறுதிப்படுத்தின.

அன்பும், ஆவலும் ஆயிரம் குதிரைவேகத்தில் உந்தித்தள்ள, ஒருவரையொருர் நெருங்கி, ஒரு கணம் பேசாது நின்றனர். இருவரின் கண்களும் நீரைச் சொரியத் தயாராயின சூழ்நிலையை உணர்ந்து, மிகச்சக்தியோடு அடக்கிக் கொண்டனர்.

"அதோ! அதுதான் பாவா நம்ப ஜவுளிக்கடை! வாங்க போகலாம்." என்று கூறி மௌலவி குத்தூஸ் ஸாஹிப் முன்னால் நடக்க தந்தை அவரைப் பின் தொடர்ந்தார். வதனத்திலே அறிவுக்களை சொட்ட இளந்தாடி எழிலைவாரி வீச, நவீனமோஸ்தரில் நல்லவித ஆடைகள் அணிந்திருந்த மகனின் புறத்தோற்றத்தை அந்தக் குழப்பத்திலும் அவரால் உணர முடிந்தது. அந்தத் தோற்றம், மகனுடைய வாழ்க்கை நிலையைப் பற்றி சமிக்ஞை செய்தது தந்தைக்கு!




'மௌலானா ஸ்டோர்ஸ்' என்ற அழகிய சிறு ஜவுளிக் கடைக்குள் நுழைந்து, உள்பகுதியிலிருந்த தனியறைக்குள் இருவரும் நுழைந்தனர்.

பரஸ்பரம் ஒருவருக்கொருவர் ஆறுதல் கூறி, அழுகைக் கட்டத்தை முடித்த பின்பு, தனயன் தன் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறி முடித்தார்.

மதரஸாவிலிருந்து,பட்டம் பெற்று வெளியேறிய பிறகு "யாரிடமும் கைநீட்டி இரப்பதில்லை" யென்ற தன்வைராக்கியத்தை-தன் உதிரத்தில் ஊறிப் போன இலட்சியத்தைக் காப்பாற்றும்பொருட்டு வாழ்க்கையில் தான் கண்ட துன்பங்களையெல்லாம் கூறி, பிறகு கோவை வந்து ஒரு முஸ்லிம் சீமானின் ஜவுளிக்கடையில் சம்பளக்காரனைப் பதவி யேற்று, சில மாதங்கள் சென்ற பிறகு தன்மீது அன்புகொண்ட முதலாளி தன் மகனுடன் 'கஷ்ட கூட்டாளி, என்ற பதவி கொடுத்து, இந்தப் புதிய கடையை ஆரம்பித்துக் கொடுத்திருப்பதாகவும்,' இதில் நல்ல



வியாபாரம் நடக்கிறதென்றும் தான் கனவிலும் எதிர்பாராத வருவாய் தனக்குக் கிட்டுகிற தென்றும் கூறி முடித்தார்.

மகனுடைய செல்வ நிலையைக் கண்டு பூரிப்பால் சிறிது நேரம் மெய்மறந்திருந்தார் ஆலிம் ஸாஹிப். ஆனல் அப்பூரிப்பு நீடிக்கவில்லை. "இதுதானு உன் இலட்சியம்? இதற்காகத்தான் ஏழு வருடங்கள் படிக்கவைத் தாயா? உன் மகனின் வருங்கா லம் பற்றி நீ கட்டிய இலட் சியக் கோட்டை இதுதானு?" என்று அவருடைய உள்ளத்தி லிருந்து ஒரு ஆவேச உணர்வு அவரைத் தூக்கி வதைக்கத் துவங்கியது!

ஏமாற்றத்தோடு மகனைப் பார்த்து, "அப்பா, சிறு வயது முதல் உனக்கு நான் செய்து வந்த உபதேசங்க ளெல்லாம் என்ன வாயிற்று? உன் எதிர் காலம் பற்றி நான் வைத்திருந்த நம்பிக்கைகளெல்லாம் வீண் பகற் கனவுதானு?"

தந்தையை மேற்கொண்டு பேசவிடாது தடுத்த குத்தூஸ் "பாவா உங்கள் இலட்சியம் ஒருபோதும் வீண்போகவில்லை. நான் என் கல்வியையும், கடமை யையும் துளிகூட மறக்கவோ வெறுக்கவோயில்லை. நான் இன் றைக்கும் ஒரு மௌலவிதான்! ஆனல் யாரிடமும் யாசிக்காது சுயமே உழைத்துண்ணும் கண் ணிய முள்ள ஒரு மௌலவி; இப்போதும் இவ்வூரின் பெரிய பள்ளியில் பிரதி வாரமும் வெள்ளிக்கிழமைகளில் இஸ்லா மியச் சொற்பொழிவுகள் நடத் தித்தான் வருகிறேன்" என்றார். ஆலிம் ஸாஹிப் ஆனந்தத்தால் தம் மகனைக் கட்டித் தழுவினர்.

ஃ ஃ ஃ

இன்பத் திருநாளாம் பெரு நாள் பிறந்தது! வாழ் நாளெல் லாம் வறுமையில் வாடும்வறிஞர் களின் வதனமெல்லாம் கூட மகிழ்ச்சியினல் ஒளி வீசிற்று.

ஆலிம் ஸாஹிபின் வீட்டில் ஆனந்த வெள்ளம் கரை புரண் டது. சர, சர வென்ற ஒலியு டன் புதுமணம் வீசும் புத்தா டைகள் புனைந்து ஆலிம் ஸாஹி பின் குழந்தைகள் தெருப்பிள்ளை களுடன் புள்ளிமான் போல துள்ளிக் குதித்துக் கொண்டிருந் தனர்.

தன் விருப்பம்போல் புலவும், பலகாரமும் தயாரிக்கையிலே தேவையான பணத்துடனும், தான் கனவிலும் நினைத்திராத கோயமுத்தூர் சேலையுடனும் நம் முன்பு தோன்றிய ஆயிஷாவின் முகம் புன்னகையால் பொலி வுற்று விளங்கியது.

"ஆமாம் உங்கள் மகனை பெரு நாளைக்கு அழைத்து வராமல் கிடைத்ததை சுருட்டிக்கொண்டு நீங்கள் மட்டும் வந்துவிட்டீர் களாக்கும்!" என்று தாய்மை யின் கரிசனம் ஒலிக்க ஆலிம் ஸாஹிபைக் கேட்டாள் ஆயிஷா.

"அதெல்லாம் இல்லை. பெரு நாளன்று கோவை ஈத்காப் பள் ளியிலே 'குத்பா' பிரசங்கம் செய்யவேண்டுமென்று பலபேர் வற்புறுத்தி நிறுத்திக்கொண்டார் கள். நாளை மறுதினம் வந்து சேருவான்" என்றார் ஆலிம் ஸாஹிப். அந்தக் குரலிலே ஒரு பெருமிதம் தொனித்தது.! ★

# விரதமே வியாதிக்கு மருந்து

'இது புதுமையாக இல்லையா? விரதமாவது வியாதிக்கு மருந்தா வதாவது?' இதெல்லாம் மாயா வாதம் என்று நம் பகுத்தறிவு பேசலாம்.

ஏனென்றல் பொதுவே மனி தனின் மனம், ஒரு வேளை உணவை ஒழி என்று சொன்ன லும் 'இடும்பை கூர் அவன் வயிறு' அதை ஒப்புவதில்லை. உணவை உட்கொண்டால், பயங்கரமான ஒரு வியாதி தாக் கும் என்ற அச்சமிருந்தால் ஒழிய, அதை இழக்க எந்த மனிதனும் ஒப்புவதில்லை. பெற்றரும் உற்ற ரும் அதிக உணவுண்ண ஊக்குகி ருர்களேயன்றி உண்டியைச்சுருக் குமாறு உபதேசிப்பார் யாரு மில்லை. இது வன்றி, நாம் உயிர் வாழ வேண்டுமாயின் வேளை தவருமல் உணவுண்ண வேண் டும். இரண்டொரு வேளை உண் ணமலிருந்தோமாயின் அதுவே மரணத்திற்கு முதற்படியா யமைந்துவிடும் என்றெல்லாம் பலர் எண்ணுகிருர்கள். இத்த கைய நிலையிலே விரதம் வியா திக்கு மருந்து என்றல் விசித்திர மாகத்தான் படும். ஆனல் பல பெரிய உண்மை கள் சாதாரண நோக்கிற்குவிசித் திரமாகப்படுவது உலக இயல்பு தானே.

நம் இயற்கைத் தன்மையில் மாற் றம் நிகழ்ந்து, அந்த மாற்றம் நமக்கு வேதனை தரும்போது, உடல், நோய்வாய்ப்பட்டிருப்ப தாகக் கூறுகிறேம். அவ்வாறே உள்ளம் வேதனையுறும்போது உளநோய் பீடித்திருப்பதாகச் சொல்கிறேம். உடலை வாட்டு வது நோய். உள்ளத்தை வாட்டு வது உளநோய். உடலையும், உள்ளத்தையும் ஒருங்கே வாட்டும் நோயொன்றுண்டு. அதைத்தான் பவ நோய் என்று சொல்லுவார்கள். இத்தகைய உடல் நோய்க்கும், உளநோய்க் கும், பவ நோய்க்கும் அருமருந் தாக விரதம் விளங்குகிறது. அது எப்படி என்பதை ஆராய்வோம்.

விரதம் எனப்படும் நோன்பு நோற்பது என்றல்—பலர் எண்ணு வதுபோல பட்டினி கிடப்பதல்ல. நோன்பு நோற்கிறேம் என்ற எண்ணத்தின் அடிப்படையில், ஒரு குறிப்பிட்ட கால வரையறை யில் புசிக்காதும் பருகாதும், இவ்வுலக இன்பங்கள் அனுப விக்காமலும் இருப்பதற்கே நோன்பு என்று கூறப்படும்.

இவ்வாறு நோன்பு நோற்பது உடலுக்கு பலவீனத்தைத் தருகி றது என்று பொதுவே ஒரு கருத்து நிலவுகிறது. ஆனல் நோன்பின்மூலம் பலவீனம் ஏற் படுவதற்குப் பதிலாக அதிக பல மும் சக்தியும் பிறக்கின்றன என்பதை அனுப வம் நிரூபிக்கிறது. ஏனெனில் நமது உடலில் ஆங் காங்கே தேங்கி நிற்கக் கூடிய

"விரதமே வியாதிக்கு மருந்து" என்ற தலைப்பில மணி விளக்கு ஆசிரியர் ஆ. கா. அ. அப்துஸ் ஸமது அவர்கள் அகில இந்திய ரேடியோ மதராஸ் நிலையத் திலிருந்து22-4-1955 அன்று ஆற்றிய சொற்பொழிவே நிலையத்தாரின் அனுமதி யுடன் இங்கு பிரசுரிக்கப் படுகிறது.

உணவுச் சத்துக்கள் உடலுக்குத் தேவைப் படும் போது கரைந்து, வேண்டிய நலன் பயக்கின்றன. இத்தகைய சத்துக்களை உரிய முறையில் பயன்படுத்தாவிட்டால் அவற்றில் பல கிருமிகள் உற்பத்தியாகி உயிருக்கே ஊறு விளைவித்துவிடும் என மருத்துவ அறிஞர்கள் கூறுகிருர்கள்.

ஒவ்வொரு மனிதனின் உடலிலும் இத்தகைய உணவுச் சத்துக்கள்-அவன் எவ்வளவு "நோஞ்சாஞக" இருந்தாலுங்கூட-இருந்தே வருகின்றன. ஒரு மனிதனின் உடம்பில் உள்ள சேமிப்பு சத்துக்கள்-கொழுப்பு என்று கூட குறிப்பிடலாம் — எதுவரையிலே உடலுக்கு உர மூட்டி வருகின்றனவோ அது வரையிலே அவன் பட்டினி கிடக்கிருன் என்று சொல்லமுடியாது. இவ்வாறு ஒவ்வொரு மனிதனின் உடலிலும் உள்ள சேமிப்பு சக்திகள் மூன்று வாரங்களிலிருந்து மூன்று மாதங்கள் வரையிலே, ஒரு மனிதனைப் போஷிக்கப் போதுமானவை என உடல் நூல் அறிஞர்கள் உரைக்கிருர்கள்.

'அளவுக்கு மிஞ்சினல் அமிர்தமும் நஞ்சு' என்ருெரு பழமொழி உண்டல்லவா? உணவைப் பொறுத்தவரை இந்தப் பழமொழி முற்றும் பொருந்தும். ஏனெனில் பெரும்பாலான வியாதிகளின் காரணத்தை ஆராயும் போது அது உணவின் கேட்டிஞலேயே ஏற்பட்டிருப்பதாக அறிகிருேம். அதிலும் அளவுக்கு மிஞ்சி உண்பதே பல கொடிய விளைவுகளுக்குக் காரணமாயமைகின்றது, எனவேதான் "மீதுண் விரும்பேல்," என நம் ஒளவைப் பாட்டியும் சொல்லிச் சென்ருள் போலும்! அமித உணவால் நேரும் கேட்டினைப் போக்குவதற்கு நோன்பு நோற்பதை விடச் சிறந்த பரிகாரம் வேருென்றில்லை. பெர்னுர் மேக் 'பேடன்' என்ற அறிஞர் இதை விளக்கி (Fasting For Health) ஆரோக்கியத்திற்காக நோன்பு என்ற அரிய நூலொன்றை எழுதியுள்ளார். ஒரு 'வியாதியாளனை நீங்கள் பட்டினி கிடக்கச் செய்தால் உண்மையில் அந்த வியாதியாளனையல்ல, அந்த வியாதியையே நீங்கள் பட்டினி போடுகிறீர்கள், என்று சொல்கிருர் டாக்டர் திவி. 'லங்கணம் பரம ஒளஷதம், என்ற பழமொழி பல ஆண்டுகளாகவே இந்த உண்மை நம் நாட்டில் உணரப்பட்டிருக்கிறது என்பதை உணர்த்துகிறது. ஒன்பது நூற்றுண்டுகளுக்கு முன் புகழ் மேவிய மருத்துவ மேதையாக விளங்கிய அபூ அலிஸீனு தன்னிடம் வரும் நோயாளிகளை யெல்லாம் மூன்று வாரகாலம் நோன்பு நோற்கும்படி செய்து வந்தாராம். பல கொடிய நோய்களுக்கு நோன்பே நிச்சயமான பரிகாரம் என அவர் கருதிவந்தார்.

நோன்பு நோற்பதால் நம் உடலின் ஒவ்வொரு அங்கமும் நலம் பெறுவதை இன்றைய மருத்துவ அறிஞர்கள் எண்பித்துக் காட்டுகிருர்கள்.

நோன்பினல் பயன் பெறும் உறுப்புக்களில் முதன்மையானதாக வயிற்றைக் குறிப்பிட வேண்டும். ஓயாது உழைக்கும் எந்த உறுப்புமே அதன் வலிவிழந்து போவது இயல்பே யல்லவா? காலமெல்லாம் அயராது உழைத்துவரும் வயிற்றின் உறுப்புக்கள் நோன்புக் காலங்களில் பூரண ஓய்வு பெறுவதன் மூலம் புதுபலம் பெறுகின்றன. வயிற்றில் ஏற்படும் புற்று நோயும், எரிச்சலும் கூட நோன்பால் ஓரளவு நிவர்த்திக்கப் படுகின்றன. அதிகமாக உணவுண்டதால் தொந்தி பெருத்த வயிறும் தன் இயற்கை நிலைக்குச் சுருங்குகிறது. மந்தம் பசியின்மை முதலியவையும் நீங்குகின்றன. வயிற்றில் கிருமிகள் உற்பத்தி யாவதைத் தடுப்பதற்குச் சிறந்த வழி நோன்பு நோற்பதே யாகும்' நுரையீரல் வீங்கியிருந்தால், வீக்கம் நீங்கிவிடுகிறது. அதிகமாக பித்தம் உற்பத்தியாவது தடுக்கப் படுகிறது.

இரத்தத்தை சுத்தி செய்வதில் முக்கியமாக மேற்கும் சுவாசக் குழாய்களும் நோன்பால் நலம் பெறுகின்றன. சுவாசக் குழாய்களுக்குள் இருக்கும் கழிவுகள் நீக்கப்பட்டு அதிகமான காற்றை சுதந்திரமாக சுவாசிக்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. நோன்பு நோற்போரின் குரலில் ஏற்படும் மாற்றத்தைக் கொண்டு அதை நன்கறியலாம். இருமல், மார்ச்சளி, கபஜுரம் போன்றவையும், சில நாட்கள் நோன்பு நோற்பதன் மூலம் போக்கப் படுகின்றன.

நோன்பு, சுத்தமான இரத்த ஓட்டத்திற்கும், நரம்புகள் பலம் பெறுவதற்கும் வகை செய்வதால் மனிதனின் ஆண்மைத்தனமும் இயற்கையாகவே வலிமை பெறுகிறது. நோன்பு நோற்பதால் இழந்த இளமை மீண்டும் திரும்புவதையும், இருக்கும் இளமையில் முறுக்கேறுவதையும், விஞ்ஞான ரீதியாகவே கண்டறிந்திருக்கிருர்கள்.

இவைகளன்றி மூளை, நரம்பு சம்பந்தப்பட்ட வியாதிகள் கூட நோன்பால் நிவர்த்திக்கப்படுகின்றன. சித்தப்பிரமை பிடித்தவர்க்கள் கூட பசிநேரத்தில் நல்ல முறையில் நடந்துகொள்வதை நாம்பார்க்கிருேமல்லவா? பாரிச வியாதியும் நோன்பால் குணப் படுத்தப் படுகிறது.

விரதத்தை மேற்கொள்ள மேற்கொள்ள நம் சிந்தனையிலே தெளிவேற்படுகிறது. அதிகமான சிந்தனையால் அலுத்துவிடும் மூளை கூட, நோன்பு நோற்றுப் பழக்கப் படுத்திய பிறகு நீண்ட சிந்தனைக்கு ஆற்றல் பெற்றதாக மாறி விடுகிறது. நோன்பால் தூய்மை படுத்தப்பட்ட குருதி, மூளை நரம்புகளில் பாயப் பாய, சிந்தனையிலே தெளிவும், தூர நோக்கும் ஏற்படுகின்றன. உலகில் தோன்றிய தீர்க்கதரிசிகள் யாவரும், இறைவனின் ஞான ஒளி பெறுவதற்கு முன் நோன்பு நோற்றவர்களாகவே இருந்தார்கள் என்பதை நாம் பார்க்கவில்லையா? இதற்காகவே காந்திஜீயும் தம் வாழ்வின் முக்கியமான திருப்பங்களில் விரதத்தை மேற்கொண்டார் போலும்.

நோன்பு நோற்பாரின் நெஞ்சத்திலே அன்பு தழைக்கிறது; ஈகை பிறக்கிறது உள்ளுணர்வு மேலிடுகிறது. மற்றும் ஆத்மிக குணங்களெல்லாம் அதிகரிப்பதையும் காண்கிருேம். பார்வையிலே கூர்மையும், கேள்வியிலே தீட்சண்யமும், நுகர்ச்சியிலே உணர்ச்சியும் அதிகரிக்கின்றன. கண்ணிலே தற்காலிகமாக ஏற்படும் குருடு, காதில் ஏற்படும் மந்தம் முதலியவை மறைந்து விடுகின்றன, நாவின் ரசிகத் தன்மையும் மிகுதப்படுகிறது.

நோன்பின் பசி தாகத்தால் ஏற்படும் உஷ்ணம், ரத்தக்குழாய்களில் ஆங்காங்கே தேங்கி நின்று, பல கேடுகளை விளைவிக்கக்கூடிய கழிவுப் பொருள்களை உருக்கி ஆவியாக மாற்றி அப்புறப்படுத்திவிடுகின்றது. பிறகு நரம்புகளில் சுத்தமான இரத்தம் ஓட ஆரம்பிக்கிறது. இதுவே உடலைப் பொறுத்த எல்லா நோய்களும், நீங்கி நலம் பெறுவதற்க்குக் காரணமாயமைகிறது,

இவ்வாறெல்லாம் உடலுக்கு நலன் விளைவிக்கும் நோன்பு உள்ளத்திற்கும் நலன் விளைப்பதைக் கண்டறியலாம். மனிதர்கள் செய்யும் பாவங்கள் பெரும்பாலான வற்றிற்கு சரீர இச்சையே காரணம். இந்த சரீர இச்

சையைஅறவேபோக்கிவிடவோ, உடனே அடக்கிவிடவோ முடியாது. படிப்படியாக அதன் பலத்தை ஒடுக்குவதன்மூலமே அதை அடக்கமுடியும். நோன்பு, உணவின் ஆசையைத் தணிப்பதன் மூலம், மற்ற விருப்பங்களின் பலத்தையும் குறைத்து ஒழுங்கு படுத்துகிறது. இதனுல் எக்காரியத்தையும் சாதிக்கக் கூடிய அசையா உறுதியும், தளரா ஊக்கமும் மனிதனுக்கு உண்டாகின்றன.

இத்தகைய பெரு நன்மைகள் பல நோன்பில் இருப்பதாலேயே, மனிதனின் மேன்மைக்காகவே அருளப்பட்ட மதங்கள் விரதமேற்கொள்வதைக் கடமையாக ஆக்கிஇருக்கின்றன. காலநிலைக்கும், அந்தந்த நாட்டுப் பண்பாட்டு முறைக்கும் ஏற்றவாறு விரதத்தை மேற்கொளும் முறையில் சிற்சில வேறுபாடுகள் இருப்பினும்கூட எல்லா மதங்களுமே விரதத்தை வற்புறுத்துகின்றன. இஸ்லாமிய மதம், தன் அடிப்படைக் கடமைகளில் ஒன்ருக அதனை ஆக்கி, ஒருமாதம் முழுதும் நோன்பு நோற்கக் கட்டளையிட்டிருக்கிறது.

மதத்திலே நோன்பு விதிக்கப்படுவதன் முக்கிய நோக்கம், மனிதனுடைய குணத்தை மேன்மையாக்கி, நடத்தையைப் புனிதப் படுத்தி, அறிவை வளப்படுத்துவதேயாகும். கெட்ட உணவு உடலுக்குக் கேடு விளைவிப்பதைப் போன்றே கெட்ட வார்த்தைகளும் வீண் கேளிக்கைகளும் இதயத்தில் இருளை உண்டாக்கி விடுகின்றன. அவ்விருள் அறிவின் ஒளியை மாய்த்து, மனிதனை இம்மையிலும் மறுமையிலும் தாழ்ந்த நிலையிலாக்கிவிடுகிறது. எனவேதான் நோன்பு நோற்கும் காலங்களில் சொல்லிலும் செயலிலும் எத்தகைய தீங்கும் நேரிடாதபடி நடந்துகொள்ளுமாறு விதிக்கப்பட்டுள்ளது.

நோன்பால், உடலுக்கும், உள்ளத்துக்கும் ஒருங்கே பயன் இருப்பதால்தான்' நோன்பு நோற்பது உங்களுக்கே நன்மை தரும் என்பதை நீங்கள் அறிவுடையோர்களாக இருந்தால் தெரிந்துகொள்வீர்கள்' எனத் திருக்குர்ஆன் கூறுகிறது.

தனிப்பட்ட வியாதிகளைப் போக்க எவ்வளவோ மருந்துகள் இருப்பினுங்கூட உடலும் உள்ளமும் சம்பந்தப்பட்ட எல்லா வியாதிகளையும் போக்கும் அருமருந்தாக விரதம் விளங்குவதாலேயே விரதமே வியாதிக்கு மருந்து, என்ற பழமொழி பரவலாயிற்று.

## தமிழும், ஆங்கிலமும்

பண்டைக் காலத்திலே, மேற்குக் கரையோரப் பிரதேசம் சேரநாடு என்ற பெயரில் தமிழர் ஆட்சியிலிருந்த பொழுது வாணிபத்தின் பொருட்டு அரபு வணிகர்கள் அணியணியாகத் தங்கள் மரக்கலங்களில் வந்து சேர்ந்தனர். முத்தைப் போன்று—முல்லையின் அரும்பு போன்று விளங்கும் தீட்டிய அரிசி அவர்களின் மனதைப் பெரிதும் கவர்ந்தது. அதோடு 'அரிசி' என்னும் சொல்லை ''அருஸ்ஸு'' என்று தங்கள் மொழியில் சேர்த்துக் கொண்டார்கள்.

பின்னர் ஐரோப்பாவிலே பிரான்ஸ்வரைப் பரவியிருந்த முஸ்லிம்களின் பேரரசில் இச் சொல்லும் நிலவியிருந்தது. பல ஐரோப்பிய மொழிகள் இதைக் கடன் வாங்கின. ஆங்கில மொழியிலே ''அருஸ்ஸி'' ''ரைஸ்'' ஆயிற்று. அரிசி எவ்வாறு ''ரைஸ்'' ஆயிற்று என்பது விந்தையாக இருக்கிறதல்லவா?

—''துராப்''

குடும்ப பாரத்திலிருந்து ஓய்வெடுக்க விரும்பினுள் பரீதா. பெண் உள்ளத்தை ஆழ்கடலுக்கு ஒப்பிடுவது கவிஞர் மரபு. கடலலை எப்பொழுதாவது ஓய்கிறதா?

# பெண் உள்ளம்



காரை, ஏ.எம். அலி

அன்று என் வீட்டுக் கதவு தட்டப்படும்போது, நான் சமையலறையில் காலைப் பலகாரம் தயார்செய்து கொண்டிருந்தேன். விரைந்தோடி வந்து ஜன்னல் வழியே எட்டிப் பார்க்காமலேயே ஏதோ தந்திதான் வந்திருக்குமென்று யூகித்துக்கொண்டேன்.

அதற்கொப்ப ''அவசரத் தந்தியம்மா'' என்று கத்திக்கொண்டே

உள்ளே வந்தான் என் மூத்த மகன் கரீம்.

பொதுவாக நாங்கள் தந்தியைப் பெறுவதே அரிது. அதிலும் அவசரத் தந்தி பெறுவது அரிதினும் அரிது. கொல்லையில் வம்பு வளர்த்துக்கொண்டிருந்த என்னிரு குமாரிகளும் இச் சத்தத்தைக் கேட்டு ஓடிவந்தனர். "என்னம்மா இது?" என்று தவித்தாள் மூத்த பெண் நஜ்மா. ஒன்றரை வயது வாண்டு 'ஜின்னு' என் காலைக் கட்டிக்கொண்டான்.

தோட்டத் தாழ்வாரத்தில் சாவதானமாக வெற்றிலை பாக்கு இடித்துக்கொண்டிருந்த மாமியார் வேறு ஓடிவந்துவிட்டார். "தந்தியா?.... 'யா அல்லாஹ்!' கெட்ட சேதியா இல்லாதிருக்கணுமே" என்றிரங்கினுர்.

உள் செய்தியைக் கரீம்தான் வாசித்துச் சொன்னுன். "அம்மா அசௌக்கியம்-ஆபத்து. உடனே வரவும். ரஹீம்" என்றிருந்தது.

"பட்டினத்து அத்தைக்கா ஆபத்து. 'யா அல்லாஹ்' நீ தான் காப்பாற்றணும்" என்று முறையிட ஆரம்பித்துவிட்டார் மாமியார்.

என் மாமியார் கலங்கிய பட்டினத்து அத்தை பரகத் அம்மாள் என் உயிரினும் உயரியவர். பிறந்ததுமே தாயைப் பிரியும் துரதிருஷ்டம் வாய்ந்த எனக்கு, அன்னையின் வாஞ்சை அணுவளவும் குறையாது வளர்த்துப் போற்றிய புண்ணியவதி அவர்; என் அன்னையின் உடன்பிறந்த சகோதரிதான்; வேற்று மனுஷியல்ல. சிறந்து வாழ்ந்து, பின்னர் வாழ்க்கையிலேயே கசப்படைந்தவர். அவர் கணவர் இறந்ததிலிருந்து தன் வாழ்க்கைப் போக்கையே மாற்றிக்கொண்டார். தன் சொத்துக்களையெல்லாம் மாதர் கல்விச் சாலையொன்றுக்கு எழுதிவைத்துவிட்டு, ஆயுள் முழுவதும் அதை நிர்வகிக்கும்பணியிலேயே கழித்துவிடுவதாகச் சபதமேற்று வாழ்பவர். வஸந்தத்தில் மலர்ந்த ரோஜாவைச்செடியிலேயே வளரவிட்டு, அதன் அழகைப் பருகுவது போல, என் கண்களில் நீர் வழியாது என்னை வளர்த்தவளும் அவர்தான். நீங்களே சொல்லுங்கள், அவருக்கு உடல் நலக்குறைவு என்றல், நான் நெஞ்சம் கலங்குவது நியாயம்தானே. அன்னையின் பரிவையும்,பாசத்தையும் என்மீது சொரிந்த அப் புண்ணியவதியை அம்மா என்றே அழையதுப் பழகினேன்.

அம்மாவுடன் உதவிக்கிருப்பது அவர் தம்பி ரஹீம்கான் மட்டுந்தான். அவர் ஒரு விநோதப் பிறவி. குடும்பத் தொந்தரவிற்குக் கட்டுப்பட மறுத்தவர். இம்மாதிரி ஒரு ஆள், வயது முதிர்ந்த ஒரு பெண்ணின் 'தங்கடம் தலைவலி' காலத்தில் பிரமாத உதவி என்னதான் செய்துவிடமுடியும்?

"அப்போ நீ போகப் போகிறுயா பரீதா?" என்ருர் மாமியார்.

"அவங்க வரட்டும்........" என்றேன், நான்.

அன்று பகல் உணவிற்கு வழக்கம்போல் காலதாமதமாக என் கணவர் வந்தார்கள். "அத்தா பட்டினத்து ஆச்சிக்கு அசௌகரியமாம். அம்மா போகணுமாம்" என்று ஏகச் சத்தமிட்டு குழந்தைகள் செய்தியை ஒலிபரப்பின.

என் கணவர் எந்த மறுப்பும் சொல்லவில்லை. "அம்மாமீது நீ வைத்திருக்கும் அன்பு எனக்குத் தெரிந்ததுதான். நான் மறுத்து அவர் நிலைமை படுமோசமாகிவிட்டால் நீ என்னை மன்னிக்கவே மாட்டாய். இரவு எட்டு மணிக்கு வண்டியிருக்கிறது. எனக்கு ஆபீசில் நிறைய வேலை. என் நண்பன் ஒருவனும் இன்றைக்குத்தான் ஆபீஸில் லீவு வாங்கிக்கொண்டு, அவன் அலுவல்களையும் என் தலையில் சுமத்திவிட்டு பட்டினம் போகிருன். அவனுடன், அவன் வீட்டுப் பெண்களும் செல்கிருர்கள். கவலைப் படாதே. தக்க துணைதான், அவர்களுடன் செல்...." என்ருர், கனிவாக.

"நானில்லாமல் குடும்பக் காரியங்கள் எப்படி நடக்குமாம்?" என்றேன், நான்.

"அதையெல்லாம் நாங்க கவனிச்சுக்கிருேம். கொஞ்ச நாளைக்குத்தானே. அம்மா சமையல் செய்வார். நாங்கள் எல்லோரும் உதவிக்கு இல்லையா?" என்ருர்கள் அவர்கள்.

ஃ ஃ ஃ

அன்றிரவே என் கணவர் ரயில் நிலையத்திற்கு என்னை அழைத்துச் சென்ருர்கள். எனக்குத் தக்க துணையாக அவரின் நண்பர் வீட்டுப் பெண்கள் அறுவர் இருந்தனர். என்னிடமோ கனத்த கைப்பெட்டி. பீடிக்கும் நோய் எவ்வளவு காலம் நீடிக்குமோ யார் கண்டது....?

"நீ வீணைக் கவலைப்பட்டு உன் உடம்பைக் கெடுத்துக்கொள்ளாதே" என்பதுதான் என் கணவரின் இனிய வழியனுப்புவாக்கு.

சென்னை எழும்பூர் ரயில் நிலையத்தில் ரயில் நின்றதும், பரகத் அம்மாளே புன்னகையுடன் என்னை எதிர்பார்த்திருந்தார். உயர்ந்த நெற்றி உறுதியான பார்வை—எல்லாம் எப்பொழுதும் போல — 65 ஆண்டுகள் நிறைந்த அவரிடம் நோயின் சாயல் கடுகளவும் காணப்படவில்லை.

"சௌக்கியமா வந்தியல்ல? சரியான ஆளடியம்மா நீ! 'நான் சீக்காப் படுத்தேன்' என்கிறதை விட வேற காரணத்துக்காக தந்தி சொல்லும்படி நீ எழுதப்படாதோ? எப்படினுச்சும் மவுத்தாகவேண்டியதுதான். இருந்தாலும், அதுக்கு நாம் ஏன் முந்திக்கணும்" என்ருர் அம்மா.

"எங் கண்ணல்ல? மன்னிச்சுக்க அம்மா........வேறு வழியே இல்லே. எங்கள் குடும்பத்தைப் போல ஒரு பண்ணையை நடத்துறதுன்னு....எவ்வளவு சிரமமான விஷயம் தெரியுமல்ல ? ஆறு பிள்ளைகள், கனவில் திரியும் கவி மனப்பான்மையுள்ள கணவர், ஒரு மாமி....அம்மம்மா...." என்றேன்.

"இது புரியாதா? உன் உடம்புக்கு அவசியம் ஓய்வு தேவைதான். 15 நாள் ராஜப்பொழுது போக்கலாம். மேலும் தேவைக்கு என் 'தங்கடம்'நொண்டிச்சாக்கு" என்ருர் அம்மா.

"தங்கம்னு நீ தங்கந்தாம்மா!"

என்று அவரைத் தழுவி முத்த மிட்டேன்.

என் மாமா ரஹீம் வீட்டி லேயே எங்களை எதிர்பார்த்திருந் தார். அவர்பாடுதான் பெரிய கோண்டாட்டமாகத் தெரிந்தது. சிறு பிள்ளையிலிருந்தே என்னைத் தூக்கி வளர்த்தவரல்லவா அவர்? எனது இந்தத் திருட்டு லீவைப் பற்றிக் குறும்பாகப் பேச ஆரம் பித்துவிட்டார்....

"இந்தப்பாரு மாமா! உனக்கு வேடிக்கையாத்தான் இருக்கும்! என் உடம்பு பச்சைப் புண்ணு கிப் போச்சு. கல்யாணமாகி 13 வருடங்களாக, ஒருநாள்கூட முறையான 'லீவே' எனக்கில்லே. எப்பப் பார்த்தாலும் குடும்ப அலுவல்கள், குழந்தைகள், சமை யலறை....ஒரு காலப்போக்கா.... திருவிழாவா....எதினுச்சும் உண் டுமோ? இரவு வந்துவிட்டால் களைத்துக் கண்ணயர்ந்துவிடுகின் றேன். ஒரு பக்கம் படிக்கக்கூட மனம்ஒடுவதில்லே. உனக்கென்ன தெரியும் இதெல்லாம்" என்று படபடத்தேன்.

"எனக்கு விளங்காதா பரீதா? வேண்டியமட்டும் 'ரெஸ்ட்' எடுத் துக்கோ. நேற்றுதான் காரை ஒழுங்குபடுத்திக் கொண்டுவந்திருக் கேன். சாயங்காலம், நீ, நான், அம்மா—மூவரும் மரீனு பக்கம் கிளம்புவோம்....கொஞ்சம் காத் தாவது ஒன் உடம்பிலே படட் டும்!" என்றார் ரஹீம்.

பகல் உணவு உண்ண அமர்ந் தோம். முதல்தரமான விருந்து போலத்தான் அம்மா சமைத்திருந் தார். தக்காளிச் சாற்றில் வேக வைத்திருந்த கோழிக் கறியின் வாடை, பசியைப் பதின்மடங்கு பெருக்கிற்று. ஒரு கவளம் அன் னத்தைத்தான் வாயிலிட்டு மென் றிருப்பேன் வீட்டு நினைப்பு வந்து விட்டது.

"........இந்நேரம் எல்லோரும் சாப்பிட உட்காருவர். சமையல் எப்படியோ? வய்து முதிர்ந்த மாமியார் என்ன சாதித்துவிட முடியும்? உதவி புரியும் பெண் குழந்தைகளுக்கோ சிறு கதை படிப்பதில்தான் பயிற்சி. சமை யல் ஞானம் அறவே கிடையாது. அவங்களுக்கோ வாய்க்கு ருசி யாக இருக்கணும். கறியில்— கொஞ்சம் உப்பு கூடிவிட்டாலோ புளிப்பேறிவிட்டாலோ, அமர்க் களம்தான் .... இங்கேயோ விருந்து, அவர்களும் உடனிருந் தால்? சின்னப் பிள்ளை ஜின்னு எவ்வளவு கூத்தடிப்பான்....!" என் மனப் போராட்டம் துவங்கி விட்டது.

"என்ன யோசிக்கிருய் பரீதா?" என்றார், அம்மா.

"இல்லே....வந்து .... ஒன்னு மில்லேயே!" என்று மென்று விழுங்கினேன் நான்.

"நீ உண்மையிலேயே ஓய்வு பெறணுமென்றால் இன்னும் ஆனந்தமாக இருக்கணும், தெரி யுதா?" இது அம்மாவின் இத மோழி.

"அது சரி. உன் புருஷனுக்குக் கடிதம் போடணுமல்ல? அம்மா வின் தங்கடம் பற்றிப் போதிய தகவல் கொடு. வியாதி சம்பந்த



மாக டாக்டர் உபயோகப்படுத் தற வார்த்தைகளால் கடிதத்தை நிறைத்துவிடு. உதவிக்கு இருக் கவே இருக்கிறது வைத்திய அக ராதி. அப்பத்தான் உன் புருஷ னும் நம்புவார்" என்று சிரித்தார் மாமாவும்.

"என் வயசுக்குத்தான் எல்லா விதத் தங்கடமும் வருமே. மனம் போல எழுதம்மா" என்றார், அம்மாவும்.

ஆனல், நான்? இக் கருத்தை ஒப்பவே முடியாது. ஒருசில தினங் கள் ஓய்வு பெறுவதற்காக, மன மோப்பி என் கணவருக்கே பொய் நிறைந்த கடிதம் எழுத வேண்டுமா? பதிமூன்று ஆண்டு கள் நிறைந்த என் இல்வாழ்க்கை யில் இந்தத் தந்தி சமாசாரத்தைத் தவிர ஒரு வேளைகூட அவரிடம் பொய் பேசியதில்லேயே. என் சிந் தனை சுழன்றது.

"என்ன உன்னைப் பார்த்தால் ஏதோ கலவரப்படுவது போல தோன்று கிறதே" என்றார் மாமா.

"பிரயாண அலுப்பு அப்படித்தான் இருக்கும். கொஞ்ச நேரம் கண்ணு றங்கு. சாயங்காலம் கடலோரம் செல்ல லாம்" என்றார் என் செல்ல அம்மா.

⁂ ⁂ ⁂

பொன்னைப் பொடி செய்தது போன்ற பட்டு மணல், அதில் முத்துப் பறுக்கைகளை வாரி இறைத்தது போல சின்னஞ்சிறு சிப்பிகள்; ஆணின் நடை ஓசை யைக் கேட்டு ஓடி ஒளியும் பரு வச் சிறுமிகளைப் போல, வளைக் குள் நுழைவதும், வெளியே வரு வதுமாக இருக்கும் சிகப்பு நண்டு கள், வெள்ளிக் கட்டிகளைப் போராகக் குவித்திருப்பது போலத் தோன்றும்படி செம்பட வர் குவித்த மீன் குவியல். வெகு தூரத்தில், வா, வா, என்று ஓசை யிட்டு சுழல் அலைகளால் கை கூப்பி அழைக்கும் நீலக் கடல், அதில்- தாங்கும் சங்கிலிகளின்றி ஆடும் தொட்டில்கள் போலக் கட்டுமரங்கள்—நீல வான், நிறை ஒளி, குதூகலிக்கும் மக்கள் கூட் டம்—யாவும் என் மனதைக் கவர்ந்தன. ஜன சஞ்சாரமில்லாத ஓரிடத்தில், நான், அம்மா, மாமா மூவரும் அமர்ந்தோம்.

"எவ்வளவு அழகாக இருக்கி றது" என்று என்வாய் முணு



முணுத்தது. ஆனால், என் மனம்? "அவர்கள் மட்டும் இப்பொழுது என்னுடனிருந்தால் ....எவ்வளவு ஆனந்தப் படுவார்கள்! வெயில் எரிக்கும்உட்பிரதேசத்தில் வசித்து மகிழ்ச்சி உலர்ந்துபோகும் அவர்கள் மனதிற்கு, தண்மையூட்டும் சென்னைக் கடல் காற்று எத்தனை ஆறுதலாக இருக்கும் .... அதிலும் என் மணம் நடந்த புதிதில் ஒரே ஒரு முறை என்னுடன் இப் பக்கம் வந்தவர்கள்தானே!....அந்தச் சந்தர்ப்பத்தில் அவர்கள் காட்டிய பரிவு, உற்சாகம், அன்பு......." இது என் மனப் புயல்.

"என்ன இன்னும் கனவு காண்கிறாயா?" என்று அம்மா அதட்டும்போதுதான் நான் சுய நிலையடைந்தேன்.

"ஆம், அம்மா என் கல்யாண சந்தர்ப்பத்தில் இங்கேவந்தோமே அதை நினைத்துக்கொண்டேன்" என்றேன், நான்.

"அது நடந்து பதிமூன்று வருடங்களாகி ஆறு பிள்ளைகள் பெற்றெடுத்தபிறகுமா இந்த நினைப்பு?" என்றார், அம்மா வியப்புடன்.

"சந்தேகமென்ன? அந்த இன்பத்திற்கே அலாதி அழகு அம்மா! எனக்கும் அவருக்குமிடையே மணம் வீசும் அந்தத் தெய்வீகப் பிணைப்பு....அதைப்பற்றி ஆரஅமர சிந்திக்கத்தான் நேரமில்லையே...." இது என் இதயத் துடிப்பு, ஆனால் வாய்விட்டுச் சொல்லப்படாதது.

"அடடே, இப்பொழுதல்லவா நினைவுக்கு வருகிறது! சிறுவன் ரஷீதை, டாக்டர் நாளைக்கு அழைத்துவரச் சொன்னாரே. புறப்படும் அவசரத்தில் இதை மாமியாரிடம்கூட நான் சொல்லவில்லையே. நான் அருகில் இருந்தால் தான் பிள்ளை தைரியமாக சிகிட்சைக்கு உட்படுவான். அப்பாவோ பிள்ளை பயந்து அழுதாலும் சமயத்தில் இரண்டு அறை விட்டுவிடுவார்கள். எப்படித்தான் நிலைமை நேர்ப்படுமோ!" இதுவும் என் மனப் போராட்டத்தின் இன்னொரு அங்கம்.

நானும் மகா மோசம் பாருங்கள், ஓய்வுக்காக வந்த இடத்தில் இப்படியெல்லாம் கலங்கிக் கொண்டிருக்கலாமோ? இப்படியே கலங்கினால் ஓய்வை அனுபவிக்க முடியுமோ? பின் இங்கு வந்துதான் என்ன பயனும்?

"சரி, குளிர் காற்று வீச ஆரம்பித்துவிட்டது புறப்படுவோமா?" என்றார் மாமா.

"குளிர் காற்று! ஆமாம் அதுவும் எவ்வளவு இன்பமாக இருக்கிறது. என் மூத்த மகள் நஜ்மா பிள்ளைகளுக்கெல்லாம் குளிர் தாக்கிவிடாமல் போர்வைகளைச் சரிசெய்து வைப்பாளா? சின்ன மகனுக்கு இது ஒத்துக்காதே. ஏதும் ஜலதோஷம் பிடித்து, காய்ச்சல் வந்துவிட்டால்? ஊரும் காலமும்தான் கெட்டுக் கிடக்கிறதே" இதுவும் என் மனக் கடலின் மற்றொரு கொந்தளிப்பு.

**இரண்டாம் நாள்:** "பரீதா—உனக்கு ஒரு லெட்டர். உன் புருஷனிடமிருந்து வந்திருக்கு" என்று ஒரு கவரைத் தந்தார் மாமா.

உள்ளத் துடிப்புடன் அதை வாங்கிப் பிரித்தேன். நேற்றே அவர்களுக்கு நான் எழுத நினைத்தேன். எழுதியிருந்தால் இன்று இதே நேரத்தில் அவர்களும் அதைப் படித்துக்கொண்டிருக்கலாமல்லவா? ஆனால் அங்கிருந்து இவ்வளவு விரைவாகக் கடிதம் வருவானேன்? ஏதும் உடம்புக்கு ....என் உடல் நடுங்கிற்று.

"ஏன் கவலையாக இருக்கிறே பரீதா?" என்று அம்மா வேறு குறிப்பறிந்து கேட்டாள்.

ஆனால், வந்த கடிதத்தின் செய்தி இதுதான்.

"என் பிரிய பரீதா! ஆண்டவனின் இன்னருள் அனைவருக்கும் நிலவுமாக........

"....நீ இங்கிருந்து புறப்பட்டு ஒருநாள்தான் ஆகிறது. நான் உலகிலேயே தனி ஆள் என்ற உணர்ச்சியில் ஆழ்ந்து விட்டேன். எனவே, இக் கடிதத்தை எழுதி மனச்சாந்தி அடையமுடியுமென்று நம்பினேன். உன் பிரயாணம் சுகமாக இருந்ததா? ஆனால் எதை குறித்தும் உன் உடம்பை அலட்டிக்கொள்ளாதே...."

"....குறிப்பாக எங்கள்விஷயத்தில் நீ ஒருகவலையும் அடையாதே. தம் தேவையைத் தாமே பூர்த்தி செய்துகொள்ளும் அளவிற்கு பண்பட்டவர் எதையும் சுலபமாகச் சாதித்துக்கொள்ள முடியுமல்லவா? அம் முறையில் பார்த்தால், இங்கே குடும்பச் சகடம் சிரமமின்றிச் சுழல்கிறது, சிறுமிகளெல்லாம் வீட்டைச் சுத்தமாகப் பெருக்கி நீர்கொண்டு கழுவினார்கள். கரீம் கடைக்குச்சென்று பெரிய மனிதனைப்போல சாமான்கள் வாங்கிவந்தான். நான் வழக்கத்துக்கு மாறாகவே நேரத்தோடு

### பழமொழியும், -கவிமொழியும்

"தீட்டிய மரத்தில் கூர்மை பார்ப்பது" "வளர்த்த கடா மார்பில் பாய்வது" போன்ற பழமொழிகள் தமிழில் காணக் கிடக்கின்றன. இக்கருத்து ஓர் அரபிக் கவிதையில் அழகுடன் விளங்குகிறது

"அதிகதூரம் ஒரு பொருளைத் தூக்கி எறிவது எப்படி என்று நான் அவனுக்கு நாள் தவருது சொல்லிக் கொடுத்தேன்.

அவன் அதில் திறமை அடைந்ததும் முதன் முதலில் என்னைத் தான் தூக்கி எறிந்தான"

வீட்டுக்கு வந்துவிட்டேன். இப்பொழுது பார்த்தாயல்ல...."

"....உன் இனிய அம்மாவுக்கு அவசரத் தந்தி கொடுக்கும் அளவிற்கு அசௌக்கியமிருக்காதென நம்புகிறேன். உன் மாமாவுக்கும், அம்மாவுக்கும் என் 'சலாம்' சொல். உன் செய்திகட்கும், அம்மாவின் உடல்நிலைக்கும், ஆவலுடன் கடிதம் எதிர்பார்த்திருந்தோம். ஆனல் உனக்கோரு வார்த்தை சொல்லிவிட விரும்புகிறேன் பரீதா....

"....உன் அம்மாவின் உடல் நிலை சீர்பட்டுவந்தபிறகு, இந்தச் சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக்கொண்டு, சென்னையின் ஆனந்தத்திலே இரண்டொரு வாரங்கள் நீ ஏன் ஓய்வெடுத்துக்கொள்ளலாகாது? உனக்கும் ஓய்வு நிறையத் தேவைதான். எத்தனையோ ஆண்டுகள் நம் குடும்பத்தின் நலனுக்கான பரிபாலனத்தில் நீ படாத பாடுகள் பட்டிருக்கிறயே. ....உன் மாமாவிடம் சற்று மனத் தெளிவுக்காக, சென்னையின் சிறந்த இடங்களுக்கு உன்னை அழைத்துச் செல்லச்சொல்லு.... எது குறித்தும் நீ கவலைப்படாதே. தேவைக்கும், பிறவுக்கும் எழுது.

"அம்மா! அம்மா!" என்று பதறினேன் இக் கடிதத்தைப் படித்ததும்.

அம்மா என்னவோவென்று ஓடிவந்தார். என்னல் பேசவே முடியவில்லை. என்னை மீறி விம்மலானேன் அம்மாவின் அணைப்பில் வீழ்ந்து.

"அம்மா! இன்று மாலையே ஊருக்குப் போகவேண்டும் என்னையொன்றும் பைத்தியம் என்று சொல்லமாட்டாயே?" என்றேன் நான்.

"இன்று மாலையேவா? சற்று துரிதம்தான். உன் இதய உணர்ச்சியைத் தெளிவாகத் தொடர்ந்து அறிந்தபிறகு உன்னைப் பைத்திய மென்பேனு? என் கண்ணல்ல. அதன் கோந்தளிப்பு எனக்குத் தெரியும். நீ சென்றுவா. இன்னொரு சமயம் குடும்பத்தோடு இங்கே வந்து தங்கு" என்ருர், என் உயிரினுமினிய அம்மா.

"மாமா என்னைப் பரிகசிப்பாரோ!" என்றேன் கண்ணீருக்கிடையே சிரித்தவாறு.

ஆனல் பிரம்மச்சரியத்திலேயே ஊறி இதயம் மரத்து, குடும்பத்தாகம் இன்னதென்றறியாது, முதிர்ந்துவிட்ட என் மாமாவின் எந்த அபிப்பிராயமும் இவ் விஷயத்தில் செல்லத் தகாததல்லவா?

ஈதின் இளம்பிறையைக் காணும்பொழுது உள்ளத்திலே எழும் களிப்பு, மனிதனின் கடமையையும் உணர்த்துகிறது. நாமும் வாழவேண்டும், வையமும் வாழவேண்டும் என்ற தத்துவத்தை சுட்டிக் காண்பிப்பதே நோன்புத் திருநாள்.

# தருமத் திருநாள்

நூ.பீ.ஷேக் அப்துல் காதர்

"ஈதின் இளம் பிறையே!
நீ மாந்தரின் பார்வையினின்றும் தப்ப முடியாது.
அவர்கள் உன் வழியில்
ஆயிரம் கண்களால் வலை வீசியுள்ளனர்.
உனது பொய்யான குறை நினைந்து
மனம் தளராதே.
முழுமதி உன் உடை முந்தானையில்தான்
மறைந்து கிடக்கிறன்."

இக் கருத்துப்பட இஸ்லாமியக் கவியரசர் இக்பால் அமரத்தும பெற்ற பாரசீகக் கவிதையொன்றில் பாடியிருக்கிருர்.

மூலக் கவிதையின் முதல் அடி, நோன்பின் முடிவையும், பெருநாளின் வருகையையும் முஸ்லிம்கள் எதிர் நோக்கும் உற்சாகமான, உள்ளந்தொடும் காட்சியை அழகுற எடுத்துக் காட்டுகிறது.

மேற்கு வானச் சரிவில், ஷவ்வாலின் புதுப் பிறையைக் காணும் அவர்களின் உள்ளங்களில் எழும், — எழவேண்டிய உணர்ச்சிசளை அற்புதமாக உருவகப் படுத்துகிறது இரண்டாவது அடி.

ஐம்பெரும் கடமைகளில் ஒனறைச் செய்து முடித்ததில் ஏற்படும் களிப்பூரிய திருப்தி — மகத்தானதொரு சோதனையில் வெற்றிப்பெறத் துணை புரிந்த இறைவனுக்குச் செலுத்தும் நன்றி — கசடு நீங்கிய காலம், கர்த்தன் வழியில் கட்டுப் பட்ட உள்ளம், தெய்வ நினைவாலும் மனு நலச் சிந்தையாலும் தூய்தான ஆத்மா, ஆகியவையுடன் புத்தம் புதியதோர் வாழ்வாரம்பிக்கும் உரமான நம்பிக்கை — இவற்ருல் கிளர்ந்தெழும் உணர்ச்சிகளைத் தாம் கவிஞர் மிகச் சூசகமாகக் குறிப்பிடுகிருர்.

இவ்விதமாகச் சங்கையுடன் ரமலானை யடுத்து வரும் தருமத் திருநாள் எனும் ஈதுல் பித்ர், நோன்பு முறைக்கே மணி முடியாகத் திகழ்கிறது. இதில்தான் இப்பெருநாளின் சீருண்டு, சிறப்பும் உண்டு.

மாதங்களில் பெரும் மாண்பும் மகிமையும் வாய்ந்தது ரமலான். இப்புனிதத் திங்களிலேயே அல்லாஹ் தனது அளப்பருங் கருணையில், மனித குலத்தின் நேர் வழிக்காக இஸ்லாத்தின் கருவூலமாகிய திருக்குர்ஆனை இறக்கி வைத்தான்.

இது பற்றி திரு மறையில், "ரமலான் மாதம் எத்தகையது என்ருல், அதில்தான் மக்களுக்கு நேர் வழியாகவும், தெளிவான சான்ருகவும், நன்மை தீமைகளைப் பிரித்தறிவிக்கக் கூடியதாகவும் உள்ள திருக்குர்ஆன் அருளப்பட்டது. எனவே, உங்களில் இம் மாதத்தை அடைபவர் நோன்பு நோற்கவும் ... குறித்த நாட்களை நீங்கள் பூர்த்தி செய்யுங்கள். உங்களுக்கு நேர்வழி காட்டியதற்கும், உங்கள் நன்றியைச் செலுத்துவதற்கும் அல்லாவின் பெருமையை மீக் கூருங்கள். இதையே அவன் விரும்புகிருன்," என்று கூறப் பட்டுள்ளது.

இத்திரு வசனங்களில் ரமலானின் போது வணக்கமுடன் கூடிய நோன்பு ஏன் முஸ்லிம்கள் மீது பணிக்கப்பட்டிருப்பதென்பதைக் காணலாம்.

"ஆண்டவன் ஒருவன்; மனிதர்கள் எல்லாம் சகோதரர்கள்" என்ற உண்மையை ஐயந்திரிபு அற்ற முறையில் உபதேசிப்பது இஸ்லாம் ஒன்றேதான். இதனுல் அது உலகின் பலதிறப்பட்ட மக்களை பூரண சமத்துவ அடிப்படையில் இணைத்துப் பிணைக்கும் ஒரு உன்னத சக்தியாக விளங்குகிறது. இதனைப் பின்பற்றும் முஸ்லிம்கள் வேறுபட்ட பொருள் நிலைகளில் இருந்த போதிலும், அவர்களிடையே அப்பழுக்கற்ற ஆத்மீகச் சமத்துவத்தை நிலவச் செய்வதே நோன்பின் நோக்கமாகும்.

அல்லாஹ்வின் பெயரால் நோன்பிருப்பதால், உடல் நலம் உரம் பெறுகிறது. மனம் நன்னெறியில் கட்டுப்பட்டு அமைகிறது. ஆத்மா தெளிவு பெற்று உயர்கிறது. இது மட்டுமல்லாமல், ஒரு மாதத்திற்காவது செல்வந்தரை எளியவரின் நிலையில் வைத்து விடுகிறது ரமலானின் நோன்பு—உண்டு கொழுப்பவர் கூட வறுமையையும் பசியையும் உணர வேண்டும் என்பதற்காகத்தான்.

ஏழைகளின் வயிற்றுக்கொடுமையை உணரும்போது, மெலியோர் மீது வலியோர் இரக்கம் கொள்ள ஏதுவுண்டு. அவர்களுக்கான சேவை செய்யும் எண்ணம் பிறக்கிறது. இதனுல் "நாமும் வாழ்வோம், பிறரும் வாழட்டும்" என்ற தத்துவம் பணம் படைத்தவர் இதயங்களில் தானுக மலர்ந்து விடுகிறது.

நலிந்த மக்கள் மீது கொள்ளும் அனுதாபம், அவர்களின் தாழ்நிலை போக்குவதற்கான கடமை உணர்ச்சி, அவ்வழியே காரிய மாற்ற உந்தும் உள்ளம் – இவை தாமே ஈகையின் ஆரம்பமாகும்?

ரமலானில் தோன்றும் இவ்வித எண்ணங்களால் மக்களின் உள்ளங்கள் நெகிழ்ந்து மென்பட்டுள்ள நேரத்தில் தருமத்தின் திருநாள் வருவது வெறும் பொருத்தமல்ல. சிந்தனையளவில் ரமலான் செய்வதை செயலளவில் காட்டும்படி முஸ்லிம்களைத் தூண்டுவதற்காகவே இப் பெருநாள் வருகிறது.

திருமறை யருளிய இறைக்கு நன்றி செலுத்த நோன்பென்ருல், அந் நன் நோன்பை நிறைவேற்ற உதவிய ஒப்பற்றவனுக்கு வந்தனை செய்ய ஈதுல் பித்ர் உரியதாகும்.

இவ்விதமாக நோன்பும், நோன்பின் பெருநாளும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாய் வாழ்க்கையின் லௌகீக, ஆத்மீகப் பண்புகள் உயரிய முறையில் கலக்கப் பெற்று விளங்குகின்றன.

இஸ்லாமியத் திரு நாட்களில் கட்டுப்பாடற்ற கேளிக்கைக்கும், கரை புரண்டெழும் களிப்பிற்கும் இடமில்லை. அதிலும் முக்கியமாக ஈகைப் பெருநாளானது சுய நல இன்பத்திற்கும் தனிப்பட்டவர்களின் சந்தோஷத்திற்கு மாத்திரமல்லாமல், தான் பெற்ற இன்பம் வையம் பெற வேண்டுமென்ற கொள்கையை நிலை நாட்டுவதற்கேயாகும். ரமலானின் இறுதி வாரத்தில் பொருள் மிக்கோர் வழங்கும் "ஜக்காத்." "ஸதகாத்" ஆகிய தருமப் பங்கீடுகளின் பயனுய் ஏழை, எளியவர் எல்லாம் நல்ல விதமாய் உண்டு, உடுத்து இப் பெருநாளன்று சந்தோஷம் கொண்டாட முடிகிறது. மற்றவரை மகிழ்விப்பதில் உண்டாகும் நல்லின்பத்தை இந் நாளில்தான் எல்லோரும் அனுபவிக்கலாம்.

எல்லாக் களிப்பிற்கும் இன்பத்திற்கும் ஏகக்காரணமாக அல்லாஹ்விற்கு அஞ்சலி செய்வதில் தான் முஸ்லிம்களின் சந்தோஷம் உயர்வடைகிறது. எனவே, துன்பத்தில் மட்டுமின்றி, இன்பத்திலும் இறைவனை நாடுவது முஸ்லிம்களின் கடமையாக இருக்கிறது.

ஆண்டவன் மீதும், மனிதர்கள் மீதும் கொண்ட அன்புணர்ச்சி நிரம்பிய உள்ளங்கள் ஈத் தினத் தொழுகையிலே ஐக்கியமாகும் போது சொல்லொணுத பரமானந்தம் அடைகின்றன. இந்தப் பாக்கியம் நம்மனைவோருக்கும் கிட்டுமாக! ஈத் முபாரக்!

## நன்றி உணர்வு

*மக்கள் அழகழகான காலணிகளை அணிந்து செல்வதைக் காணும் பொழுதெல்லாம் அவன் மனம் வேதனையடைந்தது. தனக்கு ஒரு ஜதை செருப்புக் கூடஇல்லையே என்று அளவு கடந்து வருந்தினுன். தன் விதியை நொந்துகொண்டான். தன் ஏழ்மையை ஏசினுன். படைத்தவனையும் குறைகூறினுன்.*

*ஒரு நாள் ஏதோ அவசரவேலையாக விறு விறுஎன்று கடை வீதி வழியாகச் சென்றுகொண்டிருக்கும் பொழுது, திடீரென அவன் எதிரே கண்ட காட்சி அவனைத் துணுக்குறச்செய்தது. இரண்டு கால்களையும் இழந்த ஓர் ஏழைமகன் தவழ்ந்து வந்துகொண்டிருந்தான். இழந்த கால்களை மீண்டும் பெற அவன் உயிரையே பணயமாகத் தந் திருப்பான்—அவ்வளவு ஏக்கம் அவன் முகத்தில் நிழலாடியது.*

*செருப்பில்லையே என்று வருந்தி செருக்குடன் இறைவனை நிந்தனை செய்தவனின் கவனம், கால்களற்றவனின்பால் சென்றது. திடமான தன் கால்களுக்காகத்தன்னைப் படைத்தவனுக்கு நன்றி செலுத்த வில்லையே என்று அவன் இப்பொழுது வேதனைப்பட்டான். இருக்கும் நிலைமத்தை (செல்வத்தை) அதை இழக்கும்வரை நாம் உணர்வதில்லை என்ற உண்மை அவன் மனதில் உறைத்தது.*

*[காலுக்குச் செருப்பில்லையே என்று அழுதேன்—காலேஇல்லாத ஒருவனைக் காணும்வரை என்ற அரபிப் பழமொழியைத் தழுவியது]*

## சந்தண வரலாறு

*''ஸண்டல்வுட் சோப்'' என்ற பெயரில் மைசூர் சந்தண ஸோப் நமக்குக் கிடைக்கிறது. ஸண்டல்வுட் (சந்தணக் கட்டை) ஆங்கிலச் சொல் என்றே நம்புகிருேம். சில அகராதிகளில் ''ஸண்டல்'' என்பது 'ஸண்டலும்' என்ற லத்தீன் சொல்லின் ஆங்கில உரு என்று குறிக்கப் பட்டிருக்கும்.*

*ஆனுல் ஆங்கிலப் பேரகராதி ஒன்றைப் புரட்டிப் பார்த்தோமானுல் '' ஸன்தல் '' என்ற அரபிச் சொல்லிலிருந்து லத்தீன் கடன் வாங்கி '' ஸண்டலும் '' என்று மாற்றிக் கொண்டது ; அதே சொல் சுருக்கமாக '' ஸண்டல் '' என்று ஆங்கில உருவடைந்துள்ளது என்பது தெளிவாகும்.*

—"துராப்"

# வாழும் தோழி!

"நூர்"

★

தந்தையின் மரணத்தால், தனவந்தனுகிவிட்ட ஸலீம் தனித்தவனும் ஆகிவிட்டான். வாழ்க்கைக்குத் துணைதேடவேண்டிய வாலிபப் பருவம் அவன் விஷயத்தில் சற்றும் முன் பின்னுகிவிடவில்லை.

"அழகின் சிரிப்பே" அவள்தான் என்னும்படியான ஸபுரா ஸலீமுக்கு மனைவியாக்கப் பட்டாள் "பொறுமையும் எழிலும் கொண்ட பொற்சிலை"யாகவே ஸபுரா அவனுடன் வா்ழ்ந்துவந்தாள். மூன்று வருஷம் வாழ்க்கை நடத்திய ஸலீம், வாழ்வு உப்புச் சப்பற்று இருப்பதாக உணர்ந்தான்.

இரண்டாவது கல்யாணம் 'செய்துகொள்ள விரும்பிய ஸலீம், தன் கருத்தை ஸபுராவிடம் தெரிவித்தான். ஸபுராவின் சர்வ சம்மதத்துடன் ஸபியா ஸலீமுக்கு இரண்டாவது மனைவியானுள். சுமாரான அழகி என்றுகூடச் சொல்லமுடியாத ஸபிய்யா, செயலின் சுறு சுறுப்பாலும் பருவத்தின் புறு புறுப்பாலும் அக்குறையை நிறைவு செய்து கொண்டு விட்டாள். எந்த ஒரு அசைவுக்கும் எதிரொலி கொடுத்து "வெண்கலமணி" யாக அவனுடன் வாழ்ந்து வந்தாள்

ஒரு வருஷம்முடியவில்லை. இரண்டு பெண்டாட்டிக் காரனுக வாழ்ந்தும் ஸலீமின் உள்ளத்திலே குறைவுணர்ச்சி! மூன்ருவது கல்யாணம் செய்து கொள்ள விரும்பினுன் விருப்பத்தை இரு மனைவியரிடமும் கூறினுன்.

ஸபுரா சம்மதித்தாள். ஸபியா சர்ப்பமெனச் சீறினுள். ஊரையே அவனுக்கு விரோதமாகத் திரட்டி விட்டாள்.

ஸலீம் ஸபுராவிடம் சென்ருன். மூன்ருவது கல்யாணத்திற்கு அவளே உதவவேண்டுமென்று கேட்டுக் கொண்டான். அவளும், மனப்பூர்வமுடன் உதவி செய்வதாக உறுதி சொன்னுள்

மீண்டும் ஸபியாவிடம் சென்று அவள் எதிர்ப்பையேனும் சற்று அடக்கிக் கொள்ள வேண்டினுன் பலிக்க வில்லை "கடிய வேகச் சுடு சர மொக்கும் சொற்கள்" அவனைத் துரத்தி விட்டன.

நன்ருக உலுக்கப்பட்ட சல்லடையில், மண் கீழே போய்விட்டது, தான்யம் நின்று விட்டது.

ஸலீம் மூன்ருவது கல்யாண எண்ணத்தையே விட்டு விட்டான், தீர்க்கமாகச் சிந்தித்து இருவரில் ஒரு மனைவியைத் தலாக்குச் சொல்லி விட்டான்.

பொற் சிலை ஸபுரா இப்பொழுது அவன் மனைவியல்ல.

இப்பொழுது ஸபியாவே அவனுடன் வாழும் தோழி!






## 12. காற்றிலேறி விண் நின்றிறங்கினர்

அஷ்ரப் சண்டை செய்வதைத் தொலைவிலிருந்து பார்த்துக் கொண்டே நடந்து சென்ற மஹ்ஜபீன் அடுத்த நாற்சந்தியை அடைந்தபோது அங்கு அவனைக் காணவில்லை. தாக்கிவிட்டு ஓடிய சில பரங்கியரைத் துரத்திச்சென்றவன் அதற்கடுத்த திருப்பத்திற்குள் நுழைந்துவிட்டான். இப்பொ்ழுது மஹ்ஜபீனுக்கு என்ன செய்வது, எங்குசெல்வது என்றே தெரியவில்லை. அவர்கள் சிறைப்பட்டிருந்த இடத்திலிருந்து வெகு தூரம் வந்துவிட்டபடியால் திக்குத் தெரியாது கைகளைப் பிசைந்துகொண்டு நின்ருள், அப்பேதை. தெருவெல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது. ஜனங்கள் அங்குமிங்குமாக ஓடிக்கொண்டிருந்தார்கள்.

இச் சமயத்தில் இரு குதிரை வீரர்கள் வேகமாக வந்துகொண்டிருந்தனர். மஹ்ஜபீன் நின்ற தெரு முனையை அடைந்ததும் அவளைப் பார்த்துவிட்ட அவ் வீரருள் ஒருவன் கடிவாளத்தைப் பிடித்திழுத்துக் குதிரையை நிறுத்தி, "ஆ, மஹ்ஜபீன்!" என்ருன். உடன் வந்தவனும் குதிரையை நிறுத்தினுன்.

எவனே ஒரு பரங்கியன் தன் பெயரைக் கூவுவது கேட்டு மிரண்டு ஏறிட்டுப் பார்த்த மஹ்ஜபீனின் கண்கள் எதிரிலே ரீனுட் மன்னனின் மெய்க் காப்பாளனை ஹென்ரியின் பயங்கர உருவத்தைக் கண்டன. அவள் உடலெல்லாம் நடுங்கியது. உள்ளம் பதைபதைத்தது.

இதற்குள்ளாக சுற்றுமுற்றும் பார்த்து முஸ்லிம் வீரர்கள் அப்பகுதியில் அச்சமயம் யாரும் இல்லையென அறிந்துகொண்ட ஹென்ரி பட்டுக் கயிற்றை வீசி மஹ்ஜபீனை இறுகக் கட்டிவிட்டான். என்ன கூச்சலிட்டும் யாரும்அவளுக்கு உதவவரவில்லை, தப்பிச் செல்ல எண்ணிய கிறித்தவப் பிரஜைகள் தெருவின் குறுக்கிலும் நெடுக்கிலுமாக ஓடிக்கொண்டிருந்தனர். அவளைக் கத்தவிடாமல் அவசரமாக அவளுடைய வாயையும் கட்டிவிட்டு அத் தெரு மூலையில் பூட்டிய குதிரையுடன் வண்டியோட்டியில்லாமல் நின்ற கோச்சு ஒன்றினுள்

அவளைத் தள்ளி அடைத்துவிட்டான்.

தன்னுடன் வந்த தோழனை வண்டிக்குப் பின்னே தன் குதிரையோடும் வரச்சொல்லிவிட்டு ஹென்றி தானே சாரதியினிடத்திலமர்ந்து வண்டியை வேகமாகச் செலுத்தினான். கோட்டையின் தெற்கு வாயிலை நோக்கி அவர்கள் விரைந்து சென்றுகொண்டிருந்தனர்.

திப்ரிய்யாக் கோட்டையின் வடக்கு வாசல் வழியாய் முஸ்லிம்கள் உள்ளே நுழைந்ததும் அந்நகர வாசிகளுள் முன்னெச்சரிக்கையோடு இருந்த சிலர் தெற்கு வாயிலின் வழியாகத் தப்பியோடிக் கொண்டிருந்தனர். இவர்கள் பெரும்பாலும் முஸ்லிம்களுக்குத் துன்பம் இழைப்பதிலே பெயர் வாங்கியவர்கள். எனவே பிடிபட்டால் சுல்தானிடம் தங்களுக்கு நிச்சயம் தண்டனை கிடைக்கும் என்றஞ்சியிருந்த அவர்கள் தருணம் பார்த்து நழுவியோட ஆயத்தமாக இருந்தனர்.

கோட்டை வாயிலைவிட்டுவெளியேறியதும் ஹென்றி, அதற்குமேல் கோச்சிலேயே பிரயாணம் செய்வது அவர்களுடைய ஓட்டத்துக்கு இடைஞ்சலாக இருக்கும் என நினைத்தவனாய் வண்டிக் கதவைத் திறந்தான். உள்ளே மஹ்ஜபீன் மயக்கமுற்றுக் கிடந்தாள். அப்படியே அவளைத் தூக்கிக் குதிரைமேல் வைத்துக்கொண்டு தென் திசையை நோக்கித் தன் புரவியைத் தட்டிவிட்டான். கடுமையாகக் காயமுற்றிருந்த அவனுடைய தோழனும் அவனைத் தொடர்ந்து சென்றுகொண்டிருந்தான்.

ஃ ஃ ஃ

பாதிரியைப் புதைத்துவிட்டு மலையை விட்டிறங்கி சோலையில் தடாகத்தினருகே அமர்ந்திருந்த ஸயீதும் ஜோனும் வெவ்வேறு விதமான எண்ணங்களில் ஈடுபட்டிருந்தனர்.

தன்மீது ஜோனுக்குக் காதல் உண்டு என்பதை உணர்ந்திருந்த ஸயீத், தன் எதிர்காலம் ஆனந்தமயமாக இருக்கும்; ஜோன் அவனுடையவளாகிவிடுவாள் என்றெல்லாம் மனக்கோட்டை கட்டிக்கொண்டிருந்தான்.

ஜோனுக்கோ, அவளுக்குத் தந்தையும் தாயுமாக இருந்த பாதிரியின் சோக மரணம் எதிர்பாராத இடியாக இருந்தது. அந்த ஒரு நாளிலே, இயற்கையில் வெளுமையான அவளுடைய முகம் இன்னும் வெளுத்துப்போய் களையற்றிருந்தது. திடீர் திடீரெனத் தந்தையை நினைத்துக்கொண்டு அவள் அழ ஆரம்பித்துவிடுவாள். அவ்வப்பொழுது ஸயீத் அவளுக்கு ஆறுதல் மொழிகள் கூறுவான். எதிர்காலம் அவளுக்கு ஒரே இருள் மயமாகத் தோன்றியது.

"என் தந்தை சொன்னபடி என்னைச் சீக்கிரமே கன்னிகா மடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுங்கள்!" என்றாள் அவள்.

"அதற்கென்னஅவசரம்ஜோன் அதைப்பற்றியெல்லாம் பிறகு யோசித்துக்கொள்ளுவோம். முதலில் உன்னை பஸ்ராவுக்கு என் தமக்கையிடம் அழைத்துச் செல்கிறேன். அவள் உனக்குத் தாய்போல் இருந்து பார்த்துக்கொள்வாள்!" என்றான் ஸயீத்.

ஜோன் பதில் ஒன்றும் பேசவில்லை. அவளுடைய கண்கள் மீண்டும் எதிரிலே இருந்த மலைத் தொடரை வெறிக்கப் பார்த்த வண்ணம் கண்ணீர் முத்துக்களைச் சிதறிக்கொண்டிருந்தன. ஒருவிதமான அமைதி பரவியிருந்தது அந்த இடத்திலே!

திடீரென அந்த அமைதியைக் கலைத்துக்கொண்டு ஒரு அலறல்! ஒரு பெண்ணின் குரல் அது!

வாளைக் கையிலெடுத்துக்கொண்டு சப்தம் வந்த திசையை நோக்கி ஓடிய ஸயீதின் பின்னே சக்தியற்று ஓட்டமும் நடையுமாக ஜோனும் தொடர்ந்து சென்றுகொண்டிருந்தாள்.

முதலில் ஓடிவந்த ஸயீத் சற்று தூரத்தில் ஒரு பெரிய மரத்தினடியில் இரு குதிரைகள் நிற்பதையும் ஒரு போர்வீரன் கீழே பிணமாக விழுந்துகிடப்பதையும், மற்றொரு போர் வீரன் அலங்கோலமான நிலையில் நின்றுகொண்டிருந்த ஓரிளம் பெண்ணைப் பலவந்தமாகப் பிடித்திழுக்க, அவள் திமிறிக்கொண்டு கதறுவதையும் கண்டு பாய்ந்து சென்று அவனைத் தாக்க ஆரம்பித்தான்.

அவர்கள் ஹென்றியும் மஹ்ஜபீனுமே!

அடி வாங்கிய சிங்கம்போல் சீறி ஸயீதின்மேல் பாய்ந்த ஹென்றி அத்துடன் தன் ஆயுள் முடிந்துவிடப்போவதை உணர்ந்துகொண்டவன்போல அலட்சியமாய்ச் சண்டை செய்தான். இறுதியாக மார்பில் பாய்ந்த வாளைப் பிடித்துக்கொண்டு "ஆ!" என்ற அலறலுடன் மல்லாந்து வீழ்ந்தான்.

இறைவனின் அருள் திறத்தை எண்ணி நன்றி பொங்க நின்ற மஹ்ஜபீன், எதிரிலே ஓடிவந்துகொண்டிருந்த ஜோனைக் கண்டதும் ஆச்சரியத்தோடு அவளையும் ஸயீதையும் மாறி மாறிப் பார்த்தாள். ஜோன் கிறித்தவப் பெண் என்பது அவளுடைய உடையிலிருந்து நன்கு தெரிந்தது. ஸயீதைப் பார்த்ததும் அவன் ஒரு முஸ்லிம் என்பதையும் மஹ்ஜபீன் உணர்ந்துகொண்டாள்.

ஹென்றியைத் தீர்த்துவிட்டு ஸயீத் மஹ்ஜபீனின் அருகில் வருவதற்கும் ஜோன் அங்கு வந்து சேருவதற்கும் சரியாக இருந்தது.

ரீனாட் வசம் சிக்கிய ஹஜ்ஜாஜிகளின் காரவானைச் சேர்ந்தவள் மஹ்ஜபீன் என்று அறிந்தவுடன் ஸயீதுக்கு அஷ்ரபின் நினைவு வந்தது.

"நீங்கள் திப்ரிய்யாவின் பாழ் மாளிகையில் சிறை இருந்தவர்களா?"

"ஆம்!"

"உங்கள் கூட்டத்தில் அஷ்ரப் என்றொரு வாலிபர் இருக்கிறாரல்லவா?"

அஷ்ரபின் பெயரைக் கேட்டதும் வெட்கமும் துக்கமும் அவளுடைய மதிமுகத்தைக் கவிந்துகொண்டதன் காரணம் ஸயீதுக்கு என்ன தெரியும்?

எப்படியோ சமாளித்துக்கொண்டு, அதற்கும் "ஆம்!" என பதிலளித்துவிட்டு, மஹ்ஜபீன் மேற்கொண்டு, அவர்கள் திப்ரிய்யாக் கோட்டைக்குள் அழைத்துச் செல்லப்பட்டதையும் அதன்பின் ஸுல்தான் ஸலாஹுத்தீனின் படைகள் பரங்கியர் மீது வெற்றி கொண்டு திப்ரிய்யாவுக்குள் நுழைந்ததையும் சமயம் பார்த்து ரீனாடின் மெய்க் காவலனான ஹென்றி அவளைப் பிடித்துக் கட்டிக்கொண்டு வந்ததையும் சொன்னாள். ஆனால் மஹ்ஜபீன் வெகு சாமர்த்தியமாக, அஷ்ரபுக்கும் அவளுக்குமிடையே இருந்த அன்புப் பிணைப்பைப் பற்றி ஒன்றும் சொல்ல நேராமல் பார்த்துக்கொண்டாள்.

மேலும் அவள் சொன்னதாவது, "நாங்கள் இந்த இடத்தை அடைந்தபோது ஏற்கெனவே கடும் காயமடைந்திருந்ததாலும் நீண்ட தூரப் பிரயாணத்தின் ஆயாசத்தினாலும் ஹென்றியின் தோழன் செத்து விழுந்தான். அதற்குமேல் ஹென்றி என் கட்டுகளை அவிழ்த்துவிட்டுஅவனுடைய மனைவியாவதற்குச் சம்மதிக்கும்படி என்னைக் கேட்டான். எங்காவது தூரதேசத்துக்கு அழைத்துச் சென்று அங்கு என்னைச் சந்தோஷமாக வைத்திருப்பதாகவும் என் இணக்கத்தைத் தெரிவிக்கும்படி.

யும் வற்புறுத்தினுன். நான் அவனைக் கோபித்துத் திட்டவும் வெகுண்டு என்னிடம் பலாத்காரம் செய்ய முயன்ருன். தக்க சமயத்தில் தாங்கள் வந்து என்னைக் காப்பாற்றியிராவிட்டால் அவ் வஞ்சகனின் வசப்படுவதைவிட சாவதே மேல் என்று என்னுயிரை மாய்த்துக்கொண்டிருப்பேன். அதோடு.........!''

அதற்குமேல் ஒன்றும் பேச இயலாமல் கண்ணீர் பொங்க நின்ருள் மஹ்ஜபீன்.

ஓர் ஆடவனைக் காட்டிலும் ஒரு பெண்தான் மற்றொரு பெண்ணுக்கு நன்கு ஆறுதல் சொல்லக்கூடும் என்று எண்ணிய ஸயீத் ஜோனை மஹ்ஜபீனுக்கு அறிமுகப்படுத்திவைத்தான். கண்ணீர் கண்களிலேயே தேங்கி நிற்க மஹ்ஜபீன் ஜோனை அன்புடன் தழுவிக்கொண்டாள். அத் தழுவல் அந்த இரு அபாக்கியவதிகளுக்குமே ஆறுதல் அளித்தது.

''அஷ்ரபைப் பற்றி இந்த மனிதனுக்கு எப்படித்தெரியும்!'' என்று மஹ்ஜபீனின் உள்ளத்தில் ஏற்பட்டிருந்த ஐயத்தை ஸயீதே தன் கதையைச்சொல்லித் தீர்த்து வைத்தான்.

அதற்கு மேல் சிரமபரிகாரம் செய்துகொண்டு, மூவருமாக அங்கிருந்த குதிரைகளின்மீதேறி திப்ரிய்யாவை நோக்கிப் பிரயாணமாயினர்.

ஃ ஃ ஃ

அத்தனை பேர்களின் துஆ பரக்கத்தினுலோஎன்னவோ, எல்லோரும் நம்பிக்கை இழக்கும்படியான நிலைமையிலிருந்த அஹ்மத் மெல்லக் கண் விழித்தான். ஒரு பக்கத்திலே அஷ்ரபும், மற்றொரு புறம் ஆயிஷாவும் தன் முகத்தையே பார்த்துக்கொண்டிருக்கக் கண்டான், அவன். தன்னுயிர்த் தோழனின் துக்கம் தோய்ந்த முகத்தைப் பார்த்த அஹ்மத், ''பயப்படாதே அஷ்ரப், அல்லாஹ் உதவியால் பிழைத்துக் கொள்வேன்!'' என்ருன்.



ஆயிஷா கண்களைத்துடைத்துக் கொண்டாள்.

மஹ்ஜபீன் மறைந்த செய்தியை அஹ்மது அப்பொழுது அறியலாகாது என்பது ஹக்கீம்களின் கண்டிப்பான உத்தரவு. அவ்விதமே எல்லோரும் சமாளித்துக்கொண்டிருந்தனர். இரவும் பகலும் ஒய்வு ஒழிவின்றி ஆயிஷா அஹ்மதைச் சுற்றிச் சுற்றி வந்து பணிவிடை செய்துகொண்டிருந்தாள். வைத்தியர்களின் மருந்துக்கு மேலாக ஆயிஷாவின் அன்பு நிறைந்த சேவையே அவனைப் பிழைத்தெழச் செய்தது என்று கூறலாம்.

அன்று அஷ்ரப் தன் துக்கத்தை மறப்பதற்காக, கோட்டையை விட்டு வெளிவந்து அவர்கள் முன்பு காவலிருந்த பாழ் மாளிகைக் கருகாமையிலிருந்த குன்றுகளின்பக்கம் உலவிக்கொண்டிருந்தான்.

தூரத்தில் ஒரு ஆணும் இரு பெண்களும் குதிரைகள் மீதமர்ந்து வந்துகொண்டிருந்ததைக் கண்ட அஷ்ரப் அந்தத் திக்கையே பார்த்துக்கொண்டிருந்தான். அவர்களும் மிக அண்மையில் வந்துவிட்டார்கள்.

''அந்த ஆடவனுக்குச் சற்று பின்னுல் வந்துகொண்டிருக்கும் இரு பெண்களுள் ஒருத்தி மஹ்ஜபீன் போல் தோன்றுகிருளே! இன்னெருத்தி கிறிஸ்தவப் பெண்! ஆம் சந்தேகமில்லை! மஹ்ஜபீனேதான்! ஆனுல் அந்த ஆடவன் யார்?''

இவ்வாறு தனக்குள் பேசிக்கொண்டு பரபரப்புடன் எதிர் நோக்கிச் சென்ற அஷ்ரபைக் கண்டதும் மூவரும் குதிரையை நிறுத்திக் கீழிறங்கி அருகில் வந்தார்கள்.

முதலில் ஸயீத் ''அஷ்ரப்'' என்று ஆவலுடன் கூவினுன். ஸயீதை அவனுல் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. முன்பு முகம் நிறைந்த ரோமத்திற்குள்ளிருந்து வெளிவந்துகொண்டிருந்த குரலுக்கும் இப்பொழுதுஅவன் இயற்கையாகப் பேசிய உரத்த குரலுக்கும் எவ்வளவோ வித்தி



யாசமிருந்தது. மஹ்ஜபீனையும் அஷ்ரபையும் மாறி மாறிப் பார்த்து விழித்த அஷ்ரபை நோக்கி ஸயீத் "என்னை உனக்கு அடையாளம் தெரியவில்லையா, அஷ்ரப்! நான்தான் ஸயீத்?" என்றான்.

"ஸயீத்!" என்று ஆவலுடன் அழைத்து அவனைக் கட்டி ஆலிங்கனம் செய்துகொண்டான் அஷ்ரப். அப்பொழுது அவன் பெற்றது இரட்டை மகிழ்ச்சியல்லவா?

அஷ்ரபைக் கண்டு தலையைக் குனிந்துகொண்ட மஹ்ஜபீனைக் கவனித்த ஜோனின் முகத்திலே குறும்பு நடமாட அவளைப் பார்த்துச் சிரித்தாள்.

அஷ்ரபுக்கு மஹ்ஜபீனுடன் அப்பொழுது எப்படிப் பேசுவது எனத் தெரியவில்லை.

அஷ்ரபும் ஸயீதும் பேசிக்கொண்டே முன்னே நடக்க மஹ்ஜபீனும் ஜோனும் அவ்விருவரையும் தொடர்ந்து சென்றனர்.

மஹ்ஜபீன் திரும்பி வந்துவிட்ட செய்தி வெகுவிரைவில் திப்ரிய்யா நகர் முழுவதும் பரவியது. சுல்தான் முதல் அவளைத் தேடுவதற்காக வீடு வீடாய்ச் சென்ற சாதாரண வீரர்கள்வரை எல்லோருக்கும் ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

அஹ்மதின் உடல் தேறுவதைக் கண்டு உள்ளமும் முகமும் மலர்ந்திருந்த ஆயிஷாவுக்கு மஹ்ஜபீனும் திரும்பக் கிடைக்கவும், அவள் தன்னைப்போல பாக்கியசாலி இவ்வுலகிலே யாருமில்லை என்று எண்ணினாள்.

ஜோனுடைய கதையைக் கேட்டறிந்த எல்லோரும் அவள்மீது அனுதாபமும் இரக்கமும் கொண்டு அவள் வேற்று மதப் பெண் என்று சிறிதும் வித்தியாசம் பாராட்டாமல் அவளிடம் மட்டற்ற அன்பு காட்டலானார்கள். இயல்பாகவே நகைச்சுவை நிறையப் பெற்றிருந்த ஜோன், அவர்கள் எல்லோருடைய பிரியத்தையும் எளிதில் சம்பாதித்துக்கொண்டதில் வியப்பொன்றுமில்லை.

இவ்விதமான இன்பம் பொங்கும் சூழ்நிலையில், ராஜ வைத்தியர்களின் விசேஷ சிகிச்சைகளினாலும், ஆயிஷாவின் அன்புப் பராமரிப்பினாலும் புத்துயிர் பெற்று, சில தினங்களிலே பூரண உடற்சுகம் பெற்றெழுந்த அஹ்மதை இப்பொழுது இன்னொரு நோய் பற்றிக்கொண்டது!

ஆயிஷா அவனுடைய உள்ளத்திலே ஓர் அசைக்கமுடியாததிடத்தைப் பிடித்துக்கொண்டாள்.

ஃ ஃ ஃ

முக்கியமாக அஹ்மதின் உடலும் தேறட்டும் எனச் சில தினங்கள் கூடுதலாகவே தாமதித்திருந்த சுல்தான் இடைக்காலத்தில், ஜெரூசலத்தை நோக்கிச் செல்வதற்கான திட்டங்களைப் பூர்த்திசெய்து, வேண்டிய ஆயத்தங்கள் செய்துகொண்டிருந்தார். திமிஷ்கிலிருந்தும் வேறு முஸ்லிம் நாடுகளிலிருந்தும் முஸ்லிம் வீரர்கள் மேலும் வந்துகுவிந்துகொண்டிருந்தனர்.

மீண்டும் வெற்றி விஜயத்துக்குப் புறப்பட்டுமுன்னேறியசுல்தானின் முன்பு நூற்றுக்கணக்கான கோட்டைகளும்ஊர்களும் தாமாகவே சரணடைந்துகொண்டிருந்தன. எதிர்த்தவரும் கோட்டை வாயில்களைப் பூட்டிக்கொண்டு உள்ளே பதுங்கிக்கொண்டவர்களும்கூட முழுசாக ஒரு நாளேனும் தாக்குப்பிடிக்கமுடியாமல் பணிந்துகொண்டிருந்தனர்.

இவ்விதம் வசப்பட்டவற்றுள் இராணுவ, கேந்திர முக்கியத்துவம் வாய்ந்தவை, அக்காத் துறைமுகம் நேப்ளாஸ்ஹைபா, ரம்லா, கைஸரிய்யா, அர்ஸூப், யாபா, பைரூத், ஆகிய நகரங்களாகும்.

பிடிக்கும் இடங்களிளெல்லாம் சுல்தான் செய்த முதல் காரியம் ஆயிரக் கணக்கிலே சிறைகளில் அநியாயமாகக் கிடந்து வதங்கிக்கொண்டிருந்த முஸ்லிம் கைதிகளை விடுதலை செய்வதாகும்.

வசப்படுத்தப்படும் எந்த ஊரிலும் கொள்ளையடிப்பதோ பொதுமக்களுக்கு எந்தவிதமான தீங்கும் இழைப்பதோ கூடாதென சுல்தான் கண்டிப்பான உத்தரவு பிறப்பித்திருந்தார். முஸ்லிம் வீரர்களும் அவருடைய கட்டளைக்கிணங்கி வெகு கண்ணியமாகவே நடந்துவந்தனர். இவ்வாறாகக் கிறிஸ்தவப் பொதுஜனங்களின் நன்றிக்கும் அன்புக்கும் சுல்தான் பாத்திரரானார். தங்களுடைய கொடிய அநீதியையும் சுல்தானுடைய பெருந்தன்மையையும் ஒப்பிட்டுப் பார்த்து அவர்கள் வெட்கித் தலை குனிந்தனர்.

சிற்றூர்களைப் பிடிப்பதற்கென ஸலாஹுத்தீன் தம் படையைப் பல பிரிவுகளாகப் பிரித்து மலிக்குல் அப்ஸல், மலிக்குல் அஸீஸ், மலிக் தகியுத்தீன் இவ்வாறு பலரின் தலைமையிலுமாக பல பகுதிகளுக்கும் அனுப்பிவைத்தார்.

அஸ்கலான் என்னும் துறைமுக நகரம் ஜெரூசலம் நகருக்குச் செல்லும் கடற்கரை மார்க்கத்தில் மிகக் கேந்திரமான இடத்தில் அமைந்துள்ளது. அக்காலத்திலே அது ஒரு பெரிய கோட்டையாகவும் இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த இடமாகவும் விளங்கியது. அஸ்கலானை வசப்படுத்தி வைத்திருக்கும் எவரும் எரூசலம் நகரை எளிதில் தாக்கி வசப்படுத்திவிடலாம் என்ற நிலைமை இருந்ததால் பரங்கியர் அதை நன்கு பலப்படுத்தி வைத்திருந்தனர்.

சுல்தான் ஜெரூசலத்தை நெருங்க நெருங்கப் பரங்கியரின் பரபரப்பு அதிகமாயிற்று. ஹெராக்லியஸ் என்னும் எரூசலத்தின் பிரதம பாதிரியாரின் பிரசாரம் மிகவும் வலுத்தது.

அஸ்கலான் நகரின் இராணுவ முக்கியத்துவத்தை அறிந்திருந்த சுல்தான் முதலில் அக் கோட்டையையே தாக்க வருகிறார் என்று அறிந்திருந்த பரங்கியர் எப்படியும் அதை விட்டுவிடாமல் காப்பது என்று பலத்த ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தனர்.

கிறிஸ்தவரின் பலத்த எதிர்ப்பை எதிர்பார்த்த சுல்தானும் பல பகுதிகளுக்குப் பிரிந்து சென்றிருந்த தம் படைகள் யாவும் அஸ்கலான் அருகில் வந்து சந்திக்கவேண்டுமெனச் செய்திகள் அனுப்பியிருந்தார்.

திப்ரிய்யாச் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்ட அஷ்ரபின் பெற்றோர் முதலானவர்கள் எல்லோரும் சுல்தானுடைய படைகளுடனேயே சென்று கொண்டிருந்தார்கள்.

அஹ்மதைப் போலவே இப்பொழுது அஷ்ரபும் ஸயீதும்கூட சுல்தான் ஸலாஹுத்தீனின் படையிலே தளகர்த்தர்களாக நியமனம் பெற்றிருந்தனர். சேனையிலே இவர்களையன்றி, மன்ஸூர், அல்பஸல், முதலான முதியவர்களும் மற்றும் விடுதலை பெற்ற ஆயிரக்கணக்கான முஸ்லிம் கைதிகளும்கூட இருந்தனர்.

அஸ்கலான் நகரம் வளைத்து முற்றுகையிடப்பட்டது.

சுல்தானுக்கு கெய்ரோ(மிஸ்ரு)விலிருந்து "மஞ்ஜனீக்" எனப்படும் யுத்தக் கோட்டைகள் வந்து சேர்ந்தன.

கோட்டைகளைத் தாக்குவதற்கு தரையிலிருந்து எவ்வளவு வீரமாகச் சண்டையிட்டாலும் போதாது. கோட்டைச் சுவர்மீது இருந்து எதிரிகள் எறியும் அம்புகளுக்கும் கற்களுக்கும் இலக்காகி அழியவேண்டியதுதான்.

எனவே, கோட்டை மீதிருக்கும் எதிரிகளுக்கு நாசம் விளைவிக்க வேண்டுமெனின் அதற்காக அந்த உயரத்திலிருந்து பதிலுக்கு அம்பு எய்யவும் கற்கள் வீசவும் மஞ்ஜனீக் என்னும் கவண் கோபுரங்களை அக் காலத்தில் உபயோகப்

படுத்தினார்கள்.

இரண்டு மூன்று அடுக்குகளைக் கொண்ட அக் கோபுரங்கள் பெரும்பாலும் மரத்தினாலும் சில சமயம் இரும்பினாலும் செய்யப் பட்டுவந்தன. ஒவ்வொன்றும் நூற்றுக்கணக்கான வீரர்கள் போதிய பாதுகாப்புடன் உள்ளே இருப்பதற்கு வசதியோடு கூடிய ஒரு சிறு கோட்டையாகவே இருந்தது. அவற்றைத் தள்ளிச்செல்ல அடியில் சக்கரங்கள் பொருத்தப் பட்டிருக்கும்.

சுல்தானுக்கு வந்தவற்றுள் இரண்டு மரத்தினாலான சிறு சப்பரங்களும் ஒன்று இரும்பினாலான பெரிய மூன்றடுக்கு சப்பரமும்.

அஷ்ரப், அஹ்மத், ஸயீத் மூவரும் இரும்புச் சப்பரத்திலே ஏறியிருந்தார்கள்.

அஸ்கலான் கோட்டையின்மீது அன்று முஸ்லிம்களின் தாக்குதல் ஆரம்பமாயிற்று.

இயற்கையாகவே ஈடிணையற்ற சிறந்த வீரர்களான அஷ்ரப் முதலான மூவரும் அன்றைக்கு என்றுமில்லாத துடிப்புடன் நின்றார்கள். அதற்கு ஒரு முக்கிய காரணமிருந்தது.

சுல்தானின் பரிவாரங்களுடனேயே பிரயாணம் செய்து கொண்டிருந்த ஹஜ்ஜாஜிகளின் கூட்டத்தில் மற்ற பெண்களோடு மஹ்ஜபீன், ஆயிஷா, ஜோன் ஆகிய மூவரும் இருந்தனர்.

கோட்டையிலிருந்து சற்று தூரத்தில் குன்றுகளின் அடிவாரத்திலே அவர்களுடைய முகாம் அமைந்திருந்தது.

அன்றையதினச் சண்டையை மலைமீது ஏறி நின்று காண அம் மூன்று பெண்களும் சுல்தானின் விசேஷஅனுமதி பெற்றிருந்தனர்.

தம் அன்பர்களின் வீர சாகசச் செயல்களைக் கண்டு மகிழ்வதற்காக மலையுச்சியில் அம் மங்கையர் நின்றதை அம்மூவரும் அறிந்திருந்தனர். எனவேதான் அவ்வீரர்கள் மூவரும் அன்று "காற்றிலேறி விண்ணின்றிழிந்தேனும் கோட்டையைப் பிடித்துவிடுவோம்" என்று சூள் கொட்டிக்கொண்டு நின்றார்கள்.

சப்பரத்தின் மூன்று அடுக்குகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவராக நின்றுகொண்டு மேலேவந்து கொட்டிய அம்பு மழைகளைச் சற்றும் பொருட்படுத்தாமல் கேடயங்களினால் தடுத்தவாறு, உடன் நின்று கற்களையும் அம்புகளையும் கோட்டை மதிற்களின்மீது நின்ற எதிரிகளின்மீது பிரயோகித்துக் கொண்டிருந்த தம்வீரர்களுக்குத் தலைமை தாங்கி உற்சாகமூட்டிக் கொண்டிருந்த அம் மூன்று வீரர்களின் வீரத்தையும் பார்த்துப் பூரித்துநின்றார்கள் அப்பெண்கள்.

நன்கு கனத்த பாராங்கல் ஒன்று வேமாகவந்துகொண்டிருந்ததைப்பொருட்படுத்தாது, நின்ற விடம் விட்டசையாமல் அஷ்ரப் அதைத் தட்டித் தடுத்தபோது மஹ்ஜபீனின் இருதயமே நின்று விடும்போலிருந்தது. அஷ்ரபுக்கு ஆபத்து ஒன்றுமில்லை என்று அறிந்த பின்னரே சுய உணர்வு பெற்ற மஹ்ஜபீன், தன் மனத்தினுள்ளே தோன்றிய வியப்பை அடக்கஇயலாமல் "என்ன பலம். என்ன அபாரமான துணிச்சல்." என்றாள்.

"என்ன அழகும்கூட!" என்று சேர்த்துச் சொல்லியவண்ணம் அவளைக் குறும்பாகப் பார்த்துச் சிரித்தாள், ஜோன்.

"நான் அப்படியொன்றும் சொல்லவில்லை!" என்றாள் மஹ்ஜபீன்.

"சொல்லவில்லைதான்; ஆனால் நினைத்ததுண்டு!" என்றாள் ஆயிஷா.

இச்சமயம் அவர்கள் கண்ட ப்பயங்கரமான ஆனால் அதிஅற்புதமான காட்சி அம் மூவரையும் சிலைகளாக்கிவிட்டது.

பதைக்கும் நெஞ்சங்களிலே கைகளை வைத்தழுத்தி மூச்சைப் பிடித்துக்கொண்டு கண்ணிமைக்காமல் கோட்டை வாயிலையே பார்த்து நின்றனர் அவ்விளங் கன்னியர்.

கீழடுக்கில் அஹ்மதும் நடுத் தட்டில் ஸயீதும் உச்சியில்அஷ்ரபுமாக நின்றிருந்தனர்.

கோட்டை மதில்மீதிருந்த பரங்கியர் தீப் பந்தங்களை ஏராளமாக சப்பரங்களின்மீது எறிந்துகொண்டிருந்தார்கள். மரத்தினாலான கோட்டைகள் ஒவ்வொரு பக்கம் தீப்பற்றி எரிவதும் முஸ்லிம் வீரர்கள் அவற்றை அணைப்பதுமாக இருந்தார்கள்.

அஷ்ரப் முதலியோர் ஏறியிருந்த 'மஞ்ஜனீக்' இரும்பினால் ஆனதால் தீப் பந்தங்கள் அதை ஒன்றும் செய்யமுடியவில்லை.

அஸ்கலான் கோட்டை மதிலின் உயரம் 36 அடி. இரும்புச் சப்பரத்தின் உயரமோ 48 அடி.

கீழ்த் தட்டிலிருந்த அஹ்மதின் கட்டளைக்கிணங்க சுமார் 500 வீரர்கள் சேர்ந்து அதைத்தள்ளிக் கொண்டுபோய் கோட்டை வாயிலின் அருகே நெருக்கி நிறுத்தினர்.

மதிலருகில் மஞ்ஜனீக் நெருங்கவும் "அல்லாஹு அக்பர்" என்ற ஒலியை எழுப்பிக்கொண்டு சப்பரத்தின் மேல் தட்டிலிருந்து பாய்ந்து சென்று—இல்லை, பறந்து— எதிரிகளின் மத்தியில் குதித்தான் அஷ்ரப்!

இந்த சாகசச் செயலைச் சற்றும் எதிர்பாராத எதிரிகள் விண்ணிலிருந்து இறங்கியவன் போலக் குதித்த அஷ்ரபைப் பார்த்துக் கண நேரம் இது மனிதன்தானோ, பிசாசோ என்று திகைத்து நின்றனர். கேடயம் ஏந்திய அஷ்ரப் பாய்ந்து பாய்ந்து எதிரிகளை வெட்டி மடித்துக்கொண்டிருந்தான்.

அஷ்ரபுடன் நின்ற சாதாரண முஸ்லிம் வீரர்கள் முதலில் அவனுடையசெயல் பைத்தியக்காரத்தனமானது என்றே எண்ணினார்கள். ஒரு நொடியில் எதிரிகள் அவனைக் கொன்று மதிலுக்கு வெளிப் பக்கம் எறிந்துவிடுவார்கள் என்று அவர்கள் பயந்தார்கள். ஆனால் அடுத்து அஷ்ரபின் வீரத்தைக் காணக் காண அவர்களின் உடல்களிலும் முறுக்கேறிக் கொண்டிருந்தது.

அஷ்ரப் கோட்டை மதில்மீது பாய்ந்ததையும் தனியே சண்டையிடுவதையும் பார்த்த ஸயீத் வேகமாக மேல் தட்டிற்கு ஓடி உச்சிக்குச் சென்று தக்பீர் முழக்கத்துடன் தானும் கோட்டைமீது பாய்ந்தான். கீழ்த் தட்டில் நின்ற அஹ்மதின் தலைமையில்கோடரிகளால் வாயிற் கதவைக் கோடரிகளாலும் பெருங் கடப்பாரைகளாலும் முஸ்லிம் வீரர்கள் தகர்த்துக் கொண்டு நின்றனர்.

தம் தோழர்கள் இருவரும் மதில்மீது தாவிவிட்ட செய்தி யறிந்த அஹ்மதும் மேலேறி ஓடிப் பாய்ந்தான்.

அதற்கு மேல் உணர்ச்சி வசப் பட்டவர்களாய் ஒவ்வொருவராக இருநூறு முஸ்லிம் வீரர்கள் பொத் பொத்தெனக் குதித்து எதிரிகளை அவர்களுடைய கோட்டைக்குள் சென்று வீழ்த்திக் கொண்டிருந்தார்கள்.

முஸ்லிம் வீரர்களின் இவ்விதமான வீரச் செயலைக் கிறிஸ்தவர்கள்தம் கண்களால் நம்பமுடியவில்லை.

அதற்குமேல் துணிந்து எப்படியாவது இவ்விருநூறு பேரையும் ஒவ்வொருவராய்க் கொன்று கீழே தள்ளிவிடலாம் என்ற எண்ணத்தோடு எல்லோரும் அப் பகுதியைச் சூழ்ந்துகொண்டார்கள்.

வெகுநேரம் இவ்விதச் சண்டை நடந்துகொண்டிருந்தது. நேரம் செல்லச் செல்லத் தாக்குப்பிடிக்க முடியாமல் முஸ்லிம் வீரர்கள் களைப்படைந்து கொண்டிருந்தார்கள். ஒருசிலரைத் தாக்கி வெட்டிக் கீழே தள்ளுவதிலும் பரங்கியர் வெற்றிகாணஆரம்பித்தனர்.

அஷ்ரபையும் அவனிரு தோழர்களை மட்டும் அணுக அஞ்சிக் கொண்டே இருந்தார்கள் அவர்கள். எனினும் பாக்கியாக நின்ற முஸ்லிம் வீரர்களும் தீர்ந்துவிட்டால் அவர்கள் மாத்திரம் என்ன செய்வார்கள்?

இந்தத் தீரர்களின் சூரச்செயல்களையெல்லாம் சுல்தானும் தூரத்திலிருந்து பார்த்துப் பரவசம் அடைந்தவராய், கோட்டையைச் சூழ நின்ற மற்ற படைப் பிரிவுகளுக்கு வேண்டிய உத்தரவுகள் அனுப்பிக்கொண்டேயிருந்தார்.

கோட்டை வாயிற் கதவுகள் இடிபட்டு நொறுங்கி விழப் போகும் தருவாயிலிருந்தன.

மலிக்குல் அப்ஸலின் படை இப்பொழுது கோட்டை வாயிலை அடைந்தது.

கதவில் சிறு வழி ஏற்படவுமே மலிக்குல் அப்ஸலும் அவனைத் தொடர்ந்து மற்ற இஸ்லாமிய வீரர்களும் உரத்த கோஷங்களைக் கிளப்பிக்கொண்டு மடமடவென உள்ளே பிரவேசிக்கலாயினர்.

சிறிது நேரத்தில் வாயிற் கதவுகள் முழுவதும் துவம்சமாக, ஆயிரக்கணக்கில் வீரர்கள் உள்ளே புகுந்தார்கள்.

மலிக்குல் அப்ஸல், விரைவாக அஷ்ரப் ஆகியோர் போரிட்டுக் கொண்டிருந்த மதிற் பக்கம் ஏறி வரவும் நிலைமையுணர்ந்த கிறித்தவ வீரர்கள் விழுந்தடித்து உயிர் பிழைக்கத் தப்பியோடினர்.

வெகு சீக்கிரம் அஸ்கலான் கோட்டை இஸ்லாமியர் வசமாயிற்று.

அஸ்கலானிலிருந்து ஜெரூசலம் செல்ல விரும்பிய ஆயிரக்கணக்கான கிறிஸ்தவர்களுக்கு அவ்வாறே அனுமதி தந்தார் சுல்தான். இவ்விதமான தயாளச் செயலானது, ஜெரூசலத்தைப் பிடிக்கும்போது தம்முடைய சிரமத்தை வெகுவாக அதிகரிக்கும் என்பதைக்கூட அவர் பொருட்படுத்தவில்லை. முஸ்லிம் வெற்றி வீரர்களின் பெருந்தன்மையான நடத்தையைக் கண்டு மனமாற்றமடைந்து நூற்றுக்கணக்கான கிறிஸ்தவர்கள் வலிய வந்து இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டிருந்தார்கள்.

மறுநாள், ''அஸ்கலான்வெற்றி வீரர் இந்தப் பக்கம் வரவே இல்லையே!'' என்று சொன்ன ஜோனைப் பார்த்து, மஹ்ஜபீன் ''ஸயீதுக்கு இந்த வெற்றியில் பங்கில்லையா?'' என்ருள்.

''அதுதானே!'' என்ருள் ஆயிஷா.

''அஹ்மது பற்றிச் சொல்லவில்லையே என்று ஆயிஷாவுக்கு வருத்தமாக இருக்கும், மஹ்ஜபீன்!'' என்ருள் ஜோன்.

''அஸ்கலான் வெற்றிக்கு மூவரும்தான் பொறுப்பு!'' என்ருள் மஹ்ஜபீன் பெருமிதத்துடன்.

மனத்துள் உள்ளதை மறைக்கத்தெரியாத ஆயிஷாவின் முகம் அப்பொழுதுதான் மலர்ச்சியடைந்தது.

''ஜோன் நீஎப்பொழுது முஸ்லிமாகப் போகிருய்?'' என்று கேட்டாள் ஆயிஷா.

ஜோனின் முகம் சட்டென்று மாறுதலடைந்தது.

''நான் ஏன் மதம் மாறவேண்டும். என் மார்க்கத்தை நான் விடமாட்டேன்!'' என்ருள் ஜோன்.

''அப்படியானல் ஸயீதின்மீது உனக்கு அன்பில்லையா? அவரை நீ விவாகம் செய்துகொள்ளப்போவதில்லையா?'' என்று ஆயிஷா படபடப்புடன் கேட்டாள்.

''ஸயீதை நான நேசிக்கிறேன். இல்லையென்று சொல்லவில்லை. அதற்காக நான் என் தந்தையின் மதத்தை விட்டுவிடவேண்டுமா? நான் கல்யாணம் செய்துகொள்ள மாட்டேன். கன்னிகா மடத்தில் சேர்ந்துவிடப்போகிறேன்!'' என்ருள் ஜோன்.

அவளுடைய பதில் ஆயிஷாவுக்கும் மஹ்ஜபீனுக்கும் ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் அளித்தது. (தொடரும்)

# கவிதைச் செல்வம்

''எம். ஏ.''

உலக இலக்கியத்தை உரைநடை, கவிதை, நாடகம் என்று முப்பெரும் பிரிவாகப் பிரித்துள்ளனர் இலக்கிய வரலாற்ருசிரியர்கள். உலக இலக்கியத்தின் மீது நாம் மேலெழுந்தவாரியாகக் கண்ணேட்டமிட்டுப் பார்த்தால், அதன் ஆரம்ப காலத்தில் கவிதையும், மத்திய காலத்தில் நாடகமும், நிகழ் காலத்தில் வசனமும் மிகைத்து நிற்பதைக் காணலாம். இவற்றிலெல்லாம் இலக்கியத்தைக் கவிதையுருவில் வடிப்பதுதான் கடினமானது என்பது உலகு கண்ட முடிவு.

இலக்கிய வளர்ச்சியின் முதற்படியிலே எவ்வாறு கவிதை இடம் பெற்றது என்பது ஒரு ரசமான ஆராய்ச்சியாகும். ஆதி மனிதன் தன் அன்ருட வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்திசெய்வதற்குஇயற்கையோடு போராட்டமே நடத்திவந்தான். இந்தப் போராட்டத்திலே வெற்றிகண்டு அவன் ஓய்வு பெறும்பொழுது, நிறைவு பெற்ற அவன் நெஞ்சம் மகிழ்வுப் பெருக்கிலே திளைத்தது. அதன் விளைவாகக் கவிதையும் அவன் கருத்திலே உதித்தது. வெள்ளை கீறும்முன் விழித்தெழுந்து, செஞ்ஞாயிறு மஞ்சள் குளித்து மலை வாயிலில் விழும் வரை அவன் பட்ட பாடெல்லாம் அந்தக் கவிதையின் இனிமையிலே கரைந்து மறையும் வரை அவன் பாடினன். இயற்கையின் காலமாறுதல்களால் அதுபெறும் புதுப்புது வனப்பையும் அவன் பாடினன். வசந்தத்தின் தென்றல் சுமந்துவரும் நறுமணத்தை நுகர்ந்து, ரசித்துப் பாடினன். மாரியிலே மரமும் செடியும் பூத்து மலர்ந்து சிரித்து நிற்பதைக் கண்டு பரவசப்பட்டுப் பாடினன். புதுப்புனலை அள்ளி வீசி, துள்ளி ஓடிச் செல்லும் ஆற்றையும், ஓடையையும் கண்டு பாடினன்.

இவ்வாறு அவன் பாடியதை எல்லாம் எழுதிவைக்க முடிந்ததா? இல்லை. ஏன்? பூமியைக் கிள்ளி விதைப்பதற்கும், அறுப்பதற்கும் கருவி செய்த அவன்; வன விலங்குகளை வேட்டையாடுவதற்குரிய கருவிகளைச் செய்த அம் மனிதன், தன் கருத்துக்களை எழுத்து வடிவிலே ஆக்குவதற்கு வேண்டிய கருவிகளைச் செய்யும் திறம் பெற்றவனுக இல்லை. ஆகவே தன் கருத்துக்களையெல்லாம் நினைவிலே இடம் பெறும் வகையிலே, இலகுவாக இராகத்தோடு பாடக்கூடிய கவிதைகளாக வெளியாக்கினன். உரைநடையை விடக் கவிதை நம் உள்ளத்திலே நிலைத்திருப்பதை நாம் இன்றும் உணர்கின்ருேம். உழுதுண்டு 'வாழ்ந்து மற்ருேர் தொழுதுண்டு நிற்கக்' காணும் உழவர்குடி மக்களின் உள்ளத்திலே இன்றும் தெம்மாங்கும், ஏற்றப் பாட்டுக்களும் அரைகுறைக் கவிதை உருப் பெற்று வாழக் காண்கின்ருேம்.

"வண்ண மடவார் தம் வளைக் கரங்கள் ஒலியினிலும், சுண்ண மிடிப்பார் தம் சுவை மிகுந்த பண்களிலும்" மனதைப்பறிகொடுத்த கவிஞன் சுண்ணமிடிக்கும் பெண்களின் இலக்கண வரம்புக்குட்படாப் பண்களிலும் கவிதையைக் காண்கிறான். "மூங்கில் இலைமேலே தூங்கும் பனி நீர்" கூட அவன் சிந்தனையைக் குளிர்வித்து அதிலே கவிதை வித்தை ஊன்றும் மழை நீராகிவிடுகிறது.

ஆரம்பத்திலே இயற்கையில் லயித்து அதன்வசந்தகாலத்து வனப்பையும், மழை காலத்து எழிலையும், கோடை காலத்துக் கொடுமையையும் பாடிய மனிதன், தன் சுற்றுச் சார்பிலே வாழும் பிற மக்களின் வாழ்வையும் படிப்படியாக ஆராயத் துவங்குகின்றான். அவர்களிலே தீரச் செயல்கள் புரிந்த வீரர்களையும், வீராங்கனைகளையும் காண்கிறான். தோள் வலி கொண்டு வேலொடு பொருதும் அவர்களின் வீரச் செயல்கள் அவன் சிந்தனையை ஈர்க்கின்றன. அவ் வீர மக்களின் அரிய சாதனைகளையும் கவிதைகளாக யாத்துப் பாடித் திரிகிறான். பின்னர் மனித வாழ்வு சமுதாய வாழ்வாகப் பரிணமிக்கும்பொழுது, அந்த சமுதாயத்தைப் பின்னணியாக வைத்துக் கவிதைகளை யாக்கின்றான். இந் நிலையை எய்தியதும் அவன் தன் கவிதைகளுக்குக் குறிக்கோள்களை அமைத்துக்கொள்கிறான். இலட்சியக் கவிதைகளைப் புனைய ஆரம்பிக்கின்றான். இப்பொழுது கவிதையின் இலக்கணத்தையும், இலட்சியத்தையும் நாமும் ஆராய்வோம்.

"பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட வேண்டும்" என்று பாடினார் அமரகவி பாரதி. கவிதை, வையத்து மக்களெல்லாம் வளமாக வாழ்ந்திட வேண்டும் என்ற உயர் நோக்கோடு அமைய வேண்டுமென்பது கவிஞரின் கருத்து. கவி இக்பாலும் "கவிதை மனித வாழ்வுக்குப் பணி செய்யும் சேவகனாக இருத்தல் வேண்டும்" என்று கூறியிருக்கின்றார். மனித வாழ்வுக்கு வளம் செய்யும் கருத்தினை அழகிய முறையிலே கூறுவது கவிதை. இத்தகைய கவிதை, நெஞ்சத்திலே இடம் பெற்று, நிலை பெற்று இருக்க வேண்டுமானால் அது விரிந்த கருத்துக்களை சுருங்கச் சொல்லி விளங்கவைக்கவேண்டும். "அணுவைத் துளைத்து ஏழு கடலைப் புகுத்தி குறுகத் தறித்த" இருப்பதினால்தானே குறளும் இன்று இலக்கிய உலகிலே சிறந்ததொரு இடம் பெற்று இலங்குகிறது. ஆக உயரிய கவிதை சீரிய கருத்தைக் கொண்டதாக இருக்க வேண்டும்; அழகிய முறையிலே அக் கருத்தைச் சொல்லவேண்டும்; சொல்வதைச் சுருங்கச் சொல்லவேண்டும். இந்த இலக்கணத்துக்கு இயைந்து நிற்கும் ஓர் அழகிய கவிதையை நாம் இப்பொழுது பார்க்கலாம்.

உலகத்தை உய்விப்பான் வேண்டி ஓர் அரும்பெரும் தலைவர் உதிக்கிறார். அவர் வருகையைப்பற்றி நூற்கள், நூற்களாக வரையப்படுகின்றன. அவர் பிறப்பின் சிறப்பைப் பற்றி மாபெரும் நூற்கள் எழுதப்படுகின்றன. நம் கவிஞரும் இம் மாபெரும் தலைவரின் மாண்புறு பிறப்பைப் பற்றிச் சிந்திக்கிறார். அவருக்குத் தம் பாட்டுடைத் தலைவரின் பிறப்பு சில அரிய உவமைகளை நினைவூட்டுகின்றது. அந்த உவமைகளின் துணைகொண்டு, தம் சிந்தனையைக் கவிதை உருவிலே வடித்தெடுக்கின்றார். தம் சிந்தனையின் பயனைக் கவிதை வடிவிலே நமக்குத் தருவதற்கு முன்னர் சில அரிய காட்சிகளை நம் கண்முன்னே தோற்றுவிக்கிறார்.

முதலில் வெப்பத்தால்வெதும்பிடும் வெய்யோனை நம் கண்முன்னே நிறுத்துகிறார். பொன்னையும் உருக்கும் கடுமையுடன் வெய்யில் காய்கிறது. அந்த வெம்மையிலே நடந்துசெல்லும் பாதசாரியின் தேகத்தை உஷ்ண அலைகள் தாக்குகின்றன. பளபளக்கும் அகோர வெய்யிலின் பிரகாசம் அவன் கண்களையும் கூசச்செய்கின்றது. வெகுதூரம் நடந்து வந்த களைப்பினால் அலுத்த உடலில் வியர்வையும் புழுதியும் கலந்து குழைத்த மண் போல அப்பிக்கொள்ளுகிறது. நீர் வேட்கையால் நா உலர்ந்து உதடுகள் வெடித்துவிடுகின்றன. கூசிய கண்களுக்குத் தொலைவில் 'பானுவின் கதிர்கள்' பூமியில் கலந்து ஓடி நீர்ப் பெருக்குப் போன்ற பிரமையை உண்டாக்கி அண்மையில் சென்றவுடன் ஏமாற்றத்தையும், ஏக்கத்தையும் அளிக்கின்றன.

இப்படி அயர்ந்து அலுத்துச் செல்லும் பிரயாணிக்குத் திடீரென்று பூத்துக் குலுங்கும் ஒரு சோலை தென்படுகின்றது. பச்சைப் பசேலென்று மரங்களில் அடர்ந்து வளர்ந்திருக்கும் இலைகளும், இலைகளினூடே புன்சிரிப்புக் காட்டும் பன்னிறப் பூக்களும், நறுமண மலர்களும் "வா, வா" என்று அவனை அழைக்கின்றன. சோர்வுற்ற அவன் உள்ளமும் உடலும் இவ்வினிய காட்சியைக் கண்டு துள்ளிக் குதிக்கின்றன. அச் சோலையிலே நாலா பக்கமும் கிளைகளைப் பரப்பிப் படர்ந்து நிற்கும் மர நிழலின் கீழே "குளு குளு" என்று தென்றல் வீச அப்படியே அமர்ந்துவிடுகின்றான். அவன் பெறும் இன்பத்தை அனுபவித்தாலல்லவா தெரியும்?

கவிஞர் நம் கண்முன்னே காட்டும் முதற் காட்சி இது. அடுத்த காட்சிக்கு வருவோம்.

அமைதி குலைந்து, நியதி ஒழிந்த ஒரு நாட்டைக் கவிஞர் காண்பிக்கிறார். செல்வத்தோடு, கலைப் பண்போடு, அமைதியோடு வாழ்க்கை நடத்தும் மக்கள்தம் நாடு பொன் கொழிக்கும் நாடாக, வளம் செறியும் நாடாகத் திகழுமென்பதில் ஐயமில்லை. ஆனால் மக்களை அமைதியோடு அன்பு வாழ்வு வாழச் செய்வதற்குத் தகுந்த அரசியல் அமைப்புத் தேவை. இதற்கு நேர் மாறாகத் திறமையற்ற, வலிவற்ற, தகுதியற்றஆட்சி இருக்குமாயின் அமைதி எங்கே இருக்கும்? ஒழுக்கமும் உயர்வும் தான் எங்கே இருக்கும்? கொள்ளையும், கொலையும் பெருகும்.

பொய், சூது, தீமை எல்லாம் அரணியத்திற் பாம்புகள்போல் மலிந்து வளர்ந்தோங்கும்" மக்கள் கலை வாழ்வு வாழமாட்டார்கள்; கொலை வாழ்வுதான் வாழ்வார்கள். உயிரை, உடைமையை, உற்றார் உறவினரை எப்பொழுது இழக்க நேரிடுமோஎன்று கலங்கி வாடும்பொழுது கலையை எங்கே கவனிப்பது? நாடு கொடும் பிணியால் பீடிக்கப்பட்ட ஓர் அனுதை போலக் காட்சியளிக்கிறது.

நாட்டைப் பீடித்திருக்கும் வியாதிக்குத் திடீரென்று ஓர் அருமருந்து கிடைத்துவிடுகிறது. ஓர் உத்தம புருஷர் ஆட்சி பீடத்துக்கு வந்துவிடுகிறார். அன்பால், கருணையால், பெருந்தன்மையால் நாட்டை அற வாழ்வு வாழச் செய்கிறார். பஞ்சமும், பிணியும் பரந்து நின்ற நாட்டில், "கன்னலும், தேனும், கனியும், இன்பாலும், செந்நெலும்" செழித்துப் பெருகுகின்றன. கலை இழந்திருந்த நாடு, தலைசிறக்க வாழ்கிறது. துன்பத்தால் துயருற்றிருந்த மக்கள், வறுமையால் வாடி நின்ற மக்கள், நேர்மையற்றவர்களின் நீசப் போக்கால் நெஞ்சுடைந்து நின்ற மக்கள்தம் உள்ளம் இப்பொழுது இன்பத்தால் துள்ளத்தானே செய்யும்.

இரண்டாம் காட்சி முடிவடைந்தது; மூன்றாவது காட்சியைக் காணக் கவிஞர் அழைக்கின்றார். சென்று பார்ப்போம்.

ஒரு காலத்தில் செழிப்புற்றிருந்த நிலம், இப்பொழுது சாவு புகுந்த வீடெனத் தோற்றமளிக்கிறது. வான் மழையில்லாது வரப்பும், வாய்க்காலும் வரண்டு கிடக்கின்றன. பச்சைப் பசேலென்றிருந்த பூமி, பறவைகளுக்குக்கூட உணவளிக்கமுடியாத பாழ் நிலமாகிவிட்டது. காற்றோடு குலாவிய கடி மலர்கள் கருகி மண்ணோடு மண்ணாகிவிட்டன. பச்சை மரகதங்கள்போல மரங்களிலே துளிர்த்து நின்ற பைந்தளிர்கள் உலர்ந்து, உதிர்ந்து, சருகாகிக் குப்பை போலக் குவிந்து கிடக்கின்றன. "இனிய பொழில்களும், நெடிய வயல்களும்" மணல் மேடிட்டுக் கிடக்கின்றன. எங்குநோக்கினும் வரட்சி; ஒருதுளி மழைவிழாதா என்று மக்கள் ஏங்கி நிற்கின்றார்கள்.

திடீரென்று வானம் மின்ன ஆரம்பிக்கின்றது. மின்னல் துணைக்கு இடியையும்அழைத்து வருகின்றது. குவிந்து கிடந்த இலைகளும் குழைகளும், குளிர்ந்த காற்றால் விரட்டப்பெற்று அந்தரத்திலே ஆடுகின்றன. மெதுவாகத் தூரத் துவங்கிய மழை "சோ" எனக் கொட்டுகிறது. ஆறெல்லாம் நீரோடி, அணையெல்லாம் உடைந்தோடி வெள்ளம் பாய்கிறது. "அலையெறிந்து திரைகடலென வரும் நதி" என்பது போல—கடலெழுந்து வருவதற்கொப்ப வெள்ளத்தைச் சுமந்துகொண்டு வேகமாக ஆறுகள் ஓடுகின்றன. "தடமும், ஏரியும், வாவியும், கழனியும்" நீர் நிறைந்துவிட்டன. தோட்டங்களெல்லாம் புதுப் புனல் பெற்று, புது மணம் கமழ்கின்றன. காண்பவரெல்லாம் கண் குளிர, மனம் குளிர இக்காட்சியைக் கண்டு களிப்பெய்துகின்றனர்.

கடைசியாக ஒரு தோற்றம். இப் பரந்த உலகில் பலதரப்பட்ட மக்களும் பார்த்துப் பரவசமடையப் பற்பல காட்சிகள் இருக்கின்றன. நீல வானையும், அலை வீசும் கடலையும், மின்னும் விண்மீனையும், தண்ணென எரியும் நிறை மதியையும், இன்னிசை எழுப்பும் பன்னிறப் பறவைகளையும், கன்னியர்தம் பவழச் செவ் வாயையும் கண்டு களிக்கக் கண்ணொளி உதவுகிறது. கண்ணை இழந்தால் எல்லாம் ஒரே காட்சியாக இருக்கும்—மாறாத காட்சி, இருட்டுக்காட்சி! இந்தக் கண்களைக் காணவைப்பதற்கு வெளியே இருக்கும் ஒளி துணை செய்கிறது. உலக ஒளி மறைந்துவிட்டால்—? உலகமே இருண்டுவிடும். எங்கும் ஒரே அந்தகாரம்—வஞ்சகனின் நெஞ்சம் போல. மனைவியைப் பார்க்கவோ, மக்களைக்கண்டு மகிழவோ முடியாது. அலை கடலுக்கும் நிறை மதிக்கும் வித்தியாசமில்லாமல் இருட்டு உலகைக் கவ்விக் கொள்ளும்.

இந் நிலையில் இருண்டு கிடக்கும் உலகின் ஒரு மூலையில் மீண்டும் ஓர் ஒளி மெதுவாக எழுகிறது. ஒரு கோணத்திலே உதித்த அச் சிறு ஒளி மெல்ல மெல்ல உலகெங்கணும் படர்கிறது. இருட்டுடன் இணைந்து போன கண்கள், உதித்துவரும் ஒளியிலே குளித்தெழுகின்றன. இருட்டு உலகிலிருந்து ஒருமட்டும் விடுதலை கிடைத்தது. முன்பு பக்கத்தில் நிற்பவரைக்கூடப் பார்க்கமுடியாமலல்லவா போய்விட்டது? விண்மீனையும், உதிக்கும் கதிரையும் கற்பனைதானே செய்ய நேரிட்டது என்று நினைத்து இன்பப் பெருமூச்செறிகிறான் இருட்டு உலகிலிருந்து, ஒளி வட்டத்திற்கு வந்த மனிதன்.

இப்பொழுது கவிஞர் நமக்குத் தனித் தனியே காணத்தந்த நான்கு காட்சிகளையும் ஒன்று சேர்த்து, உற்றுக் கவனிப்போம்.

அயர்ந்து அலுத்துவந்த பிரயாணியை படர்ந்த நிழல் பரவசப்படுத்திற்று. கொலையும் கொள்ளையும் மலிந்துநின்ற நாட்டிற்கு இவற்றைப் போக்கும் அருமருந்தொன்று கிடைத்தது. வரண்டுகிடந்த நிலத்திற்கு வானமழை உதவிற்று; இருண்டுகிடந்த உலகிற்கு எங்கோ தோன்றிய மணிவிளக்கு ஒளி தந்தது.

ஆனால், ஒரு மனிதரே குளிர் நிலவாகவும், அருமருந்தாகவும், செழு மழையாகவும், மணிவிளக்காகவும் உதவிடும் தன்மை படைத்தவராக உதித்திடும் பொழுது, அவர் பெருமையை என்னென்றுரைப்பது? தம்முடைய பாட்டுடைத் தலைவர் இத்தகைய பண்புகளைப் பெற்றதாகச் சொல்லி, தம் கற்பனை தேர்ந்தெடுத்த உவமைகளைக் கூறி, தம் சிந்தனையைக் கவிதையிலே வடித்தெடுக்கிறார் சீறாப் புராணம் இயற்றிய சீருயர் கவிஞர் உமறுப் புலவர். மேலே விளக்கம் பெற்றிருக்கும் உவமைகளை நினைவில் வைத்துக்கொண்டு அந்த அரிய கவிதையைப் படித்துப் பார்க்கலாம்.

"பானுவின் கதிரால் இடருறும் காலம் படர்தரு தரு நிழலெனலாய்,
ஈனமும், கொலையும் விளைத்திடும் பவநோய் இடர் தவிர்த்திடும்
அருமருந்தாய்
தீனெனும் பயிர்க்கோர் செழுமழை எனலாய்; குறைஷியின் திலதமே
எனலாய்

மானிலம் தனக்கோர் மணிவிளக்கெனலாய்
முஹம்மது நபி பிறந்தனரே!"
ஒளி சிந்துமாக!

என்று உலகை உய்விக்கவந்த உத்தமத் திரு நபியின் பிறப்பின் சிறப்பை உவகை பொங்க, உவமை சிந்த வர்ணிக்கிறார் உமறுப் புலவர்.

அமைதியான மனித சிந்தனை அழகிய உருப்பெறும்பொழுது, ஆது இசையும், இனிமையும், உவமையும், உயர்வும் கொண்ட உன்னத காவியமாகிறது. அத்தகைய காவியங்கள் எந்த நாட்டு மக்களால் இயற்றப்பட்டாலும் சரி, எம்மொழியிலே யாக்கப்பட்டாலும்சரி, எந்தக் காலத்திலே எழுதப்பட்டாலும்சரி அவை உலக மக்களின் பொது உடமையாகும். ஹோமரின் 'ஒடவி'யும், மில்தனின் 'சுவர்க்க நீக்க'மும், கெத்தேயின் 'பாஸ்டும்' உமர்கய்யாமின் 'ருபாஇயாத்து'ம் காளிதாசனின் 'சாகுந்தல'மும், கம்பனின் 'இராமாயண'மும், 'இளங்கோவின் சிலப்பதிகாரமும் உமறுப் புலவரின் 'சீறா'வும், இக்பாலின் 'அஸ்ராரே குதி'யும், தாகூரின் 'கீதாஞ்சலி'யும் உலகத்தின் பொதுச் சொத்து. சிந்திக்கும் திறன் படைத்த, சீரார் கவிஞர்களின், கருத்துக் கருவூலம் இக் கவிதைகள். "பாட்டின் திறத்தாலே இவ் வையத்தைப் பாலித்திட வேண்டும்" என்ற உயர் நோக்கோடு, உலகை வளம்பெறச் செய்யவேண்டும் என்ற பேரிலட்சியத்தோடு புனையப்பெற்ற இக் கவிதைச் செல்வங்கள் மக்கள் குலத்தின் வற்றா நீரூற்றுக்கள்; தூண்டா மணி விளக்குகள். இவை மனிதனின் முன்னேற்றப் பாதையிலே என்றென்றும்








"ஜே எம்"

நான் அவள் கண்களை உற்று நோக்கினேன். அங்கே வழக்கமான குறுகுறுப்பு இல்லை. அவளது கன்னங்களிலே இளமைக் கவர்ச்சி அழிந்து வ்ந்தது. இதயத்துடிப்பு மட்டும் வேகமாக இருந்ததை எனது 'ஸ்டெதாஸ்கோப்' காட்டியது. மீண்டும் அவளது கண்களை உற்று கவனித்தேன். அவள் கண்களிலே நீர் முட்டிக்கொண்டு வந்தது. அவள் உதடுகள் துடித்துக்கொண்டிருந்தன.

பக்கத்திலிருந்த மருந்து பாட்டிலை எடுத்து கிளாஸில் கொஞ்சம் மருந்தை ஊற்றினேன்.

"காமிலா...எங்கே இந்த மருந்தைக் குடித்துவிடு."

அவள் வாய் திறக்கவில்லை. அப்படியே படுத்திருந்தாள்.

"ஏன் காமிலா...மருந்துபிடிக்கவில்லையா?"

"மச்சான்..." அவள் இதழ்கள் அசைந்தன. தொண்டை கரகரத்தது. "மச்சான்...எனக்குத் தெரியும் இந்த மருந்தெல்லாம் என் வியாதியை சொஸ்தப்படுத்தாதென்று...நான் பிழைக்கமாட்டேன்." அவள் குரலில் உறுதி தொனித்தது.

"அப்படிச் சொல்லாதே காமிலா...நீ சீக்கிரம் சௌகரியமடைந்துவிடுவாய்... அதன்பிறகு உனக்குக் கல்யாணம். நானே உனக்கு மாப்பிள்ளையைத் தேடி கலியாணம் செய்துவைக்கிறேன். ஆமாம்" நான் சிரித்துக் கொண்டே சொன்னேன்.

அவள் இதழ்களுக்கிடையே முறுவல் தவழ்ந்தது. ஆனால் அந்த முறுவலிலே களையில்லை.

"மச்சான், எனக்கு இனிமேல் கலியாணமா...?" அவள் திரும்பிப் படுத்துக்கொண்டாள்.

"சரி...காமிலா, நான் மறுபடியும் நாளைக்கு வருகிறேன். இந்த மருந்தைச் சாப்பிடு. தைரியமாக இரு. மனதைக் குழப்பிக்கொள்ளாதே" வழக்கம்போல சொல்லிவிட்டு 'ஹான்ட் பாக்'கை எடுத்துக்கொண்டு வெளியே வந்தேன்.

"ஏன் காலித்! காமிலாவுக்கு உடம்பு எப்படி இருக்கிறது" என் மாமா—காமிலாவின் தந்தை—ஆர்வத்தோடு கேட்டார். மாமி பக்கத்தில் நின்றுகொண்டிருந்தார்.

"இரண்டொரு தினங்களில் சரியாகிவிடும். கவலைப்படவேண்டாம்" நான் நிதானமாகச்

**டாக்டர் காலித் காமில்லாவை உள்ளன்புடன் நேசித்தார். ஆனால் சமுதாயச் தருவிலே புல்லுருவிபோல் பாய்ந்துவிட்ட அந்தப் பழக்கம் அவருடைய ஆசைக்கனலை சாம்பராக்கிவிட்டது. அத்துடன் நின்றதா?............**

சொன்னேன். என் காமிலாவின் உடல் நிலையைப்பற்றி மோசமாகச் சொல்லக்கூட எனக்கு மனம் வரவில்லை.

''நான் வருகிறேன் மாமா'' விடை பெற்றுக்கொண்டு தெருவில் நின்ற என் காரில் ஏறிக்கொண்டேன். என் மன வேகத்தைப் போட்டியிட்டுச் சென்ற கார் வீட்டு வாசலில் நின்றது. கையில் குழந்தையை வைத்துக்கொண்டு எனது வரவுக்காகக் காத்திருந்த கதீஜாவின் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடியது. அடுத்த நிமிஷம் குழந்தையை என் கையில் கொடுத்துவிட்டு 'ஹாண்ட்பாக்'கை அவள் வாங்கிக் கொண்டு வீட்டுக்குள் சென்ருள்.

''ஏன் இன்றைக்கு இவ்வளவு நேரம்?'' கதீஜா கேட்டாள். குழந்தை சலீம் என் கழுத்தைச் சுற்றி வளைத்துக்கொண்டு அப்படியே சாய்ந்துகொண்டிருந்தான். குழந்தையின் அந்த மலர் ஸ்பரிசம் என்னை எங்கேயோ இன்ப உலகிற்கு இழுத்துக்கொண்டு போனது. கண்ணைமூடிக்கொண்டு அப்படியே நாற்காலியில் உட்கார்ந்துவிட்டேன்.

திரும்பவும் கதீஜாதான் பேசினுள்.

''தேத்தண்ணிசர்ப்பிடுங்கள்... அதுவும் ஆறிப்போய்விட்டது'' அன்புடன் தேநீர் கோப்பையை அவள் என் வாயருகே கொண்டு வந்தாள்.

''ஆமாம்... ஏன் இவ்வளவு நேரமாம்?'' அவள் செல்லமாகக் கேட்டாள்.

''அவசியம் சொல்லித்தான் ஆகணுமோ?''

''ஆமாம்... கண்டிப்பான உத்தரவு...'' அவள் சிரித்தாள். என்னுல் சிரிக்கமுடியவில்லை.

''கதீஜா......சாயந்திரம் காமிலாவைப் பார்க்கப் போயிருந்தேன்''

''உடம்பு எப்படி இருக்கிறது? பாவம்'' என்று தன் அனுதாபத்தைத் தெரிவித்துவிட்டு என் பதிலை எதிர்பார்க்காமல் உள்ளே சென்றுவிட்டாள்.

''குழந்தை சலீம் என் பக்கத்தில் தவழ்ந்து விளையாடிக்கொண்டிருந்தான். அர்த்தம் புரியாத பாஷையில் அவன் என்னென்னவோ பேசிக்கொண்டிருந்தான். ''என்னடா பிரசங்கம் செய்கிருய்?'' நான்சிரித்துக்கொண்டே அவனைக் கேட்டேன். தன் பொக்கை வாயை அவன் என்னிடம் காட்டிக்கொண்டே ''அத்... அத்...'' என்று என்னவோ சொன்னுன். அப்பொழுதுதான் உள்ளேயிருந்து வந்த கதீஜா, ''பார்த்தீர்களா...சலீம் எவ்வளவு அழகாகப் பேசுகிருன். 'அத்தா' என்று கூப்பிடுகிருனே...என்னைக் கூப்பிடாமல் உங்களைத்தான் முதலில் கூப்பிடுகிருன்...'' அவள் சந்தோஷமாகக் குழந்தையைத் தூக்கிக்கொண்டு முத்த மழை பொழிந்தாள். தாயும் மகனும் உள்ளே போய்விட்டார்கள்.

என்னையுமறியாமல் ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது. அன்பும் அழகும் ஒன்றிய நல்ல மனைவி, அழகிய குழந்தை, தேவைக்கு அதிகமாகவே சௌகரியங்கள்—இவைகளுடன் என் வாழ்க்கை எவ்வளவு அமைதியாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கிறது!...ஆனுல் என்னை மணந்துகொள்ளக் காத்திருந்த காமிலா......! மரணப் படுக்கையில் கிடக்கிருள். சுகத்தையே அறியாத அவள் சோகத்தின் சின்னமாகவே மாறிவிட்டாள்.

என் உள்ளம் கனத்தது. நாற்காலியில் சாய்ந்துகொண்டிருந்த என் முன்னுல் பழைய சம்பவங்கள் அடுக்கடுக்காகத் தோன்றின.

ஃ ஃ ஃ

என் வீட்டு வாசற்படியில் 'டாக்டர் காலித் எம்.பி.பி.எஸ்.' என்ற அழகிய போர்டை வேலைக்காரன் மாட்டிக்கொண்டிருந்தான். என் தந்தையவர்கள் அதைப் பெருமிதத்துடன் பார்த்துக்கொண்டிருந்தார். உள்ளூர் ஆஸ்பத்திரியிலேயே எனக்கு வேலை கிடைத்துவிட்டது மிகவும் சௌகரியமாகப் போய்விட்டது.

நான் அறையில் உட்கார்ந்துகொண்டு ஏதோ ஒரு சஞ்சிகையைப்புரட்டிக்கொண்டிருந்தேன்.

''இன்னும் எத்தனை நாளைக்குத்தான் இப்படியே இருப்பீங்க?' அம்மா பேசினர்.

''என்ன செய்யச் சொல்றே?'' இது அத்தாவின் குரல்.

''காலாகாலத்தில் காலிதுக்கு கலியாணத்தை முடித்துவிட வேண்டாமா?'' மௌனம் நிலவியது; நான் கவனித்தேன்.

''என் தங்கை மகள் காமிலா வைத்தான் முடித்துவிடலாமென்றிருந்தேன். ஆனுல் இப்போது என் அபிப்பிராயம் மாறிவிட்டது.'' அத்தா பேசினர். எனக்கு தூக்கிவாரிப்போட்டது. காமிலா வேண்டாமா? ஏன்? என் மனத்



துக்குள்ளேயே கேள்விகள்எழுந்துவிட்டன.

''பையனுடைய அந்தஸ்துக்கும் உத்தியோகத்துக்கும் ஏற்ற இடத்தில் பெண் பார்க்கவேண்டும்....புரிகிறதா?'' அத்தா வேகமாகப் பேசினர். அம்மா தலையை ஆட்டிக்கொண்டிருந்தார். எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

வீடு, கைக்கூலி, கார்—என்னென்னவோ வார்த்தைகள் அவர்களது பேச்சிலே அடிபட்டன. என் கவனம் அவர்களது பேச்சிலே ஈடுபடவில்லை. அது திசை மாறியது. ஒரு பழைய காட்சி பளிச்சிட்டது.

மெடிக்கல் காலேஜில் சேருவதற்காக எல்லா ஏற்பாடுகளும் முடிந்துவிட்டன. மறுநாட் காலையில் நான் புறப்பட்டாகவேண்டும். முதல் நாள் மாலையில் பயணம் சொல்லிக்கொள்வதற்காக பக்கத்துத் தெரு மாமி வீட்டுக்குப் போயிருந்தேன். காமிலாவுக்கு அப்போது வயது 13 இருக்கும். நானும் அவளும் நேரம் போவது தெரியாமல் என்னென்னவோ பேசிக்கொண்டிருந்தோம்.

''சரி...காமிலா... நான் போய் வருகிறேன். நாளைக் காலையில் சென்னைக்குப் பயணம்.'' நான் சிரித்துக்கொண்டே பேசினேன். இத்தனை நேரம் மகிழ்ச்சியாகப் பேசிக்கொண்டிருந்த அவள் திடீரென ஊமையாகிவிட்டாள். அவள் முகத்திலே சோகம் கப்பிக்கொண்டது. அவள் தலையைக் குனிந்துகொண்டாள்.

''எங்கே...தலையை நிமிர்ந்து பாரேன்...'' நான் கேலியாகப் பேசினேன். ஆனல் அவள் குனிந்த தலை நிமிரவில்லை. நான் மெதுவாக அவளது தலையை நிமிர்த்தினேன். அவள் கண்களிலே நீர் கசிந்துகொண்டிருந்தது.

''நீ அசடு...! நாம்தான் ஆயுள் முழுவதும் சேர்ந்தே இருக்கப் போகிறோமே...இந்தப் பிரிவுக்காகவா வருந்துவது?'' அவள் முகத்திலே சோகத்தை மீறிக்கொண்டு மகிழ்ச்சி துள்ளியது. நான் விடைபெற்று வந்தேன்.

அவளது உள்ளம் அன்பு உள்ளம். சதா என்னைப்பற்றிய நினைப்புதான் அவளுக்கு. நானும் அவளும் சேர்ந்ததுதான் வாழ்க்கை என்று அவள் முடிவுசெய்துவிட்டாள். நானும் அவளை விரும்பினேன். நாங்கள் இருவரும் சேர்ந்து வாழவேண்டுமென்று இருவரது பெற்றோர்களும் அப்போது விரும்பினர்கள்.

ஆனல் இப்போது...? என் தந்தையின் போக்கு எனக்குப் புதிராக இருந்தது.

மாலையில் கையில் டென்னிஸ் 'ராக்கட்'டுடன் நான் வெளியில் வந்தேன். ''காலித் இங்கே வா'' தந்தையவர்களின் உத்தரவு கம்பீரமாக வந்தது. நான் உள்ளே வந்தேன்.

''காலித்...... உனக்கு அடுத்த மாதம் கலியாணம் செய்துவிட முடிவு செய்திருக்கிறேன். காதிர் முகையதீன் மரைக்காயர் மகள் கதீஜாவை பெண் பேசலாமென்றிருக்கிறேன். என்ன சொல்லுகிறுய்?''

''அத்தா...... எனக்கு அந்தப் பெண் வேண்டாம்'' நான் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு பேசினேன்.

''என்ன அது...? பெரிய பங்களா...கைக்கூலி இருபதினுயிரம் ரூபாய்... ஒரு செவர்லட் கார்... இத்துடன் வரும் பெண் வேண்டாமா? ஏன்?'' அவர்களது குரலில் ஆத்திரம் அதிகமாயிருந்தது.

''நான் மாமி மகள் காமிலாவைக் கலியாணம் செய்துகொள்ளுகிறேன்.'' நான்தீர்மானமாகப் பேசினேன்.



ஒரு நிமிடம் அமைதி. தந்தையவர்கள் யோசித்தார்கள். அம்மா அருகேயிருந்தார்.

''வேண்டாம்...காமிலா வேண்டாம்... என் தங்கையின் மகள்தான்...இருந்தாலும் பணமில்லை. அந்தப் பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டால் உனக்கு வீடு கிடைக்காது, கைக்கூலி கிடைக்காது...'' அத்தா பேச்சை நிறுத்தவில்லை. நான் குறுக்கிட்டேன்.

''கைக்கூலி வாங்கிக்கொண்டு கலியாணம் செய்யும் பழக்கத்தை நான் வெறுக்கிறேன். மரைக்காயர்களிடையே புகுந்துவிட்ட சாபக்கேடான முறை அது. இஸ்லாமியக் கொள்கைக்கும், வாழ்க்கைக்கும் புறம்பானது. பகுத்தறிவுக்குஒவ்வாதது. முஸ்லிம்களுக்கு அவமானத்தை உண்டுபண்ணக் கூடியது'' நான்பேசிக்கொண்டே போனேன்.

''காலித்... நான் சொல்லுகிறேன்... உனது வருங்கால நலனை உத்தேசித்து நீ காதிர் முகையதீன் மரைக்காயர் மகளைக் கலியாணம் செய்துகொள். பல விதத்திலும் உனக்கு நல்லது. உனக்கு சொந்தத்தில் ஒரு ''டிஸ்பென்ஸரி''கூட அவர் வைத்துக் கொடுப்பார்.

''எனது திறமையில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆண்டவன் நாடினல் வேண்டியதை நானே சம்பாதித்துக்கொள்ளுவேன். அதற்காக மனைவியின் சொத்தைஎதிர்பார்க்கவேண்டியதில்லை.''

''உன்னைவிட எனக்கு வாழ்க்கையில் நிறைய அனுபவம்உண்டு. காமிலாவைக் கலியாணம்செய்துகொண்டால் அவர்களது குடும்பத்தையும் நீதான் காப்பாற்ற வேண்டியிருக்கும். அந்தக் குடும்பத்துக்கு ஒரு வசதியும் கிடையாது. நான் திரும்பவும் சொல்லுகிறேன். உனது சௌகரியத்துக்காக நீ காதர்முகையதீன் மரைக்காயர் மகளைத்தான் மணந்துகொள்ளவேண்டும்'' அத்தா பேச்சை நிறுத்திவிட்டார்.

அத்தாவின் சுபாவமே அப்படித்தான். அவர் நினைத்தது நடந்தாகவேண்டும். அந்த அளவுக்குப் பிடிவாதம். டென்னிஸ் 'ராக்கெட்'டை உள்ளே வைத்தேன். கால் போன திசையில் நடந்து சென்றேன்.

காமிலாஏழை. அவளை மணந்துகொண்டால் கைக்கூலிப் பணம் கிடைக்காது. கார் கிடைக்காது. பங்களா கிடைக்காது. எல்லாவற்றுக்கும் மேலாக அத்தாவின் அதிருப்திக்கு ஆளாகவேண்டும். தந்தையவர்களுக்கு, எனது நலனுக்காக எத்தனையோ கஷ்டப்பட்ட தந்தை அவர்களுக்கு, என்னல் மனக் கஷ்டம் உண்டாகலாமா! தந்தையவர்களின் திருப்திக்காக எனது நலனை விட்டுக் கொடுத்தால்தான் என்ன!

மாலை மறைந்துகொண்டிருந்ததால் 'கீச் கீச்' என்று கத்திக்கொண்டு பறவைகள் கூடு திரும்பிக்கொண்டிருந்தன. அருகே இருந்த மரத்தில் இரு பச்சைக் கிளிகள் கொஞ்சி விளையாடிக்கொண்டிருந்தன. புதிதாக இன்னொரு பச்சைக்கிளியும் அங்கு வந்து சேர்ந்துகொண்டது. புதிய பச்சைக் கிளியும் பழைய பச்சைக் கிளி ஒன்றும் சேர்ந்து பறக்கத் துவங்கின. இன்னொரு பழைய பச்சைக்கிளி மௌனமாக உட்கார்ந்திருந்தது. சற்று நேரம் கழித்து அதுவும் 'கீச் கீச்'சென்று கத்திக்கொண்டு வேறு திசையை நோக்கிப் பறக்க ஆரம்பித்தது.

பறவைகளுக்கு வேண்டுமானல் இத்தகைய வாழ்க்கை பொறுத்தமாக இருக்கலாம். ஆனல் மனிதர்களுக்கு...? என்னையே நம்பியிருக்கும் காமிலாவைக் கைவிட்டுவிட்டு அவளுக்குப் பதிலாக கதீஜாவைத் திருமணம் செய்துகொள்ளுவதா...?

''என்ன சொல்லுகிறாய்?'' அத்தாவின் அதட்டல். ''அத்தா சொல்லுவதைத்தான் கேளேன்'' —அம்மாவின் வேண்டுகோள்—நாட்கள் நகர்ந்தன. ''உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள் அத்தா'' நான் சரணடைந்தேன்.

கலியாண ஊர்வலம் சென்று கொண்டிருந்தது. நான் குதிரையில் சென்றுகொண்டிருந்தேன். இதோ ஊர்வலம் காமிலா வீட்டுக்கு அருகில் வந்துவிட்டது. நான் மெதுவாகத் தலையை நிமிர்ந்து பார்த்தேன். ஜன்னல் அருகே காமிலா நின்றுகொண்டிருந்தாள். என்னையே பார்த்துக் கொண்டு நிற்கிறாள். அவளது கண்களிலே ஏன் இப்படிக் கண்ணீர் பெருகுகிறது...? அவளை நிமிர்ந்து நன்றாகப் பார்க்க எனக்குத் துணிவில்லை. நான் மெதுவாகத் தலையைக் குனிந்துகொண்டேன். துளிர்த்த கண்ணீரைத் துடைக்க மறந்தேன்.

கதீஜா என் வீட்டுக்கு வந்தாள் –இல்லை, நான்தான் அவள் வீட்டுக்குப் போய்விட்டேன்! என் மனமறிந்து நடந்தாள்; என் வாழ்க்கையில் மகிழ்ச்சி நடமிட்டது. சென்றுபோன நாட்களை நான் ஓரளவுக்கு மறந்தேன்.

குழந்தை சலீம் பிறந்துவிட்டான். அன்று அவன் பிறந்த நாற்பதாம் நாள். விசேடத்துக்காக எல்லோரும் வந்திருந்தார்கள். கதீஜாவின் சாமர்த்தியத்தினால் காமிலாவையும் வரவழைத்துவிட்டாள். பின்கட்டில் பெண்களெல்லோரும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். நான் மெதுவாகக் கவனித்தேன். சலீமைத் தூக்கி வைத்துக் கொண்டு காமிலா கொஞ்சிக் கொண்டிருந்தாள். அவனை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஏனோ அவளது கண்கள் கலங்கின. என்னையும் அவள் கவனித்துவிட்டாள். அமைதியாக உள்ளே சென்றுவிட்டாள்.

இப்போது அவள் எவ்வளவு மாறிவிட்டாள்! உடல் மெலிந்துவிட்டது! கண்களிலே ஏக்கத்தின் சாயல் நிழலிட்டது! கன்னக் கதுப்பின் கவர்ச்சி மறைந்தேவிட்டது!

அவளுக்குஎப்படியும் திருமணம் செய்து வைத்துவிடவேண்டும் என்று நான் எவ்வளவோ முயற்சி செய்தேன். மாப்பிள்ளை ஒவ்வொருவனும் பதினாயிரம், பதினைந்தாயிரம் என்று கைக்கூலி கேட்க ஆரம்பித்தான். மேலும் பழக்கத்தின்படி வீடு ஒன்றும் கொடுக்கவேண்டும், இதற்கெல்லாம் எங்கு போவது?

காமிலாவை நினைக்கும்போது என் மனத்தில் சோகஅலை எழுந்து உள்ளத்தை ஆட்டிவைத்துவிடும்.

அன்று மாலை நான் ஆஸ்பத்திரியிலிருந்து அப்பொழுதுதான் வீட்டுக்கு வந்தேன். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் யாரோ என்னைக் கூப்பிட்டார்கள். எட்டிப் பார்த்தேன், மாமா வாசலில் நின்று கொண்டிருந்தார்.

''காலித்...! காமிலாவுக்கு கடுமையான ஜுரம். நீ கொஞ்சம் வரமுடியுமா?'' கெஞ்சுவதைப் போலக் கேட்டார்.

''இதோ வந்துவிட்டேன், ஒரு நிமிஷத்தில்'' என்று சொல்லிக் கொண்டு உள்ளே போய் சட்டையைமாட்டிக்கொண்டு 'ஸ்டெதாஸ்கோப்'புடன் வெளியில் வந்தேன்.

இப்பொழுது காமிலாவைப் பக்கத்திலிருந்து பார்த்தேன். காய்ச்சல் தகிக்கிறது. அடிக்கடி இருமுகிறாள். உடல் மெலிந்துவிட்டது. கன்னங்கள் குழிவிழுந்துவிட்டன. நான் நன்கு பரிசோதித்துப் பார்த்தேன். சந்தேகமில்லை. அவளது உடலைக் காசநோய் பீடித்துக்கொண்டது. நன்கு நோய் வளர்ந்துவிட்டது. இனிமேல் அவளைச் சொஸ்தப்படுத்த முடியுமா?

உயர்ந்த ரக மருந்துகள் கொடுத்தேன். நாள்தோறும் போய்க் கவனித்து வந்தேன். ஆனால் பலனைத்தான் காணோம்.

காமிலா மெதுவாகத் திரும்பிப் படுத்தாள். என்னை ஊன்றிக் கவனித்தாள்.

''மச்சான்... நீங்கள் எவ்வளவு சிரமப்படுகிறீர்கள்... என் நோய்க்கு மருந்தே கிடையாது மச்சான் ...கவலை என் மனத்தை அரித்து விட்டது.'' நிதானமாகப் பேசினாள்.

கவலை மனிதனைக் கொன்று விடும் என்று நான் படித்திருந்தேன். அப்படியானால் காமிலா...!

ஃ ஃ ஃ

''உங்களைத்தானே...தூங்குறீங்களா?''—கதீஜா என்னை மெதுவாக எழுப்பினாள்.

''என்ன அவசரம் அப்படி?'' நான் மெதுவாகக் கேட்டேன், சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தேன். மணி ஆறு ஆகியிருந்தது. ஒரு மணிக்கு மேலாக அப்படியே உட்கார்ந்திருந்திருக்கிறேன்.

''சேதி கேள்விப்பட்டீங்களா?' கதீஜா கேட்டாள்.

''என்னவாம்?''

''வந்து...காமிலா...''

''காமிலாவுக்கு என்ன?''

''காமிலா இறந்துவிட்டாளாம்! இப்பொழுதுதான் அடுத்த வீட்டு ஆமினுக்கா சொன்னாங்க''

நான் திடுக்கிட்டு எழுந்தேன். காமிலா இறந்துவிட்டாள்...என்னால் நம்பவே முடியவில்லை.

வெளியே ஓடினேன். மாமா வீட்டை நோக்கி நடந்தேன். மாமாவீட்டுத் திண்ணையில் ஜனக் கூட்டம். மாமா ஒரு மூலையில் உட்கார்ந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார். உள்ளே கட்டிலில் காமிலாவைப் படுக்கவைத்திருந்தார்கள். நான் மெதுவாக எட்டிப்பார்த்தேன். அவள் நிரந்தரத் தூக்கத்தில் ஆழ்ந்து கிடந்தாள்.

ஊதுபத்தியின் நறுமணம் சுற்றிச் சுற்றி வந்தது. சாம்புராணியின் சுகந்தம் காற்றில் கலந்து வெளியில் சென்றது. நான் அப்படியே உட்கார்ந்துவிட்டேன். என் மனச் சாட்சி என்னைக் குத்திக்காட்டியது.

காமிலா இறந்ததற்கு யார் காரணம்? நீதான் என்றது மனசாட்சி. நான் என்ன செய்வேன்? நான் தந்தைக்கு அடங்கியபிள்ளை தந்தையவர்களின் பேச்சைத் தட்டமுடியுமா? எனக்கு அறிவு இருக்கிறது; அன்பு இருக்கிறது. அதற்காகத் தந்தையவர்களுக்கு நான் செய்யவேண்டிய கடமையை மீறமுடியுமா?

எல்லாவற்றிற்கும் காரணம் இரக்கமற்ற அரக்கர்கள் வகுத்துவிட்ட அந்தக் கைக்கூலி முறைதான். அந்த முறை பழக்கத்தில் இருக்கும்வரையில் எத்தனையோ காமிலாக்கள் அழிந்துதான்போக வேண்டும்.

''காலித் எழுந்திரு'' மாமா என்னை எழுப்பினார். தெருவிலே கூட்டம் கூடிவிட்டது. 'சந்தூக்'கைத் தூக்கிக்கொண்டு நடந்தார்கள். நான் மௌனமாகப் பின்தொடர்ந்தேன். காமிலாவின் கலியாண ஊர்வலத்தில் பங்கு பெறலாம் என்று நினைத்தேன். ஆனால் அவளது இறுதி யாத்திரையில் பங்கு எடுத்துக் கொள்ளுகிறேன். அடக்கம் முடிந்தது.

மௌலவிசாஹிப்'துஆ' ஓதினார். ''ஆண்டவனே இறந்துபோன ஆத்மாவுக்கு சாந்தியை அளிப்பாயாக'' என்ற அவரது பிரார்த்தனைக்கு எல்லோரும் 'ஆமீன்' என்றனர். நான்மெதுவாக முணுமுணுத்தேன். ''ஆண்டவனே வரதக்ஷிணை வாங்கும் இந்த முஸ்லிம்களுக்கு நீ நல்ல புத்தியை அளிப்பாயாக! கைக்கூலிகொடுத்தால்தான் என் பையனுக்கு உங்கள் பெண்ணைக் கட்டிக் கொள்ளுவேன், என்று கட்டாயம் செய்யும் சுயவர்களுக்கும் நீ கண் திறந்துவிடுவாயாக!...''

'ஆமீன்' என்றகுரல்ஏகோபித்து எழுந்தது. வீசிய காற்றில் அந்த ஒன்றித்த குரல் கலந்துசென்றது.



# ஆற்றங் கரையினிலே

இரா. இளந்திரையன் பி.ஏ (ஆனர்ஸ்)

### 1

அன்புமனப் பெரியோர்கள் வாய்தி றக்க
அருளோடும் வெளிப்பாய்ந்து சமூக வாழ்வில்
இன்பமணம் கமழ்விக்கும் சொற்றொ டர்போல்,
ஏற்றமுறும் பெருமலையில் பிறந்தி றங்கிப்
பொன்கதிரோன் வரவேற்க நளினங் காட்டி,
புதுவளங்கள் இருமருங்கும் சிறந்தி லங்கத்
தேன்புடனே நடைபோடும் பேரா றென்றின்
சீர்க்கரைகள் இரண்டினையும் பார்த்தி ருந்தேன்!

### 2

அழகான மாஞ்சோலை—தளிரும் பூவும்
அதன்மீது விளையாடும் இளஞ்சி றார்கள்!
எழுதாத காவியங்கள் பாடும் கிள்ளை—
இறவாத இசைபாடும் குயிலின் பிள்ளை—
ஒழுகாத தேனுக்குக் காத்தி ருந்து
உளிப்பல்லால் தாளமிடும் அணிலின் பிள்ளை—
குழுவாக இவையாவும் கலைவ ளர்க்கக்
குரங்கினங்கள் பழம்பறித்துப் பரிசில் நல்கும்.

### 3

அருகினிலே ஒருசிறிய தென்னந் தோப்பு—
ஆடுகின்ற ஓலையிலே சின்னக் கிள்ளை!
விரும்பிவரும் கருங்காக்கை கொக்குக் கூட்டம்;
வரவேற்க நகைமலரும் தென்னம் பாளை!
'துரும்பினிலும் பயன்கொள்வோம்' என்று ஓலைத்
துவிகளையும் தூக்கணங்கள் கிழித்துச் செல்லும்!
'கரும்பினைப்போல் உடல்கொடுத்து இன்பம் நல்கோம்—
களித்திடுவீர் இளநீரை' என்னும் தென்னை!

### 4

செங்நெல்லும் சுவைக்கரும்பும் இணைந்த காட்சி—
தீந்தமிழில் உரைநடையும் கவிதை யும்போல்!
செங்நெல்லின் மணியொன்றை இழுத்துச் செல்லும்
சிற்றெறும்பு கரும்பினிலே தேனு றிஞ்சும்!
வந்தங்கே கதிரறுக்கும் தொழிலர் கையில்
வாளிருக்கும், வாயினிலோ கரும்பி ருக்கும்!
சொந்தங்கொண் டங்குவரும் தென்றல், மாதர்
சுந்தரவாய்ப் பாடலுக்குள் மறைந்து கொள்ளும்!

### 5

கதிரறுக்கும் வயலிலுள்ள பெருங்கண் தேரை
கைப்பாணி கொட்டுகின்ற உழவர் சேயின்
புதியசுவைத் தாளத்துக் காதல் காட்டி
'பொல்லாத உம்பெற்றோர் எமைத் துரத்திப்
புதியஇடம் தேடச்செய் கின்றார்! உங்கள்
பொன்னிதயம் இதையெல்லாம் அறியா(து) என்னும்.
அதிகஒளி சிந்துகின்ற பொக்கை வாயில்
அத்தனைக்கும் சிரிப்புத்தான் தவழ்ந்தி ருக்கும்!

### 6

வயல்வெளியின் நடுவினிலே அமைந்த குட்டை
வந்தடையும் எருமைகளை அணைத்துக் கொள்ள,
கயலினமும் தவளைகளும் அஞ்சிப் பாய்ந்து
காரெருமைக் கொம்புகளில் தாவிக் குந்தும்!
துயிலெழுந்த எழில்மாதர் விழிகள் போலத்
தூயஇதழ் மலர்கின்ற தாம ரைகள்
செயல்மறந்து கிடக்கின்ற எருமை யாரைச்
சின்னநகை யால்எள்ளிக் களித்தி ருக்கும்!

## 7

ஆற்ருேரப் புல்தரையில் அமைதி யாக
அசைந்துவரும் பசுக்கூட்டம் வேலி யின்மேல்

காற்ருேடு கைகோத்து ஆடும் புல்லைக்
கறித்துவரும்; அங்கங்கே ஒணு னெல்லாம்

மாற்ருத செங்கழுத்தை நீட்டும்; காடை
மணிச்சிட்டு முதலியன பறக்கும்; மேய்ப்பன்

ஈற்ருவின் கன்றினைத்தான் தோளில் போட்டு
ஏகிடுவான்—தாய்ப்பசுவோ அவன்பின் ஓடும்!

## 8

பார்க்கின்றேன் நானவளின் எழிலை என்று
பழமையிலும் இளமையரு இயற்கை என்பாள்

சேர்க்கின்ருள் நாணத்தை! அவளின் கன்னம்
சிவந்ததேனச் சிவந்ததுமேல் வானம்! ஆமாம்,

கார்க்குன்றின் பின்கதிரோன் மறைய லாஞன்;
கழனியிலே கதிரறுத்துக் கட்டிக்கொண்டோர்

ஆர்க்கின்ருர்! பறவையினம் சோலை நோக்கி
அணியணியாய்ப் பறந்துவர, எழுந்தேன் நானும்.

### பழையதைப் பற்றி...

படை வீரர்களுக்கு அளிக்கப்பட்ட ரொட்டி பழையதாயிருந்ததால் அதைப்பற்றி அவர்கள் முணுமுணுக்க ஆரம்பித்தனர்.

இதை விரும்பாத தளபதி அவர்களுக்கு அறிவுரை கூற முற்பட்டார். எப்பொழுதுமே போர் வீரர்களிடையே நெப்போலியனைப் பற்றி மதிப்புண்டாகையால் அவனுடைய உதாரணத்தையே கையாண்டு அவர் சொன்னர் :

"இம்மாதிரியான அற்ப விஷயங்களைப் போர்வீரர்கள் பொருட்படுத்தக்கூடாது. நெப்போலியன் ஆல்ப்ஸ் மலையைக் கடந்தபோது இதே ரொட்டி கிடைத்திருந்தால் மகிழ்ச்சியோடு இதை உண்டிருப்பார்."

"ஆமாம், அந்த நேரத்தில் இதே ரொட்டி புதிதாகவும் இருந்திருக்கும்" என்று பதிலளித்தான் ஒரு வீரன்.

(ஆங்கிலப் பத்திரிகையிலிருந்து)

—"ஷபீக்"




காலிலே விலங்குகள் பூட்டப்பட்டு அரசவையிலே நின்ற இமாம் அஹ்மதைக் கடு கடு என்று நோக்கினுர் முஃதஸிம்.

"குர்ஆன் படைக்கப் பட்டது என்று நாம் பிரகடனப் படுத்தியதற்கு எதிராகப் பிரசாரம் செய்பவர் நீர் தானு?" என்று முழக்கினுர் கலீபா.

"ஆம்" என்று உறுதியாக பதிலளித்தார்கள் ஹன்பலீ இமாம். காரணத்தைக் கூறுமாறு கேட்ட கலீபாவிடம், கடல் மடை திறந்தது போன்று பெருக்கெடுத்தன வாதங்களும், உவமைகளும், உபமானங்களும். (சென்ற இதழில் இதுபற்றி விளக்கப்பட்ட காரணங்கள் இமாம் அவர்களின் பேச்சிலிருந்து எடுக்கப் பட்டவையே)

அக்காரணங்களைக் கேட்ட கலீபாவுக்கு மறுத்துப் பேச மனமில்லை. ஆகவே தம் பகுத்தறிவு சீடர்களை "இவரிடம் வாதம் செய்யுங்கள்" என்று பணித்தார். வாதப் பிரதி வாதங்களில் இமாம் அவர்களிடம் வெற்றி காணமுடியாது என்று நன்குணர்ந்திருந்த அந்த பகுத்தறிவு வாதிகள் அரசனுக்கு ஆலோசனை கூற முற்பட்டனர்.

"சொல்லின் திறத்தால் எதிரிகளைச் சோக்க வைப்பதில் பண்பட்டவர். இவரிடம் வாதிட்டுப் பயனில்லை. இவர் பிரசாரத்திற்கு முடிவு காண வேண்டுமாயின் இவருடைய உயிருக்கு முடிவு காண வேண்டும்" என்று யோசனை கூறினர் அந்த பகுத்தறிவு சீலர்கள்.

ஆனுல் முஃதஸிம் அவ்வளவு தூரம் போக விரும்பவில்லை. சிறையிலடைத்து,சாட்டையைச் சொடுக்கினுல், இமாம் அவர்கள் தம் கூற்றை மாற்றிக் கொள்வார்கள் என்று மனப்பால் குடித்தார் அவர். ஆனுல் அறங்காக்க உரம் கொண்டுள்ள உத்தமர்கள் வாளுக்கே அஞ்சமாட்டார்கள்; சாட்டையைக் கண்டா சஞ்சலப்படுவார்கள்?

மூன்று நாட்கள் ஆஸ்தான பகுத்தறிவுவாதிகள் இமாம் அவர்களிடம் மாறி மாறி வந்து முஃதஸிமின் அரச சட்டத்தை ஏற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்தினர். தங்கள் உறுதியிலிருந்து அவர்கள் பிறழவேஇல்லை. இறுதியில் சினங்கொண்டு எழுந்தார் முஃதஸிம். கடலனைய கல்வி கற்ற செல்வரை, தாம் கொண்ட

கோள்கையை தம் உயிரினும் உயர்வாக மதித்த உத்தமரை, கலீபாவின் வாள்வலியும் தோள் வலியும் கண்டு கலங்கா அறங் காத்த வீரரை முஃதஸிம் குற்ற வாளியாகத் தீர்மானித்துத் தீர்ப் பளித்தார். பகுத்தறிவு அறத் துக்கு தண்டனையளித்தது. படை பலமும், பண பலமும் கோண்ட கலீபா, ஓர் ஏழை மதத்தலைவ ருக்குச் சிட்சை விதித்தார். பக்தி நூற்களை பணிவுடன் ஏந்திய இரு கரங்களையும் கட்டிவைத்து, மொத்தம் இமாம் அவர் களுக்கு ஆயிரம் சாட்டையடி கோடுக்கும்படி "நீதித் தீர்ப்பு" வழங்கினர்.

தீர்ப்பைக் கேட்ட இமாம் அவர்களுக்கு நான்கு நாட்களுக்கு முன்னர் நிகழ்ந்த சம்பவம் நினை வுக்கு வந்தது. கேள்வி கேட்கப் படுவதற்காக அவர்கள் முஃதஸி மின் அரண்மனைக்குக் கோண்டு வரப்பட்ட சமயம் அது. இமாம் அவர்கள் சிறிது நேரம் தனித் திருந்த பொழுது, அவர்களை அழைத்து வந்த படைக் குழுவின ரின் தலைவன் பரபரப்புடன் அவர்களிடம் ஓடி வந்தான்.

"இமாம்! நீங்கள் உண்மைக் காகப் போராடுகிறீர்கள். ஒரு தடவை நான் ஒரு குற்றம் செய்த தற்காகக் கைதியாக்கப் பட்டேன். உண்மையைச் சோல்லுமாறு என்னை உதைத்தார்கள். நான் சோன்ன போய்யையே வற்புறுத் திக் கோண்டிருந்தேன். உண் மையைச் சோல்ல வைப்பதற் காக ஆயிரம் அடி என்று எனக்கு தண்டனை விதிக்கப்பட்டது. நான் சாதித்து விட்டேன். நான் கூறிய போய்யை நிலை நிறுத்துவதற் காகவே நான் ஆயிரம் அடியைப் போறுத்துக் கோண்டேன் என் றால்,நீங்கள் உரைத்த உண்மை யை நிலை நிறுத்த ஆயிரம் அடியை சுலபமாக ஏற்றுக் கோள்வீர்கள் என்று எண்ணுகிறேன். அடிபடும் நேரத்தில் எப்பொழுதாவது உங் கள் உறுதி அசையும் போலிருந் தால், என்னை நினைத்துப் பாருங் கள்" என்று கூறிச்சென்றான். அவன் குற்றம் செய்தவனாக இருந்தாலும், அவன் சமயத்தில் கூறிய அறிவுரையைக் கேட்டு வியந்தார்கள் இமாம் அஹ்மது ஹன்பல்.

மலை குலைந்தாலும், நெஞ்சின் நிலை குலையா இலட்சிய மரபில் வந்த இமாம் அவர்கள் விழுந்த அடிகளையெல்லாம் போறுத்துக் கோண்டார்கள். தண்டனையால் மன உறுதி பாதிக்கப் படாவிட்டா லும், அவர்களின் உடல் நிலைக்கு ஊறு ஏற்படத்தான் செய்தது. கோடியவர்கள் கையிலே அவர் கள் வாங்கிய அடிகள் பிற்காலத் தில் அவர்களின் உடலை வரு த்தி, உயிரைப் பிரித்தது என்றும் சோல்லலாம்.

சாட்டையடிகள் பயன் தராமற் போகவே சிறைவாசமா வது அவர்களின் உறுதியை மாற் றுதா என்றெண்ணி சிறது காலம் சிறையிலே வைத்திருந்தார் முஃதஸிம். விடுதலை பெற்ற பின் னும் அவர்களுக்குத் தோல்லை கோடுத்துக் கோண்டே யிருந்தது பகுத்தறிவுக் குழு. அல் முதவக்கில் கலீபா பதவியை ஏற்ற பின்னர் தான் இக்குழுவினரின் செல் வாக்குக் குறையலாயிற்று. இமாம் அவர்களின் நெஞ்சுரத்தையும், நேர்மைப் போக்கையும், அறங் காத்த வீரத்தையும் அறிந்த அல் முதவக்கில் அவர்களுக்கு பெரும் மரியாதை செய்தார். விலங்கோடு, கைதியாக அவர்கள் நின்ற அதே அரசவையில், அரச மரியாதை யுடன் அவர்களுக்கு ஆசனம் அளிக்கப்பட்டது. சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுதெல்லாம் அவர்களை அழைத்து வந்து அள வளாவினார் அல் முதவக்கில். பரந்த அவர்களின் கல்வியும், நிறைந்த அவர்கள் பண்பும் கலீ பாவுக்குப் பேரதிசயங்களாகவே இருந்தன.

நபிபெருமானாரின் திருவாக் குகள் என்று கருதப்பட்டு வந்த வற்றில் மூன்று இலட்சம் வரை நினைவிலிருந்தே கூறக்கூடிய சக்தி பெற்றிருந்ததினால் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் "ஹுஜ்ஜ(த்)துல் இஸ்லாம்" (இஸ்லாத்தின் நிரூபணம்) என் னும் பெயர் பெற்றார்கள். ஆனால் இமாம் அஹ்மது ஹன்பலோ இவற்றுள் பத்து லட்சம் வரை மனப்பாடம் செய்திருந்தார்கள் என்று இப்னு கல்லிகான் போன்ற சரித்திராசிரியர்களே ஒப்பியதாகக் கூறப்படுகிறது. இவ் வளவு கல்வி கற்றவர்களின் குடும்பம் வறுமையால் வாடக் கூடாது என்ற நோக்கில் இமாம் அவர்களுக்குத் தெரியாமலேயே அன்னாரின் குடுபத்திற்கு இரகசிய மாக உதவி செய்து வந்தாராம் கலீபா அல் முதவக்கில்.

கலீபா உதவி செய்வது இமாம் அவர்களுக்குத் தெரிந்திருந்தால், அதை ஏற்றிருக்கவே மாட்டார் கள். கலீபா மாமூனுடைய காலத்தில், ஹதீது பாடங்களில் தேர்ச்சிபெற்ற அறிஞர்களுக்கு பண உதவிசெய்யுமாறு அவர் ஒருவரை நியமனம் செய்தார். இமாம் அவர்களைத் தவிர மற் றெல்லோரும் அவ்வுதவியை ஏற் றுக் கோண்டனராம். இமாம் அவர்கள் உழைக்காமல் உண் பதை விரும்பியதே இல்லை. இந்த உயரியபண்பை விளக்கும் முறை யில் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) தங்கள் இஹ்யா என்னும் மாபெ ரும் நூலில் ஒரு சம்பவத்தைக் குறிப்பிடுகிறார்கள். ஸிர்ரியுஸ் ஸிக்தீய்யீ (ரஹ்) இமாம் அவர் களுக்கு கோஞ்சம் போருளை யனுப்பி அதை ஏற்றுக் கோள்ளக் கோரினார்கள். அதை ஏற்க மறுத்த இமாம் அவர்கள், "நான் உழைத்ததில் இன்னும் ஒரு மாத உணவுக்கு என்னிடம் போருள் இருக்கிறது. அதுவரை இது உங் களிடமே இருக்கட்டும். அதற்குப் பின்னரும் உங்கள் உதவிக்கு நான் உரியவனாக இருந்தால் இதை ஏற்றுக் கோள்ளுகிறேன்" என்று சோல்லிவிட்டார்கள்.

இமாம் அவர்கள் மாணவப் பருவத்திலிருந்தே இப்பண்பாட் டைப் பெற்றிருந்தார்கள். ஸுப் யானுப்னு உயைனா என்னும் பெரியாரிடம் அவர்கள் ஹதீது கற்றுக்கோண்டிருக்கும் பொழுது ஒரு நாள் தக்க உடையின்றி அவர்கள் தம் ஆசிரியரிடம் போக முடியாத நிலை ஏற்பட்டது. மாண

வரைக் காண ஆசிரியர் ஆளனுப்பினுர்கள். தக்க உடையின்றி இருந்த இமாம் அவர்களைக் கண்டதும் அவர் மனம் வருந்திற்று. "ஆசிரியர் உங்களை அழைக்கிருர்கள். என்னிடம் தகுந்த உடை இருக்கின்றது- அதை அணிந்து கொண்டு நீங்கள் ஆசிரியரைக் காண வாருங்கள்" என்று வேண்டிக் கொண்டார் வந்த மனிதர். ஏற்பதை இகழ்ச்சியாகக் கொண்ட இமாம் அவர்கள், 'நான் ஊதியத்துக்காக சில நூற்களைப் பெயர்த்து எழுதிக் கொண்டிருக்கிறேன். அதில்வரும் பணத்தைக் கொண்டு, ஆடைகளைத் தயார் செய்த பிறகுதான் நான் ஆசிரியரிடம் வருவேன், "என்று திட்டமாகக் கூறிவிட்டார்கள்.

கல்வி தேடும் காலத்திலும், உழைத்து உண்பதையே உவந்தார்கள். எளிதில் பிரயாணம் செய்ய முடியாத அக்காலத்தில் அவர்கள் மக்கா, மதீனு, கூபா, பஸ்ரு, யமன் போன்ற இடங்களுக்கெல்லாம் கஷ்டங்களைப் பொருட்படுத்தாது செல்வார்கள். ஒருதடவை திஜ்லா நதிக் கரையில் ஓர் ஊரில் ஒரு மனிதருக்கு பெருமானுரின் திரு வாக்குகள் மூன்று தெரியுமென்று கேள்வியுற்று அங்கு விரைந்தார்கள்.

அம்மனிதனின் வீடடைந்ததும், அவர் ஒரு நாய்க்குத் தீனி கொடுத்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். இவர்களைப் பார்த்தும் அவர் வந்து உபசரிக்காமலேயே தம் கருமத்தில் கண்ணுயிருந்தார். இமாம் அவர்களுக்கு இதனுல் சிறிது மனத் தாங்கல் ஏற்பட்டது. இதை உணர்ந்து கொண்ட அம்மனிதர் "இமாம் அவர்களே நீங்கள் என் செயல் கண்டு வீணுக மனவருத்தங் கொள்ளாதீர்கள். அபுஸ்ஸனுத–அக்றஜு-அபூ ஹுறைரு ஆகியோர்கள் வாயிலாக நபி பெருமானுர் அவர்களின் திருவாக்கொன்று எனக்குக் கிடைத்திருக்கிறது.

"ஒருவன் எதையாவது ஒன்றை நாடி பிறிதொருவனிடம் வரும்பொழுது இரண்டாமவன் அந்த நாட்டத்தை நிறைவேற்றி வைக்கும் சக்திபெற்றவனுக இருந்தும் அவ்வாறு செய்யாவிடில் இறுதித் தீர்ப்பு நாளில் இவன் நாட்டத்தையே ஆண்டவன் முறித்து விடுவான். "[அதாவது சக்தி பெற்றிருந்தும் ஒருவன் கோரும் உதவியை மறுப்பவனுக்கு இறுதித் தீர்ப்பு நாளில் நன்மையுண்டாகாது.]

"இந் நாய் ஏதோ வெளியூரைச் சார்ந்தது என்று தோன்றுகிறது. தீனிக்காக என் இல்லம் வந்தடைந்திருக்கிறது. இதற்குத் தீனி கொடுக்கச் சக்தியுள்ள நான், இதன் தேவையை நிறைவேற்ற வேண்டாமா?" என்று அம்மனிதர் கேட்டார்.

இதைச் செவியுற்று "நான் பிரயாணத்தில் பட்ட கஷ்டத்திற்கு இந்த ஒரு ஹதீதே பலன் தந்துவிட்டது" என்று கூறி பரவசமடைந்தார்கள் இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்).

கசடறக் கற்ற பின் அதற்தத் தக்கபடி வாழ வேண்டும் என்பதில் இமாம் அவர்கள் உறுதி பூண்டிருந்தார்கள். ஒருதடவை தங்களிடம் நீண்டகாலமாக மாணவராயிருந்த ஒருவர் அவர் வீட்டிலுள்ள குப்பை, கூளங்களை மனிதர்கள் நடமாடும் பாதையில் கொண்டுவந்து கொட்டக் கண்டார்கள். "பொதுச் சொத்தை நீர் அபகரித்துக் கொண்டீர். ஆகவே மேலும் உமக்குக் கல்வி கற்றுத் தருவது எனக்குக் கடமையல்ல"

## அவர்கள் பின்பற்றிய முன்மாதிரி

நபிகள் பெருமானுரின் குறிப்பிடத் தக்க தோழர்களில் ஒருவர் ஹன்ஜலா (ரலி) அவர்கள். ஒரு முறை மக்கத்துக் குறைஷிகள் அவரை நிர்ப்பந்தித்து நபிமணியவர்களை தூஷிக்கச் செய்தனர். நிர்ப்பந்தத்திற்குட்பட்டுவிட்ட ஹன்ஜலா (ரலி) பெருமானுரிடம் ஓடோடி வந்து, நடந்ததைக் கூறி, இதற்குப் பரிகாரமாக என்ன செய்வது என அலமலர்ந்தார். நபிமணியவர்கள் 'ஹன்ஜலா! என்னை நீர் தூஷித்தபோது உம் உள்ளம் எப்படி இருந்தது?" எனக் கேட்டார்கள் "யாரஸூலல்லாஹ்! அப்போது என் உள்ளம் உங்களைப் பற்றி ஒரு தீமையையும் நினைக்கவில்லை" எனக் கூறினுர் ஹன்ஜலா. "அப்படியானுல் அஞ்சுவதற்கொன்றுமில்லை. மனிதர்களின் உள்ளத்தை அறிந்த ஆண்டவன் உம்மை மன்னிப்பானுக" என அபய மளித்தார்கள் அண்ணல் நபியவர்கள்.

ஃ ஃ

வாழ்க்கையிலே நெறியற்றவனுகவும், கொடுங்கோலனுகவும் வாழ்ந்த யஜீதை இஸ்லாமிய ஆட்சியின் தலைவராக ஏற்றுக் கொள்ள மறுத்த காரணத்திற்காக பெருமானுரின் அருமைப் பேரரான இமாம் ஹுஸைன் அவர்கள், கர்பலா களத்திலே தம் உயிரையும் தம் குடும்பத்தினர் உயிரையும் பலி கொடுக்க நேர்ந்தது. யஜீதின் ஆட்சியை வெளிக்காவது அவர்கள் ஒப்புக் கொண்டிருந்தால் எவ்வளவோ போகபாக்கியங்களுடன் வாழ்ந்திருக்கலாம். உள்ளத்தில் ஒன்றும் உதட்டில் ஒன்றுமாக வாழ்வதைவிட உயிரை நீப்பதையே தேர்ந்தெடுத்தார்கள் அந்த உத்தமத் தியாகியவர்கள்.

ஃ ஃ

அறங்காத்த வீரர் இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் கலீபா முஃதஸிம் ஆட்சியிலே திருக் குர்ஆன் படைக்கப்பட்டதா? இல்லையா என்ற பிரசினையில் ஆயிரம் கசையடிகளை எதிர்பார்த்து, சிறையிலே வாடிக் கொண்டிருந்தபோது அவர்கள் தோழர்களில் ஒருவர் ஆலோசனை கூறினுர்:

"இமாம் அவர்களே! நீங்கள் உளமாற திருக்குர்ஆன் படைக்கப்பட்டது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டாம். ஆனுல் இந்த தண்டனையிலிருந்து தப்ப வாயளவிலாவது ஒப்புக்கொள்ளுங்கள். இதற்கு ஹன்ஜலாவின் உதாரணம் இருக்கிறதே!" எனக் கூறியதற்கு அந்த உத்தமர் உரைத்த பதில் என்ன தெரியுமா?

"அன்புள்ள தோழரே! ஹன்ஜலாவின் முன்மாதிரியை விட இமாம் ஹுஸைனின் முன்மாதிரியையே நான் பின்பற்ற விரும்புகிறேன்"

—"ஷபீக்"

என்று சூசகமாகக் குறிப்பிட்டார்கள்.

மாணவர் விழித்தார்.

“நீர் கொண்டு வந்து கொட்டிய குப்பை கூளங்களால் அந்தப் பாதையில் ஒரு பகுதி மனிதர்களுக்குப் பயனற்றுப் போகிறது. பொதுப் பாதையை — பொதுச் சொத்தை இவ்வாறு பயனிழக்கச் செய்வது—அதை அபகரித்ததற்கு ஒப்பாகும்,”என்று இமாம் அவர்கள் விளக்கினார்கள்.

இமாம் அவர்கள் கற்ற கல்வியெல்லாம் அவர்களுடைய ‘மஸ்னது’என்ற தொகுப்பு நூலில் இன்னும் கலங்கரை விளக்கமாக அமைந்துள்ளது. அவர்களின் மேதையும், அறங்காத்த வீரப் பண்பும் மேனாட்டு வரலாற்றாசிரியர்களின் கவனத்தையும் ஈர்த்திருக்கிறது.

“கோள்கைக்கும், வழி வழி வந்த நம்பிக்கைக்குமாக அஹ்மது இப்னு ஹன்பல் நடத்திய துணிச்சலான போராட்டம் அதன் சரித்ரத்தில் ஒரு கவர்ச்சிகரமான அம்சமாக விளங்குகிறது” என்று பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் பிலிப். கே. ஹிட்டிதம், “அராபியர் வரலாறு” என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

கோள்கைப் போராட்டத்திலே அவர்கள் பெற்ற பரிசையும் சரித்திராசிரியர்கள் சுட்டிக் காட்டத் தவறுவதில்லை. சிறைத்தண்டனையும் சிறையிலே அவர்கள் பெற்ற சாட்டை அடிகளும் அவர்களின் உடலைஅரித்துவிட்டன. இறுதியில் இவற்றின் பயனாக அவர்கள் வீர மரணம் அடைந்த பொழுது ஜனாஸாத் தொழுகைக்கு பத்தாது நகரமே திரண்டெழுந்தது. எட்டு இலட்சம்ஆண்களும்,அறுபதினாயிரம் பெண்களும் பிரேதப் பிரார்த்தனையில் கலந்து கொண்டதாக வரலாறுகள் கூறுகின்றன. பிரார்த்தனையில் கலந்து கொண்டவர்களின் முன் வரிசைக்கும், கடைசி வரிசைக்கும் இரண்டு நாழிகை செல்லும் தூரமிருந்தது.

பணம் பெற்றோர் அவர்கள் வாழ்நாளில் மட்டும் கௌரவிக்கப் படுகிறார்கள்.பதவி வகிப்போர் அவர்களின் ஆதிக்க காலத்தில் மட்டும் தாம் மதிப்புப் பெறுகின்றனர். ஆனால் பணமும், பதவியும் பெற்றிரா ஓர் ஏழை மதப் பிரசாரகரை வாழ்வில் பாராட்டிய மக்கள், அவர்களின் மரணத்திலும் இலட்சக் கணக்கில் குழுமி அவர்ளின் பூத உடலுக்கும், புகழ் உடம்புக்கும் மரியாதை செலுத்தினார்கள் என்றால் அவர்கள் மக்கள் மனதில் எத்தகைய இடம் பெற்றிருந்தார்கள் என்பது புலனாகிறதல்லவா? அவர்களின் மரணத்திற்குப் பத்து நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் அவர்களின் வீர வாழ்வுக்கு மக்கள் அஞ்சலி செய்யத் தவறுவதில்லை. அன்று பகுத்தறிவு வாதம் பேசி இமாம் அவர்களின் இனிய பிரசாரத்தைத் தடை செய்த மெய்யறிவுக் குருடர்கள் அடையாளமின்றி மறைந்து விட்டனர். நம்பிக்கையின் அடிப் படையிலே.ஏக இறையின் தத்துவத்தை இகமெல்லாம் உரைத்த—நாளெல்லாம் உழைத்த—உத்தமரின் அறங்காத்த வீரப்பண்பு இன்றும் சரித்திரச் சாலையிலே நிறுத்திய மைல் கல்லாகத் துலங்குகிறது. வாழ்க அவர்களின் வீரம்! ★

“விசுவாசிகளே நீங்கள் (உங்கள்) மனைவியரிடை (முற்றிலும்) நீதமாக நடக்கவேண்டுமென்று (எவ்வளவு) விரும்பியபோதிலும் அது உங்களால் இயலாது. ஆனால் ஒரே மனைவியின் பக்கம் நீங்கள் முற்றிலும் சாய்ந்து மற்றவளை அந்தரத்தில் தொங்கினவளாக விட்டுவிடாதீர்கள்” (4:129

அல்குர்ஆன்)




ரயிலை விட்டும் இறங்கி விரைந்து கொண்டிருந்தேன். அம்பாசமுத்திரம் ரயில் நிலையத்திலிருந்து ஊருக்குள் போவதற்கு இரண்டு மைல்கள் நடக்கவேண்டியிருக்கும். டவுன் பஸ் வசதி இல்லை. மணிப்பர்ஸின் கனத்தையே எடை போட்டுக் கேட்கும் ஜட்காக்காரனை நம்பிமோசம் போகாத நான், என் கால்களை நம்பி வேகமாக நடக்கலானேன்; அவ்வளவு வேகமாக என் தலையும் திரும்பியது!

“கூப்பிட்டது நீங்கதானே” என வினவினேன்.

“ஆமாம். நான்தான்” என்ற பதில் வந்தது.

எங்கேயோ, எப்பொழுதோ கேட்ட குரல் அது. என் உள்ளத்தில் ஆவல் விழித்துக்கொண்டது.

“உங்களுக்கு இந்த ஊர் தானே?” என மேலும் கேட்டார் அவர்.

“இப்போதைக்கு இந்த ஊர் தான். விஷயத்தைச் சொல்லுங்கள்” என்றேன்.

“மார்க்கட் தெருவுக்கு எப்படிப் போகவேண்டும்?”

“நானும் நடந்துதான் போகிறேன். என்னோடு வாருங்கள் அத் தெருவைக் காட்டுகிறேன்” என்றேன்.

அவர் என்னைத் தொடர்ந்தார். அடர்த்தியான கிருதாத் தலை; கருத்துப் படர்ந்த, சீராகக் கத்தரிக்கப்படாத ‘பிரஷ்’ தாடி. ஆனால் கருப்புத் திரையில் நில

வைப் பொறித்தது போன்ற முகம். அதில் சோகத்தின் சாயல் நிழலிட்டது. கண்களில் துயரம் மிதந்து காணப்பட்டது. விழிகளைச் சுற்றிலும் கரு வட்டம். நெடுநாள் துக்கத்தின் ரேகையோ? பார்வைக்கு முதுமையாகத் தெரிந்தாலும், உண்மையில் அப்படியில்லை. அவர் பழுப்பேற இன்னும் எத்தனையோ ஆண்டுகள் கழியவேண்டும். மிஞ்சிப் போனால் அவருக்கு முப்பத்தைந்து வயசு இருக்கும்!

அவர் எங்கிருந்து வருகிறார் என்று கேட்கத் துடித்தது என் உள்ளம். ஆனால் அவரே முந்திக் கொண்டார்.

''எனக்கு கோவில்பட்டி'' என்று துவங்கினார்.

''கோவில்பட்டியிலே உங்களுக்கு எந்தப் பக்கம்?'' எனக்குப் பழைய நினைவு வாடை அடித்தது.

''தாஜ்மஹால் ஹோட்டல் தெரியுமா? அது என்கடைதான்'' அமைதியான இந்தப் பதில், என் நினைவைத் தூண்டிவிட்டது, அவரைக் கூர்ந்துநோக்கினேன். தாஜ்மஹால் ஹோட்டல் என் கண்முன் வந்துவிட்டது! ஐந்தாண்டுகளுக்கு முன்னைய வாழ்வு நினைவுக்கு வந்தது.

''உங்களுக்கு என்னைத் தெரிகிறதா?'' என்று அவசரமாகக் கேட்டுவிட்டேன்.

என் கேள்வியை அவர் சிறிதும் எதிர்பார்க்காததினால், அவர் திகைத்துப்போனார். என்னை ஏற இறங்கப் பார்த்தார். என்மீது அவர் கண்கள் நிலைத்து நின்றன சில கணம்.

''நீங்கள்...?'' என இழுத்தார்.

அவர் நினைவில் படிந்திருந்த தூசியை விலக்கி, துலாம்பரமாக்கினேன். அவருக்கு என்னை விளங்கிவிட்டது. என்னை அறிந்ததும் ஆச்சரியப்பட்டுப்போனார்.

''தூரமாப் புறப்பட்டீர்கள்?'' என்று கேட்டுவைத்தேன்.

''இங்கு ஒரு ஆளைப் பார்த்துவிட்டுப் போகவேண்டும்'' என்றார். அது சுத்த மழுப்பலான பதில் என்பது பின்னர்தான் தெரிந்தது.

நாங்கள் தூரத்தைக் கடந்துகொண்டிருந்தோம். அவர் காலத்தைக் கடந்து பேசிக்கொண்டே வந்தார். அவர் வாழ்வில் 'முற்பகலில்' நிகழ்ந்த சம்பவங்கள் எல்லாம் எனக்குக் கொஞ்சம் தெரியும். நான் கோவில்பட்டியில் இருக்கும்போது நிகழ்ந்தவை அச்சம்பவங்கள். இப்பொழுது அவர் பேசியதெல்லாம், 'பிற்பகல்' விளைவுகளைப்பற்றித்தான். அப்பப்பா...அவைதான் எவ்வளவு சோகமானவை! நாவலைத் துவக்கி வளர்த்து, சிக்கல்களைப் பாத்திரங்களுக்குள் சிருஷ்டித்துவிட்டு, முடிக்கத்தெரியாத எழுத்தாளன் நிலையில்தான் தத்தளித்தார் மஸ்தான். துயரச் சரட்டால் பின்னப்பட்ட வலையே அவர் வாழ்வுக் கதை. அவர் தம் கதையை முடிக்காத கட்டத்தில் மார்க்கட் தெருவும் அணுகிற்று. மறுநாள் என் வீட்டுக்கு வந்துவிட்டுப் போகும்படி வற்புறுத்தினேன். அவரும் அதற்கு இசைந்தார். என் வீட்டு விலாசத்தையும் இடம்பற்றிய விபரங்களையும் அவருக்குத் தெரிவித்து விட்டு விடை பெற்றுக்கொண்டேன். அவர் வந்த காரியத்தை மட்டும் கூறவில்லை.

ஒருமுறை நம் வாழ்க்கையில் சந்தித்துப் பழகியவர்களை மீண்டும் எங்கேயாவது, காலங்கடந்து சந்திக்க நேரிடுகிறது. அப்பொழுது எவ்வளவோ மாறுதல்களைக் காண்கிறோம். மனித வாழ்வும், பருவ மாற்றங்களுக்குத் தப்பியதல்ல. பூமியினுள் பழங்கால வரலாற்றுச்சின்னங்கள் புதைந்து கிடப்பதே போல, மனிதனின் நினைவுக் குகையிலும் எவ்வளவோ பதுங்கிக் கிடக்கின்றன.



அவைகளைக் கிளறினால்......

நானும் என் நண்பர்களும் தாஜ்மஹால் ஹோட்டலில் உணவருந்தினோமென்றால், இருப்பவற்றில் அது உருப்படியானது என்பதினால்தான். அந்த ஹோட்டலின் உணவுச் சுவையைவிட, ஹயாத்தின் பேச்சு எங்களுக்கு மிகவும் ருசித்தது. பகலெல்லாம் வேலை செய்து அலுத்துவரும் எங்களுக்கு மகிழ்வூட்டும் அவன் நகைச்சுவை பொதிந்த பேச்சு மிகவும் குஷியூட்டும்! நாமாகவே அவனிடம் எதுவும் கேட்கவேண்டியதில்லை. அவனாகவே மடையைத் திறந்துவிடுவான். வெள்ளம் போல அவனது பேச்சு தடம் புரண்டோடும். அவன்தான் ஹோட்டல் சிப்பந்திகளின் கங்காணி. மஸ்தானுக்குத் தூர உறவு. அவர் இல்லாதபோது கல்லாப் பெட்டியில் அவன் அமரிக்கையாகக் காணப்படுவான். அவர் வீட்டுக்கு வேண்டிய காய்கறிகள், சாமான்கள் தினம் வாங்கிப் போடுவதும் அவனே. எனவே அங்கு சுதந்திரமாகப் பழகும் வாய்ப்புப் பெற்றவனதலால், அவர் வீட்டுச் சமாச்சாரங்கள் அவனுக்குப் பிளேட் போட்ட மாதிரி.

மஸ்தான் எதற்கும், எதிலும் மசிகிற புள்ளி. இயற்கையிலேயே துவளுகிற சுபாவம். ஏன் என்று கேட்டறியார். அவருக்கு நீதி அநீதி, நியாயம் அநியாயம் என்பதெல்லாம், ஜைனப் சொல்லிக் கொடுத்தால் தெரியும். அவர் ஊஞ்சலாகவும், ஜைனப் அதை ஆட்டுவிக்கும் கயிறாகவும் விளங்கினார்கள். அவர் எவ்வளவுக்கு அமைதியோ, அவ்வளவுக்கு அவள் புயல்! அவள் வாயும் நாக்கும் வானத்திற்கு நீளும்! அவள் நெருப்புப் பிரசங்கத்தில், அவர் மெழுகுப் பொம்மையாய் உருகித் தவிப்பார். இந்தமாதிரி அவரைப் படுத்திவைப்பதற்கு, அவளிடம் சரியான பிடி இருந்தது. அவளது நகைகளை ஈடுவைத்துப் பெற்ற பணமே, கடையின் முதலாகப் புழங்கியது. பின்னர் கேட்கவா வேண்டும்? இருவருக்குள் ஏதாவது பிணக்கு முற்றினால் உடனே ஜைனப் தன் நகைகளைக் கோரிவிடுவாள் என்ற பயம், மஸ்தான் உள்ளத்தில் நிறைந்து இருந்தது. அவரின் போக்கை நடத்தாட்டும் சாட்டைக் குச்சியாக ஜைனப் விளங்கியதில் வியப்பில்லை.

ஒருநாள் ஹயாத் அதிர்வேட்டொன்றைக் கிளப்பினான். வேட்டுக்கூட அத்தகைய அதிர்ச்சியைத் தந்திருக்காது. ஆனால் அவன் கொண்டுவந்த சேதி? அதைக் கேட்ட மஸ்தான், அடுத்த விநாடி அவர் வீட்டிலே நின்றார்.

''என்ன விஷயம், ஹயாத்?''

''வேறொன்றுமில்லைபாய்! சாட்டைக் குச்சி ஒடிந்துவிட்டது!'' எனப் பரிதாபமாகக் கூறினான். எப்பொழுதும் கிண்டலாகவும், நையாண்டியாகவும் பேசும் ஹயாத், இப்போதும் அந்த பாணியிலே பேசினாலும், அவன் பேச்சில் துயரம் மிதந்துவந்தது. விஷயம் இவ்வளவுதான்: இடுப்பில் சுமை ஏந்தி, ஏணியில் ஏறிய ஜைனப் சறுக்கிக் கீழே விழுந்துவிட்டாள். இடது கால் பிசகிவிட்டது. நடக்கமுடியாமல் படுக்கையில் விழுந்து, சிறகொடிந்து கிடக்கிறாள். மஸ்தான் வீட்டுக்குச் சென்று என் அனுதாபத்தை அவருக்குத் தெரிவித்தேன். நல்ல டாக்டரிடம் ஜைனபைக் கூட்டிச் செல்லும்படி சொல்லிவிட்டு வந்தேன்.

பணத்தைப் பொருட்படுத்தாமல், ஜைனபின் பிசகிய காலைக் குணப்படுத்த மஸ்தான் எவ்வளவோ முயன்றார். எத்தனையோ டாக்டர்கள், நாட்டு வைத்தியங்கள்! எண்ணற்ற ஊசி மருந்துகள்,

தைலங்கள்! இத்தியாதி...; எல்லாம் புழுதியில் தூவிய விதைகளின் கதியையே அடைந்தன! ஜைனப் முடமானதிலிருந்து, வீட்டுக் காரியங்களும் முடமாகிக் கிடந்தன. அவள் கால் பிசகியதிலிருந்து, மஸ்தானின் 'நடையும்' பிசகியது. அவர் இப்போதெல்லாம் இரவில் வீட்டுப்பக்கம் தென்படுவதே அரிதாகிவிட்டது. முன்னைப்போல் அவரை விரட்டிப் பிடிக்க அவளால் முடியவில்லை. அவள் உள்ளத்திலும் காலின் முடம் ஏறிக்கொண்டு வேதனைப்பட்டது. வழி மாறிப் போகும் கணவனை நினைத்து எந்தப் பெண்தான்—அவள் ராங்கியாக இருந்தாலும்—வருத்தப்படமாட்டாள்? வீட்டுப் பராமரிப்பைத் தன்னாலும் மேற்கொள்ள முடியவில்லை; வேலைக்காரிகள் கையில் ஒப்படைக்கவும் அவள் மனம் இசையவில்லை. அவள் உள்ளத்திலே சதா அதைப் பற்றிய சிந்தனையே ஊடாடியது. மஸ்தானை வழிக்குத் திருப்பவேண்டுமே? அவள் சிந்தித்ததில் ஒரு முடிவு உருவாகியது. முதன்முதலாகத் தன் வாழ்விலேயே இப்போதுதான் தன் சுயநலத்தைக் கொஞ்சம் தியாகம் செய்ய முன்வந்துள்ளாள் ஜைனப். அந்தத் தியாகத்திலும்கூட சுயநலம் படர்ந்துதானிருந்தது. அவள் திட்டமெல்லாம், பூவையும் பறிக்க வேண்டும்; முள் குத்தாமலும் இருக்கவேண்டும்! தவிர்க்கமுடியாததாகிவிட்டதாலேயே அவள் இந்த முடிவுக்கு விரைந்தாள்.

எதிர்பார்த்துக் கொண்டிருந்த தருணம் அன்று கிடைத்தது. எலிகளின் தொல்லையால் வீடெங்கும் நெல் பரவிக்கிடந்தது. வீட்டுக்குள் நுழைந்த மஸ்தான்,

''இதென்ன அலங்கோலம் ?'' எனச் சிறிது உறக்கக் கேட்டார்.

இந்தச் சமயத்தை ஜைனப் தனக்குச் சாதகமாக்கிக்கொண்டாள்.

“இப்படியே நீங்க வீட்டைக் காடாகப் போட்டுட்டுப்போங்க. எல்லாக் காரியத்தையுமே வேலைக்காரியிடம், வீட்டுட்டா உருப்பட்டாப் போலத்தான். பொறுப்பாக் கவனிக்கிறதுக்கு வீட்டுக்கு ஒரு ஆள் வேண்டாமா?” என இரைந்தாள், படுத்தபடியே.

“இப்போது அதற்கு என்ன செய்யணும்? உன் கதி இப்படியாச்சு!” எனக் கைசேதப்பட்டார், மஸ்தான்.

“இப்படிக் கிட்ட வாங்க, ஒரு விஷயம்!” ஜைனப் மெல்ல அவரிடம் தன் முடிவை அவிழ்த்தாள். வேலி தாண்டிப் போகிறவர் வீட்டுக்குள் வளைய வளைய வரவேண்டுமென்றால், அவருக்குக் கசக்குமா? அதிலும் முள்ளில்லாத மலராக இருந்தால்......ஜைனப் எல்லாவற்றையும் திட்டப்படியே படுக்கையில் கிடந்தவாறே செய்தது, அவளுக்கே உரிய அலாதியான சாமர்த்தியத்தினால்தான்.

பிழைப்புத் தேடிவந்து அங்கேயே குடியேறிப்போன ஒரு மலையாளக் குடும்பத்தைக் குறிவைத்தாள் ஜைனப். தாயும் மகளும்தான் அந்தக் குடும்பம். வாடகைக் குடிலில் குடியிருந்துகொண்டு, இடியாப்பம், ஆப்பம் போட்டு விற்று வாழ்ந்த குடும்பம் அது. அந்த ஊரில் அவர்களுக்கு உறவு கிடையாது; அந்தப் பெண்ணின் தாயும் இன்னும் கொஞ்ச காலத்தில்மண்டையைப்போட்டு விடுவாள். வறுமையானாலும் ஹலீமாவின் மேனி பசும்பொன்தான். மாத்துக் குறையாதகுணம். இருட்டில் பிச்சிப்பூ மலர்ந்தாலும், மணமிழந்தா போகிறது? வறுமை என்றாலும் பெருமையான பண்புகளை இழந்து நிற்கவில்லை அந்தப் பெண். எந்தச் சீமான் வீட்டுப் பெண்ணும், ஹலீமாவின் வனப்பிற்கும், குணத்திற்கும் ஈடாக மாட்டாள், இந்த 'நாதி'யற்ற, ஆதரவற்ற இடத்தைப் பிடித்தாள் ஜைனப். தன் சொல்லுக்கு மாறு சொல்லக்கூடியவளாக இருக்கக்கூடாது; அவளுக்காக வக்காலத்து வாங்க யாரும் வரக்கூடாது! இந்தத் திட்டத்திற்கு ஒத்து வரக்கூடியவள் ஹலீமா எனக் கண்டுகொண்ட ஜைனப், வேண்டிய முயற்சிகளைத் துரிதமாக்கினாள். மஸ்தானும், ஏழைப் பெண்ணைத் தன் 'இரண்டாந் தாரமாக அடைவதைப் பற்றி தாழ்வாக எண்ணவில்லை. ஹலீமாவைப் போன்ற பெண் தனக்கு வாய்க்கவேண்டுமே என்றுதான் அவரது சபல புத்தி அவாவியது!

மஸ்தானுக்கு மனைவியானாள் ஹலீமா. அவளைத் தன் மகளைப் போல பாவித்தாள் ஜைனப். தன்னைக் கரைசேர்த்தவள், வாழ்வித்தவள் ஜைனப் என்ற எண்ணம் ஹலீமாவின் இதயத்தில் அழுத்தமாக இடம் பெற்றது. அந்நன்றி யுணர்ச்சியோடு, ஹலீமா தன் அக்காவிற்குப் பணிவிடைகள் புரிந்தாள். அந்த வீட்டு அரசியாக ஜைனபும், அவள் இடும் ஆணைகளைச் செயலாற்றும் அதிகாரியாக ஹலீமாவும் விளங்கினார்கள். ஜைனப் எதிர்பார்த்தபடி ஹலீமாவின் தாயும், பொறுப்பான இடத்தில் மகளைக் கொடுத்துவிட்டோம் என்ற திருப்தியோடு தலை சாய்த்தாள். அவள் மரணத்திற்காக அதிகமாக வருத்தப்பட்டதாக, ஏன் கண்ணீர் வெள்ளத்தைக் கொட்டியதாகக் காட்டிக்கொண்டது ஜைனப் தான்!

மஸ்தானிடம் இப்பொழுது புதிய மாறுதல் காணப்பட்டது. ஹலீமா அனாதையாகிவிட்டதால் அதிகமான பரிவைக் காட்ட ஆரம்பித்தார். பழைய பழக்க வழக்கங்களையெல்லாம் கழற்றி எறிந்துவிட்டு, ஹலீமாவின் உறவில் ஒட்டிக்கொண்டார். அவளது பொன்னான அழகும், குணமும் அவருக்குப் பிடித்துவிட்டன. அவர்கள் இருவரும் இன்பகரமாகப் பேசி, இரவைக் கழித்தார்கள். வாழ்வின் சுகத்தைப் பூர்ணமாக அனுபவிக்கத் தலைப்பட்டார் மஸ்தான். ஹலீமாவிற்குப் பூத்தாடைகளும், பட்டாடைகளும் வாங்கித் தருவார். ஜைனப் அனுமதியுடன் சங்கிலி ஒன்றும் ஹலீமாவுக்குத் தந்தார். அவர்களின் வாழ்வு உல்லாசப் பயணம் போல சென்றது. அதைக் கண்ணுற்ற ஜைனபிற்கு, கசப்புமாத்திரையை விழுங்கியது போலிருந்தது. சீக்கை வைத்தியரிடம் காட்டத் துணிந்தபின், அவர் தரும் மருந்தை உட்கொள்ளத் தவறினால் அது எவ்வளவுவிசித்திரமோ அதைப்போலவே தன் கணவனின் எதிரொலியைக் கேட்க ஜைனப் தயங்கினாள். ஆனால்தன் மன உணர்ச்சிகளை அவள் வெளிக் காட்டிக்கொள்ளவில்லை. ஹலீமாவோ அக்கா ஜைனப்மீது கொண்ட அன்பு கலந்த உணர்ச்சிகளை இழக்கவே இல்லை. அவள் கால் முடத்தைப் போக்க அவளைப் புத்தேரி ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்ல வேண்டுமென்று கூறினாள் ஹலீமா. மூவரும் கிளம்பினார்கள்.

ஹயாத் இப்பொழுது புதிய—ஆனால் மகிழ்ச்சி தரக்கூடிய செய்தியைக் கொண்டுவந்தான். மஸ்தான் அவனுக்குக் கடையைக் கவனித்துக்கொள்ளும்படி எழுதிய கடிதத்தில் கண்டிருந்த வாசகமே அந்தச் செய்தி. ஜைனபிற்கு முடம் குணமாகிவிடும் என்று டாகடர் நம்பிக்கை தெரிவிப்பதாக எழுதியிருந்தார். சிறிது காலத்தில் அவர்கள் புத்தேரியை விட்டும் திரும்பினார்கள். இப்பொழுது ஜைனப் நடக்கலாரம்பித்தாள். ஜைனபுக்குக் குணமானதில் ஹலீமாவுக்கு எல்லையற்ற மகிழ்வு. பேதைப் பெண்!

வெகுளி உலகம் தெரியாத வெள்ளைமனம்!

மஸ்தான் தன்பால் அன்பைச் செலுத்த அவாவியது ஜைனபின் உள்ளம். ஆனால் இளமை நலமும் இன்பப் பொலிவும் கொண்ட ஹலீமாவிடமே மஸ்தான் ஈடுபாடு கொண்டிருந்தார். புத்தாடைமீது ஏற்படும் மோகம் தான் அதற்குக் காரணம். மேலும் ஜைனபின் சுடுசொல்லை அவருக்கு இப்பொழுது ஏற்கமுடியவில்லை. ஹலீமாவின், இன்மொழிகளும், மென்சொல்லும் குடும்பத்தில் ஆணின் இடத்தைத் தெளிவாக அவருக்குப் புரியவைத்தன. பெண்ணை அன்பால் ஆளப் பிறந்தவன் ஆண்; ஆணைத் தன் அட்டகாசத்தால் அடக்கப் பார்க்கும் பெண், பெண்ணே அல்ல என்று அவருக்குப் புலப்பட்டது. 'இனியும் தான் முடமில்லை. அப்படியிருக்கையில் நேற்று வந்தவளுக்கு......' என்ற எண்ணம் ஜைனபின் உடலிலும், உள்ளத்திலும் ஏறி விட்டது. அதன் பலனாக, ஹலீமாவின் நிழலே ஜைனபுக்கு ஆகாது. அவள் செய்வதொன்றும் பிடிக்காது. தன் சாட்டைக் குச்சியை ஹலீமாமீது திருப்பிப் பிடித்தாள், ஜைனப். அட்டகாசம் மீண்டும் பெண்மையில் புகுந்து வேலை செய்தது. ஹலீமாவைப் பற்றி மஸ்தானிடம் கோள் மூட்டினாள் ஜைனப். தினசரி ஏதாவது கூறுவாள், வாய்க்கு வந்தபடி! வீட்டில் சிறு சிறு திருடுகள் போய்க் கொண்டிருந்தன.

அதற்கெல்லாம் ஹலீமாவைக் காரணமாக்கியது ஜைனபின் வாய்ப் பந்தல். ஜைனப்—'காக்கா பொன்' என்பதைக் காட்டிவிட்டாள். ஹலீமாவிற்கு இப்பொழுது ஜைனபைப் பற்றிய உண்மை நிலை தெரிந்தது. ஜைனப் ஹலீமாமீது காட்டிய அன்பு நிழல், வட்ட வடிவில் விழும் கருவேல மர நிழல்தான்! அந்த மரத்தின் நிழலில் ஒதுங்கமுடியாதபடி கூரிய முட்கள் பரவியிருக்குமே! மஸ்தானுக்கும் இக்கட்டான நிலையை விளைவித்தாள் ஜைனப். தன் நகைகளைக் கோரலானாள். மஸ்தானுக்கு இப்பொழுது சமாளிக்கும் திறன் குறைந்து வந்தது. எனவே எதற்கும் சீற்றமாகப் பதில் பேசுவார்; ஆத்திரத்தோடும், படபடப்போடும் கூடியதாக அவர் செயல்கள் இருந்தன. மன நிம்மதியை அவர் இழந்தார்.

அன்று ஹோட்டலில் மஸ்தான் மிகவும் கோபமாகக் காட்சியளித்தார். அவர் சினம் எனக்கு ஆச்சரியத்தை அளித்தது. அவர் ஆத்திரத்திற்குக் காரணம்? அக் கேள்விக்கு விடையாக என்முன் நின்றான் ஹயாத். முந்தின நாள் இரவு 'கல்லாவை' எண்ணி வீட்டுக்குக் கொண்டு போனார். மறுநாள் காலை ஒரு நூறு ரூபாய் நோட்டைக் காணவில்லை.



அந்த விஷயமாகத்தான் அவர் ஆத்திரமாகஇருந்தார். காணமற்போன ரூபாய் கிடைத்ததோ கிடைக்கவில்லையோ எனக்குத் தெரியாது. எனக்கு அன்றே வேறு ஊருக்குமாற்றலுத்திரவு வந்தது.

அதன்பிறகு நடந்த விவரங்களை எல்லாம் இப்பொழுது நாங்களிருவரும் நடந்து செல்லுகையில் மனம் விட்டுப் பேசிக்கொண்டே வந்தார், மஸ்தான். அவர் பேச்சில் இடையிடையே பெருமூச்சு வெளி வந்தது. அந்தரங்கத்தில் நடந்தவற்றைக்கூட என்னிடம் ஒளிவு மறைவின்றிக் கூறியது எனக்கு ஆச்சரியத்தைஅளித்தது.

'முற்பகல் செய்த வினை பிற்பகலில் விளையுமென்கிறார்களே?' அது எவ்வளவு உண்மையாகி விட்டது'' என்று கைசேத முற்றார். பிற்பகலின் விளைவுகள் தான் என்ன?

நூறுரூபாய் நோட்டைக் காணவில்லை என்றதும், வீடெங்கும் தேடினார் மஸ்தான். உடன் ஜைனபும், ஹலீமாவும் தேடினார்கள். ஆனால் அது எங்கும் காணப்படவில்லை. அலமாரியில் வைத்துப் பூட்டியிருந்த ரூபாய் வெளியில் எப்படிப் போனது? அலமாரியும் பூட்டியே இருக்கிறது. ஜைனப் தன் பெட்டியைத் திறந்து காட்டினாள். அதில் தம்பிடி காணப்படவில்லை. ஹலீமாவிடமும் ஒரு சின்ன 'டிரங்' பெட்டி உண்டு. அது எப்பொழுதுமேதிறந்துதான் கிடக்கும். அந்தச்சமயம் ஹலீமா கொல்லைப்புறத்திற்குச் சென்றிருந்தாள். மஸ்தான் அவளைக் கேட்காமலேயே அவள் பெட்டி



யைத் திறந்துபார்த்தார். அவர் வாங்கிக்கொடுத்த பட்டாடைகளும், சட்டைகளும்தான் இருந்தன. அவளது கல்யாணப்பட்டை வெளியிலே எடுத்துப் பிரித்துப் பார்த்தார்.

''மோசக்காரி! உண்ட வீட்டில் இரண்டகம் செய்யும் கள்ளி.''

கலியாணப் பட்டிலிருந்து விழுந்த நூறு ரூபாய் நோட்டைக் கண்டதும் மஸ்தான் ஆத்திரமாகக் கத்திவிட்டார்.

அப்பொழுதுதான் ஹலீமா கொல்லைப்புறத்திலிருந்து உள்ளே நுழைந்துகொண்டிருந்தாள். எவ்வளவு வையமுடியுமோ, அவ்வளவும் அவளை வைதார். அடியாத குறை ஒன்றுதான். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை.

''நான் திருடவில்லை'' எனப் பவ்வியமாக மொழிந்தாள்.

''பின் யார் திருடினார்கள்?'' என ஜைனப் ஆத்திரத்தோடு முந்திக்கொண்டாள்.

காலமெல்லாம் கட்டிவைத்த பொறுமையைக் கண நேரத்தில் இழந்துவிட்டார் மஸ்தான்.

''நாளையே உன் கணக்கைத் தீர்த்து வெளியே தள்ளுகிறேன் பார்!'' எனக் கோபமாகவும், ஆவேசமாகவும் பேசினார்.

''குப்பைச் செடியை வீட்டு முற்றத்தில் நட்டதற்காக என் புத்தியை செருப்பாலடிக்கணும்'' எனத் தூபம் போட்டாள் ஜைனப்! அவள் எதிர்பார்த்தது தானே?

ஹலீமாவுக்கு உடலெல்லாம் குன்றி, உள்ளமெல்லாம் ஒடுங்கி நடுங்கியது? அவள் அப்பொழுது நாலு மாதச் சூலி.........மறுநாள் காலை விடிந்தால்......ஜைனபின் கனவு நனவாகும். ஆனால் அதற்கு இடம் வைக்கவில்லை, பேதை ஹலீமா! மறு நாளும் பிறந்தது ...ஆனால் ஹலீமா எங்கே?

ஜைனப் மூக்கில் விரலை வைத்தாள்: இரண்டில் ஒன்றை கழித்து விடலாம் என்று எண்ணிய மஸ்தானுக்கு ஆச்சரியமாக இருந்தது! போலீஸில் புகார் செய்யலாமா என எண்ணினார். ஆனால் தன் மனைவியைக் காணவில்லை என்று எந்தக் கணவனாவது புகார் செய்தால், அதைவிடக் கேவலம் வேறென்ன இருக்கிறது?

ஜைனபுக்கு உள்ளூர மகிழ்ச்சி. ஹலீமா விட்டுச் சென்ற நகைகளைத் தான் அணிந்துகொண்டாள். ஹலீமாவின் ஸ்தானத்தைக் கைப்பற்ற முயன்றாள். அதில் ஓரளவும் வெற்றிபெற்றாள். ஒரு குழந்தைக்குத் தாயாகப் போகிற எண்ணமும், மகிழ்வும் அவளிடத்தில் கொஞ்சிக் குலாவின. மஸ்தானும் இப்பொழுது ஜைனப்மீது பற்று வைத்தார். சில சந்தர்ப்பங்களில் ஹலீமாவைப்பற்றி எண்ணுவார். அந்த எண்ணம் நீண்டநேரம் அவர் மனத்தில் நிலைத்து நிற்காது. ஜைனப் உள்ளத்திலே மட்டும் ஹலீமா நிரந்தரமாக இடம் பெற்றாள்! எத்தகைய இடம்? அவள் நெஞ்சைத் துணுக்காக்கிக் கொண்டிருந்தது ஹலீமாவின் உருவம்!

ஜைனப் ஓர் ஆண் குழந்தையை ஈன்றெடுத்தாள். மஸ்தானுக்கு ஒரே மகிழ்ச்சி. ஜைனபிற்கு ஒரே ஆனந்தம். ஆனால் அந்த ஆனந்தத்திற்குப் பின்னே கேட்கும் அந்த சோகக் குரல்; 'குவாகுவா' என்று கதறியது அந்தக்குழந்தை! அக் குழந்தையின் வலது கால் பாதம் கோணலாகத் திருகியிருப்பானேன்? அவலக் குரலை எழுப்பிக் கத்தினாள் ஜைனப். அவள் உள்ளம் முடமாகிவிட்டது. 'தன் மகன் நொண்டியா?' என்ற ஏக்கம் அவளைப் பிடித்தாட்டியது! அப்பொழுது ஹலீமாதான் அவள் முன்வந்து நின்றாள்! அவள் பழி வாங்கிவிட்டாளா?

முடமான உள்ளத்தோடு, அவளுக்கு வாதம் கண்டது. படுக்கையை விட்டு அவளால் எழுந்திருக்கவே முடியாத நிலை வளர்ந்துவிட்டது. படுத்த படுக்கையாகிவிட்டாள். இப்பொழுதெல்லாம் அவள் மனக்கண் முன் ஹலீமாதோன்றவாரம்பித்தாள். உறக்கத்திலும் 'ஹலீமா' என்றழைக்கத் தலைப்பட்டாள்.

மஸ்தானின் உள்ள வேதனைக்கு எல்லையே சொல்லமுடியாது. ஜைனபைக் காணவும், கையில் ஏந்திப் பிடிக்க நாதியற்றுக் கிடக்கும் குழந்தையைப் பார்க்கவும் அவருக்குப் பரிதாபமாக இருந்தது. இந்த நேரத்தில் அவர் உள்ளத்திலும் ஹலீமா தோன்றாமல் இல்லை. ஆனால் அவள் செய்த திருட்டுக் குற்றம்......

கணவனைச் சைகை செய்து அழைத்தாள் ஜைனப். அவள் அருகிலே சென்றார் மஸ்தான்.

''எனக்குஹலீமாவைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது'' ஜைனப் மெல்லிய குரலில் கூறினாள்.

''அந்தத் திருட்டுக் கள்ளியின் பேச்சை எடுக்காதே ஜைனப்!'' மஸ்தான் சூடாகப் பேசினார்.

''அவள் திருடவில்லை'' என்று கூறிக்கொண்டே மஸ்தானிடம் உண்மையைக் கக்கினாள் ஜைனப்.

''அப்படியா, அடிபாதகி'' என ஏசிவிட்டார் மஸ்தான்.

இந்த அவல நிலையிலும், தன் சுயநலம் பொருட்டே ஜைனப் உண்மையைக் கூறினாள். அப்படியாவது அவர் ஹலீமாவைத் தேடிக் கொண்டுவந்தால், அவள் தன்னையும் தன் குழந்தையையும் பராமரிப்பாள் என்ற எண்ணம் தான்.

''இனி உன் முகத்தில்கூட விழிக்கக்கூடாது, சண்டாளி! அநியாயமாக அந்த அனாதைப் பெண்ணை வீட்டைவிட்டு விரட்டிவிட்டாயே?'' எனக் கதறினார் மஸ்தான். அவர் கண்களில் நீர் பனித்தது. அவர் நெஞ்சில் சோகம் கப்பியது. என்ன செய்வதென்றறியாது விழித்தார்! குற்றமற்ற, ஒரு பெண்ணை வஞ்சித்து விட்டோம் என்ற எண்ணம் அவர் உள்ளத்தைப் புண்படுத்த ஆரம்பித்தது. இந்த உண்மையை ஆத்திரத்தால் முன்பே உணரமுடியாமற் போனோமே என்று வருந்தினார். அலமாரியை ஜைனப் கள்ளச் சாவி போட்டுத் திறந்து நூறு ரூபாயை எடுத்து, ஹலீமாவின் பெட்டியில் திணித்ததை அவள் சொல்லித்தானே இப்பொழுது தெரிகிறது? இந்த விஷயம் ஹலீமாவுக்கும் தெரிந்திருக்க முடியாதே? இப்பொழுது ஹலீமாவை எங்கு போய்த் தேடுவது? மஸ்தானின் கதை இவ்வளவு தான்.

மனதில் இந்தச் சோக சம்பவத்தை எண்ணிக்கொண்டே வீடு நுழைந்தேன். பெண் புத்தி பின் புத்தி என்பார்களே, அது உண்மையோ என்று எண்ணினேன். ஜைனப் பொறாமையால் அவ்விதம் செய்தாள். ஆனால் ஹலீமா காணாமற் போகக் காரணம்! அது தான் எனக்கும் விளங்காத புதிராக இருந்தது, இரண்டு மனைவியருக்குள் நீதமாக நடக்கத் தவறியதின் விளைவுகள் இவ்வளவு துயரமாகவா இருக்கவேண்டும்?

மறுநாள் ஞாயிற்றுக்கிழமையாதலால் வீட்டில் இருந்தேன். காலையில் வழக்கமாக வரக்கூடிய வேலைக்காரி வரவில்லை. வீட்டுக் காரியங்கள் அதனால் முடங்கிக் கிடந்தன. அந்த வேலைக்காரி வந்து கிட்டத்தட்ட ஒரு மாதம் தான் ஆகிறது. ஏழெட்டு வீடுகளில் வேலை பார்க்கும் அவள் எல்லோர் அன்பையும் சம்பாதித்துவிட்டாள். மணி ஒன்பதாகியும் வராததினால், வீட்டு வேலைகளை என் மனைவியே செய்துகொண்டிருந்தாள். அவள் வேலை செய்துகொண்டிருக்கையில் வேலைக்காரி தன் மகனையும் அழைத்துக்கொண்டு வீட்டில் நுழைந்தாள்.

என் மனைவியும் அவளும் ஏதோ பேசினார்கள். அவை ஒன்றும் என் காதில் விழவில்லை. கொஞ்ச

நேரங் கழித்து என் மனைவி என்னிடம் வந்து ''வேலைக்காரி இன்றிலிருந்து நின்றுவிடுகிறாளாம் வேறு வேலைக்காரியைப் பாருங்கள்'' என்றாள்.

''என்ன காரணம்?'' என்று கேட்டேன்.

''அவள் ஊருக்குப் போகிறாளாம்!'' என்று சுருக்கமாகப் பதில் தந்தாள்.

அதன்பிறகு வீட்டினுள்ளே அவர்களுக்குள் நிகழ்ந்த பேச்சு என் காதில் விழ ஆரம்பித்தது. அந்தப் பேச்சிலிருந்து கிடைத்த விஷயம்...! என் உள்ளத்தில் வியப்புக்கு மேல் வியப்பு ஏற்பட்டது. யாரோ அவள் ஊர்க்காரர் அவளைத் தேடிக்கொண்டு வந்திருப்பதாகவும், அதனால் கொஞ்ச காலத்திற்கு வெளியூர் சென்று பின்னர் வருவதாகவும் வேலைக்காரி கூறிக்கொண்டிருந்தாள்.

''அவர் உனக்குச் சொந்தக்காரரா?'' என் மனைவி கேட்டாள்.

''ஆமாம்...எனக்கு நெருங்கிய சொந்தம்!''

''அவரோடு உங்கள் சொந்த ஊருக்குப் போய்விட்டுத் திரும்பி வந்தாலென்ன?'' மீண்டும் என் துணைவி கேட்டாள்.

''அனாதையாக இருந்த என்னை வாழ்வித்த ஒரு பெண்ணின் வாழ்வு என்னால் பாழ்பட்டது. என்மீது அவள் திருட்டுக் குற்றம் சாட்டவும் நான் வெளியேறி விட்டேன். மீண்டும் என் கணவரைக் காண நேரிட்டால், ஒரு வேளை அவரோடு வாழவேண்டி நேரிடலாம். அதனால் அந்தப் பெண்ணின் வாழ்வும் பாழாகி விடலாம். அவளாவது நிம்மதியாக வாழட்டுமே?'' அவள் குரலில் தாபம் மிதந்தது.

''அட பாவமே! புருஷனோடு வாழ யாருக்கும் கசக்குமா? பேசாமல் உன்னூருக்கு அவரோடு போ!''

''அது முடியாதம்மா? எனக்கு இந்த வாழ்வே நிம்மதி அளிக்கிறது. என் கழுத்தில் கிடக்கும் தாலியோடே நரனும் வாழ்க்கையை முடித்துவிடுவேன். முன்பு அதற்கு வந்த ஆபத்திலிருந்தும் தப்பிவிட்டேன்;அதுவேபோதும்'' என வேலைக்காரி கூறினாள்.

வெளியே என்னை யாரோ கூப்பிடும் குரல் கேட்டு எழுந்திருந்து சென்றேன்.

''கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை. என் விதி, தம்பி. என் தலைவிதி!'' என்று கூறிக்கொண்டே நுழைந்தார் மஸ்தான்.

''என்ன விஷயம்?'' என்றேன், அவரை அமரும்படி சைகை காட்டிக்கொண்டே.

''நான் உங்களிடம் முதலில் இந்த ஊருக்கு வந்த சமாச்சாரத்தைச் சொல்லவில்லை. இங்கு மார்க்கட் தெருப்பக்கம் என் ஹலீமா இருப்பதாகக் கேள்விப்பட்டுத்தான் வந்தேன். நானும் அவளை ஏழெட்டு மாதங்களாகத் தேடிக்கொண்டு அலைகிறேன். முடிவாக அவளை இங்கு தேடிப் பிடித்துவிட்டோம் என்ற நம்பிக்கை இருந்தது. அதுவும் சிறிது நேரத்திற்கு முன் விசாரித்தபின், வீண் என்றாயிற்று. ஹலீமா அந்தத் தெருவை விட்டுப்போய் ஒரு மாதமாகிறதாம். எங்கு போனாளோ?'' என வருத்தமுடன் கூறினாள்.

''அப்படி நம்பிக்கை இழந்து விடாதீர்கள்! ஆண்டவன் நல்வழி காட்டுவான்!'' என்று தெம்பூட்டினேன்.

இரண்டு கப் சாயாவை அனுப்பும்படி, வேலைக்காரியின் மகளிடம் உள்ளே என் மனைவிக்குச் சொல்லியனுப்பினேன். சிறிது நேரத்தில் இரண்டு கப் சாயாவையும் வேலைக்காரி மேஜை மீது வைத்துவிட்டுத் திரும்பவும், மஸ்தானின் கண்கள் அவளைக் கண்டு கொண்டன.

''இவள்......'' என இழுத்தார் திகைப்புடன்.

நான் பதில் சொல்லவில்லை.

''இவள் என் ஹலீமாதான். என் ஹலீமாவேதான்'' என்று அடித்துக் கூறினார்.

பிறகு மனைவியின்மூலம் அவள் பெயரையும் ஊரையும் கேட்டறிந்தேன். அவள் பெயர் ஹலீமாதான்! அவள் மகள் பெயர் ஜைனப்!......ஹலீமாவின் நன்றியுணர்ச்சியின் வடிவமாகத் திகழ்ந்தாள்அந்தச் சிறுமி!

''நீங்கள் இருவரும் அவளைச் சமாதானப்படுத்தி என்னோடு அனுப்பிவைக்கவேண்டும்.'' என்றென்னைக் கேட்டுக்கொண்டார்.

''உங்கள் 'ஜைன'புக்கு இப்பொழுது எப்படி இருக்கிறது?'' என்றேன்.

''அவள் விட்டுப்போன சுவடுதான் இருக்கிறது. அந்தக் குழந்தையையும் பராமரிக்கத் தகுதியான பெண்மணி இல்லை. ஹலீமாவை வஞ்சித்ததற்கு இறைவன் தண்டனை அளித்துவிட்டான்.'' மஸ்தான் உணர்ச்சியோடு பேசினார்.

ஹலீமாவையும் மஸ்தானையும் தனியே விட்டுவிட்டு, நாங்கள் விலகி நின்றோம். அவர்கள் காலமெல்லாம்அடைத்துவைத்த கண்ணீரைச் சொரிந்து நின்றனர். மழைக்குப் பின் தெளிவு ஏற்படுமே அதுபோல ஹலீமாவின் உள்ளம் தெளிந்திருக்கவேண்டும்! அவள் மஸ்தானுடன் போகத் தயாரானாள். அவள் முகத்திலே புத்தம் புதிய பொன்னொளி பொலிவுறக் கண்டேன். பட்டுப்போன குடும்பத்தைத் தளிர்க்கச் செய்யப்போகும்உற்சாகம் அவள் கண்களில் மிதந்தது.

வெளியில்வீசிய கொட்டையை இப்பொழுது வீட்டில் நட்டுவிடுவார், மஸ்தான். எனவேதான் அவர் என்னிடமிருந்து விடைபெறுகையில்''இனி என்குடும்பம் தழைத்துவிடும்'' என்று நம்பிக்கையோடு கூறினார்.

அவர்கள் இருவரையும், நாங்கள் மனமார வாழ்த்தி அனுப்பினோம். ★

தென்கிழக்கு ஆசியாவில்
எனது அனுபவங்கள்


எழுதுபவர்:
**எம். எஸ். அப்துல் மஜீது பி. ஏ.**


# பாக்குத் தீவினிலே



“எதிர்பார்த்ததற்கு மாறுக கப்பல் முன்னதாகவே வந்துவிட்டதால் வரவேற்பு குழு அங்கத்தினர்களுக்கு செய்தியனுப்பியிருக்கிறேன்; அவர்களும் வந்து கொண்டிருக்கிருர்கள். அது வரை கொஞ்சம் தாமதித்திருக்கக் கோருகிறேன்” என்று நண்பர் நூருத்தீன் கேட்டுக் கொண்டார். எங்களுக்கு அதில் ஒரு சிரமமுமில்லை என்று அவருக்கு ஆறுதல் கூறினேம். கொஞ்ச நேரத்தில் பினங்கு நகரின் முக்கிய பிரமுகரில் பலர் எங்களை வரவேற்க லாஞ்சில் வந்து சேர்ந்தனர். 1947-யிலேயே தம் தந்தையார் மர்ஹூம் ஷேக் மணியம் ஸாஹிப் அவர்கள் பெயரால் ரூ. 6000 பெருமானமுள்ள மாணவர் உபகார நிதியொன்றை நம் சங்கத்தில் நிறுவிய, சமுதாய நலனில் மிகுந்த அக்கரையுடைய ஜனுப் பட்சி எஸ். முஹம்மது இஸ்மாயில் ஜே. பி., தளரா உள்ளமும் ஆர்வமும் உடையவரும் தம் தந்தையார் மர்ஹூம் சுல்தான் அலாவுத்தீன் அவர்கள் நினைவாக ஒரு நிதியை நிறுவி ஆண்டுதோறும் ரூ. 500 கொடுத்து வரும் ஜனுப் கே. எஸ். இஸ்மாயில், பொது நல காரியங்களில் ஊக்கத்தோடு உழைக்கும் கனம் கே. பி. அப்துல் மஜீது, பினங்கு ஐக்கிய முஸ்லீம் சங்கக் கௌரவ காரியதரிசி பெரியார் எம். யு. எம். அப்துல் காதிர் ஆகியோர் எங்களை வரவேற்க வந்தவர்களில் இருந்தனர். நாங்கள் கரைக்குச் சென்ற பிறகும் அங்கும் பலர் எங்களை வாவேற்றனர். நேரே பினங்கு லீக் ஆபீஸுக்குச்

சென்று அங்கிருந்து எங்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பிட்ஸ் ஸ்ட்ரீட் காப்டன் கிளிங் பள்ளிவாசலுக்கு எதிரேயுள்ள ஒரு கட்டிடத்திற்கு வந்து சேர்ந்தோம். வந்த சில நிமிஷங்களில் எங்கள் செவிகளில் விழுந்த பாங்கின் இனிய நாதம் எங்களுக்குப் புத்துணர்ச்சி யூட்டுவதாயிருந்தது. பினங்கில் மட்டுமல்ல, மலாயாவில் உள்ள பள்ளிகளில் எல்லாம் உயர்ந்த மனாராக்களில் ஒலி பெருக்கிகளைப் பொருத்தி பாங்கு சொல்லும் ஒரு நல்ல பழக்கம் நிலவிவருகிறது.

நாங்கள் பினங்கில் ஏறக்குறைய மூன்று மாதங்கள் தங்கியிருந்தோம். அங்கிருந்த முஸ்லிம்கள் அனைவரும் உற்சாகத்தோடு ஒத்துழைத்தார்கள். பொது ஸ்தாபனங்களனைத்தும் எங்களை வரவேற்று மாபெரும் கூட்டங்களை நடத்தின. முஸ்லிம் ரெக்ரியேஷன் கிளப்பின் உற்சாகமிக்க அங்கத்தவர்கள் பினங்கு ரப்பர் டிரேட் அஸோஸியேஷன் மண்டபத்தில் அழகிய மாலை விருந்து ஒன்றை முதன் முதலாக நடத்தினார்கள். அதில் பினங்கு ரெஸிடெண்ட் கமிஷனர் ஆனரபிள் பென் ஹாம் உள்பட பல பிரமுகர்கள் கலந்து கொண்டார்கள். வாலிபர்கள் மத்தியிலே எங்களுக்கேற்பட்ட அபரிமித ஆதரவிற்கு வெற்றிகரமாக முடிந்த இவ்விருந்து ஒரு காரணமாகும். வாலிபப் படையின் முன்னணி வீரரான யூஸுப் ராவுத்தர் கம்பெனியைச் சார்ந்த எனது மறக்கமுடியாத தோழர் இத்ரீஸ் நண்பர் ரஷீத் கான் இவர்களின் சேவையைப் போற்றாமலிருக்க முடியாது. அவர்களுடைய பொன்னான நேரத்தில் பெரும்பகுதியை எங்களுடனேயே அவர்கள் போக்கினர்.

பினங்கு பொது மக்கள் சார்பில் சைனீஸ் ஸிட்டி ஹால் என்னும் மண்டபத்தில் பினங்கில் உள்ள சீன கோடீஸ்வரர் கனம் ஹியாஜு லியாங் அவர்கள் தலைமையில் 25-7-53 அன்று எங்களுக்கு ஒரு பொது வரவேற்பளிக்கப்பட்டது. எங்களுடைய சொற்பொழிவுகளின் மூலம் எங்கள் சுற்றுப் பிரயாணத்தின் நோக்கத்தை அறிந்து கொண்ட தலைவர் தன் முடிவுரையில் எங்களுக்கு ஆதரவு தெரிவித்து வெகுவாகப் பேசி பொது மக்களையும் எங்களுக்கு ஒத்துழைக்குமாறு வேண்டிக் கொண்டார்.

மலாயாவில் பெருந்தனவந்தர்களாக வாழும் சீன மக்கள் தம் இனத்தவரின் கல்வி நலத்திற்காகப் பெருவாரியாக செலவு செய்கிறார்கள். பொதுவே கல்வி முன்னேற்றத்திலும் இவர்களுக்கு ஆழ்ந்த ஆர்வம் உண்டு. மேற்கூறிய தலைவர் எங்களை ஒரு முறை தன் வீட்டுக்குத் தேநீர் விருந்துக்கு அழைத்து எங்களுக்கு உதவி செய்யக் கூடிய நோக்கத்தையும் வெளியிட்டார். இவரைப் போன்றே மலாயாவின் மற்ற இடங்களில் இருந்த சீன தனவந்தர்களில் பலரும் எங்க

ளுக்கு உதவ முன்வந்தனர். என்றாலும் தலைவர் அவர்கள் அதை விரும்பவில்லை. முஸ்லிம் சோதரர்களிடம் முயற்சிப்பதில் பூர்ண வெற்றியில்லை என்றாலே பிறரிடம் உதவி தேடவேண்டும் என்பது நம் தலைவரின் நோக்கமாக இருந்தது.

சைனீஸ் லிட்டி ஹால் உபசாரம் நடந்தஅன்றிரவு பினங்கு ஐக்கிய முஸ்லிம்கள் சங்கத்தின் சார்பில் எங்களுக்கு ஒரு வரவேற்பு அளிக்கப்பட்டது. இந்த இடத்தில் ஐக்கிய முஸ்லிம் சங்கத்தைப் பற்றியும் அதன் உறுப்பினர்களைப்பற்றியும் கொஞ்சம் குறிப்பிடுவது பொருந்தும்.

இச்சங்கத்தின் அங்கத்தவர் அனைவரும் திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள கடையநல்லூரைச் சேர்ந்தவர்கள். பினங்கில் இவர்களில் ஏறக்குறைய ஐயாயிரம்பேர் குடியும் பதியுமாக வாழ்கிருர்கள். பெரிய வியாபாரிகளாக யாருமில்லையென்ருலும் பலவிதமான தொழில்களில் ஈடுபட்டு கண்ணியத்தோடு வாழ்ந்து வருகிருர்கள். இவர்களிடையே மூன்று சங்கங்கள் உண்டு. ஐக்கிய முஸ்லிம் சங்கம் கடையநல்லூர் முஸ்லிம் அஸோஸியேஷன், ஹிதாயத்துல் இஸ்லாம் சங்கம் ஆகிய மூன்று சங்கங்களின் அடிப்படையில் அவர்கள் மூன்று கட்சிகளாகப் பிரிந்திருந்தார்கள். ஒரே ஊரைச் சார்ந்த மக்கள் இவ்வாறு பிரிந்திருப்பது நம் தலைவருக்கு மிகுந்த வேதனையைத் தந்தது. அவர்களிடையே நிலவும் கருத்து வேற்றுமையைப் போக்கி ஒற்றுமையை நிலை நாட்ட உறுதி கொண்டு அதற்காக அல்லும் பகலும் அயராது உழைத்தார்கள். சம்பந்தப்பட்டவர்களைத் தனித் தனியாகவும் ஒன்று கூட்டியும் பல இரவுகளில் நெடுநேரம் வரையிலும் கூட பேச்சு வார்த்தைகள் நடத்தி இறுதியாக வெற்றியும் பெற்ருர்கள். கடையநல்லூர் வாசிகள் அனைவரும் ஒரு மத்திய ஸ்தாபனம் நிறுவிப் பாடுபட ஒத்துக் கொண்டார்கள். இந்தச் சூழ்நிலை நாங்கள் பினங்கை விட்டுப் புறப்பட ஒரு வாரத்திற்கு முன்தான் ஏற்பட்டது.



பினங்கு பிட் தெருவிலுள்ள பள்ளிவாயல்

எங்களுடைய காரியத்திற்காக பத்து லட்சம் வெள்ளியை ஒருவர் நன்கொடை அளித்திருந்தால் எங்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சியேற்படுமோ அதற்கதிகமான மகிழ்ச்சி அவர்களிடையே ஏற்பட்ட ஒற்றுமையைக் காண எங்களுக் கேற்பட்டது.

ஐக்கிய முஸ்லிம் சங்கத்தின் தலைவர் ஜனாப் ஆ. சே. மன்ஸுர் ஸாஹிப். செயலாளர் மு. ந. உதுமான் முஹைதீன் ஸாஹிப். ஓயாது உழைக்கும் பொது நல ஊழியர் நண்பர் உதுமான் முஹைதீனின் சேவையை நான் மறக்கவே முடியாது. ஐக்கிய முஸ்லிம் சங்கத்திற்கு சொந்தக் கட்டடம் ஒன்று உண்டு. அதில் ஒரு பள்ளிக்கூடத்தை அழகிய முறையில் நடத்தி வருகிறார்கள். முறையாகப் பழக்கப்பட்ட தொண்டர் படையும் ஆங்கில முறையில் அமைக்கப்பட்ட இன்னிசை வாத்தியக் குழுவும் பினங்கு முழுதும் இச்சங்கத்திற்கு நல்ல பெயர் தேடித் தந்துள்ளன. அவர்கள் எங்களுக்கு அளித்த வரவேற்பின் போது அலங்கரிக்கப்பட்டிருந்த சங்கக் கட்டடமும் பிரசங்க மேடையும் அணிவகுத்து நின்ற தொண்டர் படையும் வாத்திய கோஷ்டியினர் இசைத்த வரவேற்பு கீதமும் ஒழுங்கான முறையில் நடத்தப்பட்ட கூட்ட நிகழ்ச்சிகளும் இன்று ஒரு அழகிய கனவு போல் என் முன் காட்சியளிக்கின்றன. அந்தக் கூட்டத்தில் எங்களுக்கு ஒரு பண முடிப்பும் அளித்தார்கள்.

கடைய நல்லூர் முஸ்லிம் அஸோஸியேஷன், ஹிதாயத்துல் இஸ்லாம் சங்கம், தென்காசி முஸ்லிம் சகாய சங்கம், போட் மென்ஸ் யூனியன் ஆகிய சங்கங்களும் எங்களுக்காக அழகிய முறையில் வரவேற்புக் கூட்டங்கள் நடத்தி பண முடிப்புகளும் அளித்தார்கள். பினங்கு முஸ்லிம்களிடையே எங்கள் தூதுகோஷ்டிக்கு நல்ல ஆதரவை இத்தகைய கூட்டங்கள் தேடித்தந்தன.

(தொடரும்)

# கேள்வியும்-பதிலும்

(கேட்போருக்கும் மற்ற வாசகர்களுக்கும் நற்பயன் நல்கத்தக்க கேள்விகளே இப் பகுதியில் இடம்பெறும். யார் உள்ளத்தையும் புண்படுத்தும் நோக்கத்தோடும், முழு முகவரியின்றி புனை பெயரோடும், அனுப்பப்படும் கேள்விகள் நிராகரிக்கப்படும். கேள்விகள் கூடியவரை சுருக்கமாகவும் தெளிவாகவும் இருக்கவேண்டும். எங்கள் கருத்துக்கள் தீர்ப்புகளாகமாட்டா)

கே. எஸ். குலாம் முஹியித்தீன்
சென்னை—1.

கே: முல்லா என்னும் சொல்லுக்கு என்ன பொருள்? சிலர் முல்லாக்களை ஏன் தாக்கிக்கொண்டே இருக்கிறர்கள்?

ப: 'முல்லா' என்னும் சொல் 'மவ்லா' என்னும் அரபிச் சொல்லிலிருந்து பிறந்தது. இந்தச் சொல்லின் வழியாகவே மவ்லவீ, மவ்லானு என்ற பதங்களும் எழுந்திருக்கின்றன.

இறைவன் தன் திருமறையில் "..........நிச்சயமாக அல்லாஹ்வே நன்னம்பிக்கையாளரின் 'மவ்லாவாக' (இரட்சகனுக-பாதுகாவலனுக) இருக்கின்ருன். ஆனல் 'காபிர்' (நிராகரிப்போர்) களுக்கோ மவ்லா (பாதுகாவலர்) எவருமிலர்'' என்று (47; 11) கூறுகிருன்.

அன்றி, மற்ருேரிடத்தில் (ஹுவ மவ்லாகும் வ நிஃமல் மவ்லா'') "இறைவனே உங்களுடைய பாதுகாவலன்; பாதுகாவலர்களிலெல்லாம் அருள் மிக்கப் பாதுகாவலன் அவனே" (22;78) என்றும் திருக்குர்ஆனில் வருகிறது.

இத்தகைய மாண்புமிக்க 'மவ்லா'வின் ஊழியர்களாக — அவனுக்காகவே தங்களை அர்ப்பணித்தவர்களாக-வாழ்பவர்களை 'முல்லா' என்னும் பெயரால் குறிப்பிடப்பட்டு வருகிறது.

முஸ்லிம்கள் மிகுதமாக வாழும் வட ஆப்ரிக்காவில் வலீமார்களும் இந்தியாவில் மார்க்கக் கல்வி பெற்றவர்களும், இப் பெயரால் அழைக்கப்படுகின்றனர்.

இஸ்லாமிய சமூகத்திற்கு நண்பனுக, நல்லாசிரியனுக, வழிகாட்டியாக, காலமெல்லாம் விளங்குபவர்கள் 'முல்லா' எனப்படுவோர்.

இஸ்லாமிய அடிப்படை அறிவு சரிவரப் பெற்றில்லாதவர்கள், மேனுட்டுநாகரிகமே உயர்வென்று கண்மூடித்தனமாக நம் முல்லாக்களைத் தாக்குவதும் அந்த நாகரீகத்தில் ஒரு அம்சம் என்று தவருகக் கருதிக்கொள்கின்றனர். இத்தகையவர்களுக்கு அந்த 'மவ்லா'வாகிய அல்லாஹ் (ஜல்) உண்மையான மார்க்க அறிவையும், நேர் வழியையும் கொடுத்தருளிக் காப்பாற்றுவாஞக. ஆமீன்.

எஸ். ஆர். அமானுல்லா,
திரு நறையூர்.

கே: நாம் சிறு குழந்தைகளிடம் அவர்களின் அழுகையை நிறுத்த அநேக பொய்கள் சொல்லவேண்டியிருக்கிறதே. இதனால் நமக்குப் பாவமாகுமா?

ப: கருத்துத் தெரியாத சிறு குழந்தைகளிடம்- அவர்களுடைய நன்மையை உத்தேசித்து, நல்ல நோக்கத்துடன், உண்மையல்லாதவற்றைச் சிற்சில சமயங்களில் கூறுவது தவறாகாது.

எம். இ. முஹம்மது நூருத்தீன், திட்டச்சேரி.

கே: காபிர்கள் யார்? விக்ரஹ ஆராதனை செய்பவர்களா? அல்லது கடவுளையே நிராகரிப்பவர்களா?

ப: இறைவனை நிராகரிப்பவர்களை 'காபிர்'கள் என்று சொல்லப்படும். இறைவனுக்கு இணை வைக்கும் விக்ரஹ ஆராதனை செய்பவர்களை 'முஷ்ரிகீன்' என சொல்லப்படும்.

கே: "மஹ்ஜபீன்" பூர்த்தியானதும் புத்தகமாக வெளியிடுவீர்களா?

ப: ஒரு பிரபல பிரசுராலயம் இந்தப் பணியை ஏற்றுக்கொள்ளவிருக்கிறது.

எம். எஸ். ஏ. வஹ்ஹாப், குருணாகல் (இலங்கை).

கே: கரடிக் கொழுப்பைத் தலையில் தேய்த்தால் முடி அடர்த்தியாய் வளரும் என்கிறார்களே அது உண்மையா? சாப்பிட ஹராமான வஸ்துக்கள் முஸ்லிம்களுக்கு நஜீஸ் ஆக மாட்டாதா?

ப: சாப்பிட விலக்கப்பட்டுள்ள பொருள்களில் சில-அத்தியாவசிய மருந்துகளாக இருக்கும் நிலையில்-மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டுள்ளன.

கரடிக்கு உடம்பெல்லாம் முடி வளர்ந்திருக்கிறது. கரடிக் கொழுப்பைத் தேய்த்தால் அதைப் போன்றே முடி வளரலாம் என்ற நம்பிக்கையில் சிலர் இந்தமாதிரி யோசனையைக் கூறலாம். ஆனால் கரடிக்கொழுப்பைமட்டுமல்ல, எந்தக் கொழுப்பையுமே தலையில் தடவுவதற்கு முன், அது பயன்தரத் தக்கதா என்பதை தீர விசாரித்து முடிவு கட்டுவது அவசியம்.

எம். எம். நூர் முஹம்மது, கொழும்பு-14.

கே: அரசர் ஷாஜஹானின் சொந்தப் பெயர் என்ன?

ப: அவர் சொந்தப் பெயர் ஷிஹாபுத்தீன். இளவரசராக இருக்கும்பொழுது குர்ரம் என்று அழைக்கப்பட்டார். அவர் அரியாசனம் ஏறும் பொழுது அபுல் முஜப்பர் ஷிஹாபுத்தீன் முஹம்மது ஸாஹிபே கிரான் காஜி ஷாஜஹான் பாதுஷா என்ற பட்டத்தை சூட்டிக்கொண்டார். சிம்மாசனம் ஏறும்போது இம்மாதிரி பொருள் செறிந்த பெயர்களைச் சூட்டிக்கொள்வது முகலாயர் மரபு.

எல். ஏ. ஆர். ஷேக் இஸ்மாயில், எம். ஏ. பாஸித், இ. எம். இக்பால் ஈரோடு.

கே: ஏப்ரல் (55) மாத மணிவிளக்கு இதழில் துணைத் தலையங்க மொன்றில், "துருக்கியில் மத மறுமலர்ச்சி" ஏற்பட்டுவருவதாக எழுதியிருந்தீர்கள். அதைத் தக்க மேற்கோள்களுடன் மெய்ப்பிக்க முடியுமா?

ப: இதே இதழில் மற்றொரு பக்கத்தில் ஆரம்பமாகியுள்ள கட்டுரையைப் படித்துப் பாருங்கள்.

எம். அப்துஸ் ஸமத், புதுநகரம்.

கே: துக்கத்தின் அறிகுறியாக கறுப்பு ஆடைகளையோ அல்லது மற்ற அடையாளங்களையோ முஸ்லிம்கள் அணியலாமா?

ப: துக்கத்திற்கு அறிகுறியாக கறுப்புடை தரிப்பது மேல் நாட்டு வழக்கம். அங்குகூட இப்போது கறுப்பு உடை அணிவதற்குப் பதிலாக, கறுப்பு 'டை' கட்டுவதுடன் நிறுத்திக்கொள்கின்றனர்.

இஸ்லாமிய சரித்திரத்திலும் ஒரு காலத்தில் கறுப்பு பிரதான இடம் பெற்றிருந்தது. உமய்யாக்களைப் பழிவாங்கத் திட்டமிட்டு வேலை செய்துவந்த அப்பாஸியாக்கள் கறுப்பு உடையே அணிந்து வந்தார்கள்.

முஸ்லிம்கள் கறுப்பு உடை அணிவது மார்க்கத்திற்கு முரணான ஒன்றல்ல. என்றாலும் துக்கத்தை விளம்பரப்படுத்த ஒரு தனி நிறம் தேவையா?

எஸ். இ. முஹம்மது இக்பால், மதராஸ்-1.

கே: மணிவிளக்கில் 'நபி மணிமொழியும் வழியும்' எழுதி வருபவரான "ஷிப்லீ" என்பவரின் முழுப் பெயர் என்ன? எம். அப்துல் வஹ்ஹாப் எம். ஏ., பி. டி. ஹேச். அவர்களும், மவ்லானா மவ்லவி அப்துல் வஹ்ஹாப் புகாரீ ஸாஹிப் அவர்களும் ஒரே நபரா?

ப: 'ஷிப்லீ' மணிவிளக்குக் குழுவைச் சார்ந்தவர். மவ்லானா, மவ்லவி அப்துல் வஹ்ஹாப் புகாரீ ஸாஹிப் அவர்கள், எம். அப்துல் வஹ்ஹாப் ஸாஹிப் அவர்களின் ஆசிரியர்;ஆவார்கள். 'ஷிப்லீ'யின் ஆசிரியரும் அவரே!

கா. சு. முஹம்மது மீருசா, காயல்பட்டணம்.

கே: தொழும்போது என்னையும் அறியாமல் என் எண்ணம் மாறுபட்டு சிந்தனை சிதறிவிடுகிறது. எவ்வளவோ முயன்றும் இவ்வாறு நேர்வதைத் தடுக்கமுடியவில்லை. இதனால் தொழுகை ஏற்றுக்கொள்ளப்படுமோ என்ற அச்சம் ஏற்படுகிறது. சிந்தையை ஒருநிலைப்படுத்த மார்க்கமென்ன?

ப: 'சிந்தையை அடக்கி சும்மா இருப்பது அரிது' என்று முற்றும் துறந்த முனிவர்களும் கூறியிருக்கிறார்கள்.

பெரிய பெரிய ஞானிகளுக்குக் கூட இம்மாதிரி சிந்தனைச் சிதைவு ஏற்பட்டிருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். எவ்வளவுக்கெவ்வளவு மனத்தை ஒருநிலைப்படுத்தி




தொழுகையில் ஈடுபடுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு ஆத்ம திருப்தியும், வணக்கத்திற்குப் பயனும் ஏற்படும். இம்மாதிரி மனநிலை இலகுவில் ஏற்படக்கூடியதல்ல. இறைவனைப் பற்றிய உள்ளுணர்வோடு முயன்று வந்தால் பயன் கிடைக்கும்.

ஏ. ஏ. ஸலாம், ஹபுகஸ்தலாவ, நாவலபிடிய. (இலங்கை)

கே: காதியானிகள் என்பவர்கள் யார்? அவர்களது உண்மை நோக்கம் என்ன?

ப: கொஞ்ச காலத்திற்கு முன் பஞ்சாபிலுள்ள காதியான்என்னும் ஊரில் வாழ்ந்தமிர்ஸாகுலாம்அஹ்மத் என்பவர் பிற்காலத்தில் வழி கெட்டுப்போய் தம்மை நபி என்றும், மஸீஹ் என்றும் 'தாவா'செய்தார்.

அரபி படித்து சரியான மார்க்க ஞானம் பெறமுடியாமற் போன ஒருசிலர், அவருடைய உர்தூ எழுத்துக்களால் ஈர்க்கப்பட்டு, அவரைப்பின்பற்றலாயினர். அவர்களே காதியானிகள் எனப்படுவோர். ஆனால் இறுதி நபியாகிய முஹம்மது(ஸல்) அவர்களுக்குப் பின் ஒருவர் தம்மை நபி என்று கூறுவதும் அவரைச் சிலர் பின்பற்றுவதும் அப்பழுக்கற்ற வழிகேடே என்பதை மார்க்க அறிஞர்கள் திருக் குர்ஆன் ஆதாரங்களுடன் எடுத்துக்காட்டவும், பலர் நேர்வழி பெற்றார்கள். ஆனால் பழைய பந்த பாசத்தை மறக்கமுடியாது, குலாம் அஹ்மதைக் கொண்டு உலக நன்மைகள் சில வற்றைப் பெற்ற சிலர் "அவர் நபியல்ல; ஆனால் இந்த நூற்றாண்டின் சீர்திருத்தவாதி(முஜத்தித்),,என்று கொண்டாடஆரம்பித்தனர். இவர்களே அஹ்மதிய்யாக்கள் எனப்படும் காதியானிகளிலேயே ஒரு பிரிவினர். அஹ்மதிய்யாக்கள் மிர்ஸாவை முஜத்தித் என்று கொண்டாடினாலும், மிர்ஸா தம்மை ஒரு நபி என்றுதான் தாவா செய்துள்ளார்.

இந்த அஹ்மதிய்யாக்கள் முஜத்தித் என்று கொண்டாடும் மிர்ஸா குலாம், புற வாழ்க்கையில் மகத்தான கேடு விளைவித்ததுமன்றி தனி வாழ்க்கையில் குடிகாரனாகவும், மோசக்காரனாகவும் வாழ்ந்ததாக ஆதாரபூர்வமான சரித்திரம் இருக்கிறது.

மிர்ஸாகுலாமும், அவரைப் பின்பற்றியவர்களும், தெளிவான வழிகேட்டிலேயே இருக்கிறார்கள் என அல்லாமா முஹம்மது இக்பால் அவர்களும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

லாஹூரிலிருந்து வெளிவரும் 'லைட்', லண்டனிலிருந்து வெளிவரும் 'இஸ்லாமிக் ரெவ்யூ' ஆகிய பத்திரிகைகள் இந்த அஹ்மதியர்களால் வெளியிடப்படுபவையே. (இருப்பினும் இவற்றில் சில நல்லறிவாளர்களும் அவ்வப்போது எழுதிவருகிறார்கள்.)

மக்களிடையே உண்மை பரவ ஆரம்பித்ததும் இவர்களும்மிர்ஸாவைப்பற்றி அதிகம் எடுத்துக் கூறுவதில்லை, எனினும், தக்க சந்தர்ப்பத்தில் திருமறை விளக்கத்தில்கூட தங்கள் கொள்கையைத் திணித்துக் குழப்புவதில் இவர்கள் கெட்டிக்காரர்கள்! —முல்லா.

Edited, Printed and Published by A. K. A. Abdus Samad, at Mani Vilakku Press, 114, Angappa Naick St., Madras-1.

